# பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர்






## சொப்பன சுந்தரியின் வதனப் பொலிவை உங்களுக்கு அளிக்கும்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் சீராகப் படிந்து முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்கிறது...முகத்தைப் பளிச்சென்று வைக்கிறது! உங்கள் சரும நிறத்திற்கேற்றபடி தேர்ந்தெடுக்கப் பலவித வண்ணங்களில் கிடைக்கின்றது.

சீஸ்ப்ரோ - பாண்ட்ஸ்
இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

IWT-P-3218

# கல்கி



மக்களைக் கைதூக்கி விடு. ஆனால் அவர்கள் தங்கள் ஆற்றலை இழந்து விடும்படி செய்யாதே. மக்களுக்கு வழிகாட்டு, அறிவூட்டு. ஆனால் அவர்களிடம் ஒன்றைத் தாமாகத் தொடங்கி நடத்தும் திறமை குலையா திருக்குமாறு பார்த்துக் கொள். இதைச் செய்யக் கூடியவனே உண்மையான தலைவன்.

— யோகி அரவிந்தர்

## பொருளடக்கம்

விசுவாவசு மாசி 9 ● பிப்ரவரி 20



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே, சம்பவங்களும் கற்பனையே.


கார்ல் மார்க்ஸின் சோஷலிஸம்


புத்தகப் புழுவே!
அசோக மேத்தாவே!
பரிகாரம் சொல்லு,
பார்ப்போம்!
இந்தியாவில் பயங்கர உணவுப் பஞ்சம்


மண்டலக் கட்டுப் பாடுகள்
நாட்டின் உணவுப் பெருக்கம்
PK

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்





மலர் 25 ❀ இதழ் 30

# பிரதமரின் நல்ல யோசனை

இம்மாதம் ஏழாந் தேதியன்று புதிய பிரதம மந்திரி அந்நிய நிருபர் ஒருவருக்கு அளித்த டெலிவிஷன் பேட்டியை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதவேண்டும். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே சமாதானம் நிலவுவதற்கு உத்தரவாதமாக இவ்விரு நாடுகளிடையே பொருளாதார ஒத்துழைப்பு ஏற்படுவது மிகவும் நல்லது என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் ஜயந்திரீபறக் கூறியிருக்கிறார். நான் சமீப காலமாகக் கூறி வரும் திட்டத்துக்கு இது பெருத்த ஆதரவு என எண்ணுகிறேன். இந்த யோசனை குறித்துப் பாகிஸ்தான் ஜனாதிபதியும் அவரது சகாக்களும் உரிய கவனம் செலுத்துவார்களென நம்புகிறேன். பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே பொருளாதாரக் கூட்டுறவு ஏற்படுத்தும் இந்த ஒரு கருத்தை வெற்றிகரமாக அமுல் செய்தாலே போதும், புதிய பிரதமரின் ஆட்சி சமாதான சரித்திரத்தில் பொன்னெழுத்தால் பொறிக்கப்படும். இது சாத்தியமல்ல என்று பலர் — முக்கியமாக, அதிகாரிகள் — ஸ்ரீமதி இந்திராவிடம் கூறுவார்கள். இதைக் கொண்டு அவர் தமது மகத்தான இலட்சியத்திலிருந்து வழுவிவிடக் கூடாது.

நட்பையும் நல்லெண்ணத்தையும் வெறும் சூனியத்தில் உண்டாக்கிவிட முடியாது. பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து நாம் விடுதலை பெற்றதைவிட இந்தியா — பாகிஸ்தான் ஒத்துழைப்பு முக்கியமானதாகும். இப்படிப்பட்ட முக்கியமான காரியங்களை எளிதில் சாதித்துவிட முடியாது. சிரம சாத்தியமெனத் தோன்றும் வழியைப் பின்பற்றினாலே பெரிய இலட்சியங்களை எய்த முடியும். இந்திய சுதந்திரத்துக்காக காந்திஜி ஒத்துழையாமை இயக்கம் தொடங்கிய போது அது காரிய சாத்தியமே அல்ல என்றுதான் தோன்றியது. ஆயினும் நடைமுறையில் அதுவே நம்மை வெற்றிக்கு இட்டுச் சென்றது. இதே போல் பாகிஸ்தானுடன் ஒரு நட்புத் திட்டத்தில் நாம் மனப்பூர்வமாக ஈடுபட்டால் சிரமங்களையெல்லாம் கடக்க முடியும். சிரமங்கள் ஏற்படத்தான் செய்யும். நாம் அவற்றை மீறிச் செயலாற்ற வேண்டும்.

லால்பகதூர் அவர்கள் உயிரோடிருந்தால் என் திட்டத்தை நிச்சயமாக வரவேற்றிருப்பார் என உண்மையாக நம்புகிறேன். பொறுப்புள்ள பெரியோர்களும், தகுதி வாய்ந்த பொருளாதார நிபுணர் குழுவும் இந்த யோசனையைப் பரிசீலித்து அமுலாக்க வழி காண்பார்களாக! வெற்றி பெற்றோமாயின் நாம் தார்மிக ரீதியிலும் சக்தியிலும் அந்தஸ்திலும் ஆசியாவுக்குள்ளேயே உன்னத இடம் பெறுவோம். அதோடு, இதுவரை கண்டிராத அளவில் மேல் நாட்டினரின் ஒத்துழைப்பையும் பெறுவோம். இந்தச் சீரிய பெரும் நோக்கத்துக்காக எந்த சிரமத்தையும் பொருட்படுத்தாது முழு முயற்சியும் எடுத்தாக வேண்டும். அவசரப்பட்டு 'இது சாத்தியமல்ல' என்று தூக்கி எறிந்துவிடலாகாது.

ஜயபுரி காங்கிரஸில் தாஷ்கெண்ட் ஒப்பந்தத்தை வரவேற்கும் தீர்மானம் சம்பிரதாய மொழியிலேயே உள்ளது. வேறுபாடுகளை ராணுவ சக்தியால் தீர்த்துக்கொள்ளக் கூடாது என்றும், நட்பு ஏற்பட வேண்டும் என்றும் கூறப்பட்டிருப்பது சரியே. ஆனால் இதோடு நிறுத்திக் கொள்வது போதாது என்றே தோன்றுகிறது. பிரதமர் கூறியது போல் பொருளாதார ஒத்துழைப்புக்கு வழி காண்பது பற்றியும் தீர்மானத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தால் இன்னும் சிலாக்கியமாக இருந்திருக்கும். பாகிஸ்தான் அதிபருக்கு நன்றி கூறி ஒரு வார்த்தை சேர்த்திருந்தாலும் அழகாயிருந்திருக்கும். அவரும் எவ்வளவோ எதிர்ப்புக்களிடையேதான் நமது லால் பகதூர் அவர்களைப் போல் இவ்வொப்பந்தத்துக்கு இணங்கினார். இது போன்ற சிறிய விஷயங்கள்தான் நாம் விரும்பும் மகத்தான நட்புக்கு மிகவும் உதவி புரியும்.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

# என்ன சேதி?

- மதுரை மாணவர்கள்
- தாஷ்கண்ட் ஒப்பந்த நாள்
- வரி எதிர்ப்பு தினம்

மதுரையிலிருந்து பின்வரும் ருசிகரமான செய்தி வந்துள்ளது:

"தனக்கென்று ஒரு தனிப் பண்பாட்டைக் கொண்டிருந்த தமிழ்நாடு இன்று முழுக்க முழுக்க மேல்நாட்டு நாகரிகத்தில் மூழ்கிவிட்டது. தரக் குறைவான சினிமா சுவரொட்டிகள் நகர் எங்கும் காணப்படுகின்றன. இந்தியப் பண்பாட்டுக்குக் கேடு செய்வனவற்றைத் தடுத்து நிறுத்த பண்பாட்டுச் சீரமைப்புக் கழகம் ஒன்று மதுரையில் இம் மாதம் 5ம் தேதி மாணவர்களால் அமைக்கப்பட்டுள்ளது.

"இந்தியப் பண்பாட்டை மறந்துவிட்டு மேல்நாட்டுப் பாணியில் தரக் குறைவான படங்களை வெளியிட்டு வரும் தமிழ் சினிமா உலகின் போக்கைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது."

(தினமணி—சென்னை — 10-2-66)

ஆபாசச் சுவரொட்டிகளாலும், ஆபாச த்வனி கொண்ட பாடல்களாலும் ஆபாசக் காட்சிகள் கொண்ட திரைப்படங்களாலும் மனம் பேதலித்துக் கெட்டுப் போகக்கூடிய சந்தர்ப்பங்கள் மாணவ சமுதாயத்தினருக்குத்தான் அதிகமாக உள்ளன. ஆகவே அவர்கள் இப்படி வீறுகொண்டு எழுந்துள்ளது ஒரு நல்ல சுபசூசகம். மதுரை மாணவர்களைப் பாராட்டுகிறோம். அவர்களைப் பின்பற்றி ஊருக்கு ஊர் சங்கங்கள் அமைத்துத் தீர்மானங்கள் நிறைவேற்றித் திரைப்பட அதிபர்களுக்கு அனுப்பினால், திரையுலகம் சீர்திருந்தும். ஏனெனில் திரையுலக அதிபர்கள், மக்கள் கேட்பதைத்தான் வழங்குகிறோம் என்று சொல்லுகிறார்கள்.

ஃ ஃ ஃ

ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணர் அவர்கள் கேட்டுக் கொண்டபடி, தாஷ்கண்ட் ஒப்பந்தத்தை ஆதரிக்கும் நாளாக சென்னை ஒய்.எம்.ஐ.ஏ.யின் ஆதரவில் கோகலே மண்டபத்தில் சென்ற 11–ந் தேதி ஸ்ரீ டி. வி. விசுவநாதய்யர் தலைமையில் ஒரு சர்வ கட்சிக் கூட்டம் நடைபெற்றது. திரு ம. பொ. சி., திரு மோகன் குமாரமங்கலம், ஸ்ரீ சித்ரா நாராயணசாமி சென்னையில் இருக்கும் ருஷ்ய வைஸ் கான்ஸல் முதலிய பலர் பங்கெடுத்துக் கொண்டு சிறப்பித்தார்கள். திரு ம.பொ.சி. அவர்கள் தமது உரையில், 'சண்டை செய்பவன் மட்டும் வீரன் அல்ல; சண்டையில் வெற்றி கண்டு சமாதானத்துக்கும் வந்த விடத்து அந்தச் சமாதானத்தைப் பேணி வளர்ப்பவன் அவனிலும் சிறந்த மாவீரன். லால்பஹாதூர் அவர்கள் சண்டையிலும் வெற்றி கண்டார்; சமாதானத்திலும் வெற்றி கண்டார். அவர் உண்டாக்கிய இந்த ஒப்பந்தத்தை ஒவ்வொருவரும் நிறைவேற்றி வைக்க உறுதி பூணுவதுதான் அவர் செய்த மகத்தான உயிர்த் தியாகத்துக்கு நாம் ஆற்றும் நன்றியும் கடமையுமாகும்' என்றார்.

திரு மோகன் குமாரமங்கலம், 'நம் நாட்டுப் பிரதேசத்தையோ, தன்மானத்தையோ துறக்காமல் ஒரு கௌரவமான ஒப்பந்தத்தைச் செய்துகொண்டார் லால்பஹாதூர் அவர்கள். இதுதான் உண்மையான ராஜதந்திரத்தின் லட்சணம்' என்று குறிப்பிட்டுப்பாராட்டினார்.

கடைசியாகப் பேசிய ராஜாஜி அவர்கள், 'தாஷ்கண்ட் சந்திப்பினால் உண்டான பலன்களில் போர் நிறுத்தம் முதலிய எல்லா அம்சங்களையும் விட முக்கியமானது இரு நாட்டுத் தலைவர்களும் மனம் மாறி, நண்பர்களானதுதான். இரு நாட்டுத் தலைவர்களும் உலகில் அமெரிக்கா, பிரிட்டன், ஸ்பெயின் ஆகிய எந்த நாட்டிலும் கூடிப் பேசியிருக்கலாம். ஆனால் எங்கு பேசியிருந்தாலும் இந்த நல்ல முடிவு ஏற்பட்டிராது. ருஷ்யாவில் கூடியதால்தான் இந்த வெற்றி கிடைத்துள்ளது. இந்த வெற்றிக்குப் பெரிதும் துணை புரிந்த ருஷ்யப் பிரதமர் கோஸிஜினுக்கு நோபல் பரிசை வழங்கலாம்' என்று கூறினார்.

தாஷ்கண்ட் ஒப்பந்தத்தை யொட்டிப் பல நல்ல காரியங்கள் நடைபெற்று வருகின்றன. நாகா கலகக்காரர்களுக்குக் கிழக்குப் பாகிஸ்தான், உள்ளே நுழைய இப்போது அனுமதி மறுத்துவிட்டது. இந்தச் செய்தியையும் ராஜாஜி அன்றையக் கூட்டத்தில் வாசித்துக் காண்பித்தார்.

ஃ ஃ ஃ

வருகிற ஞாயிற்றுக் கிழமை 20–2–66 அன்று "வரி உயர்வு எதிர்ப்பு நாளாக"க் கொண்டாடும்படி சுதந்திரக் கட்சி தனது கிளைகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. இம் மாத இறுதியில் மத்திய சர்க்கார் பட்ஜெட் சமர்ப்பிக்க இருக்கிறது. நாட்டின் பொருளாதார நிலையைப் பார்க்கும்போது, இன்னும் என்னவெல்லாம் வரிகள் வருமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. எனவே, பொது மக்கள் அனைவரும் கூடி, தங்கள் எதிர்ப்பை ஒருமுகமாகத் தெரிவிக்க வேண்டும்.

நேர்முகமாக விதிக்கும் வரிகளைவிட மறைமுக வரிகளே மக்களை ரொம்பவும் கொடுமைப் படுத்துகின்றன. மண்ணெண்ணெய், புகையிலை, சர்க்கரை, பாக்கு, துணி முதலியவற்றின் மீது ஏராளமாக வரிகள் விதிக்கப்பட்டு விலைகள் உயர்கின்றன. மக்கள் விலைவாசிகள் உயர்ந்துவிட்டன என்று அலறுகின்றனர். இதற்கெல்லாம் காரணம் சர்க்காரின் கொள்கைகளும் வரித் திட்டங்களும்தான். இதனைப் பொதுமக்கள் நன்கு உணர்ந்து கொள்ளச் செய்வதே வரி எதிர்ப்பு நாள் கொண்டாடுவதன் நோக்கமாகும்.

★

சர்க்கார் பத்திரங்களுக்காகத் தங்கம் வசூலித்ததிலும், பாதுகாப்பு நிதிக்குப் பணம் வசூலித்ததிலும் பலவந்தம் எதுவு மில்லை என்று தமிழக முதன்மந்திரி கூறியது பற்றி ஆச்சரியம்தான் தெரிவிக்க வேண்டும். ஒருவரைக் கட்டி வைத்துச் சவுக்கால் அடித்துப் பணம் பிடுங்கினால்தான் பலவந் தம் என்று அர்த்தமல்ல. பலவந்தத்தில் பல விதம் உண்டு. இப்போதுள்ள மிகவும் சிக்கலான நிர்வாக அமைப்பிலும் அரசாங் கக் கட்டுப்பாடுகளிலும் பலவிதமான பலவந் தங்கள் உள்ளன. பிரிட்டிஷ் ஆட்சியில்கூட இந்தியா இப்படிப் பலவந்தத்துக்குப் பயப் படவில்லை. நேர்முகமாக இல்லா விடினும் மறைமுகமாகவேனும் ஓரளவு மக்களின் ஒப்பு தலைப் பெற்றே பிரிட்டன் ஆட்சி நடத்தியது. ஆனால் காங்கிரஸோ பலவந்தத்தால் ஒப்புதலை வாங்கிக் கொண்டு ஆட்சி புரிகிறது.

சுதந்திரப் போரில் முன்னணி வகித்த வங்காள காங்கிரஸ் விழித்துக் கொண்டு பேசியிருப்பதற்கு என் பாராட்டுதலைத் தெரி விக்கிறேன். வங்காள ராஜ்யத்தின் பல பகுதி களைச் சேர்ந்த 2000 காங்கிரஸ் பிரதிநிதிகள் கொண்ட ஒரு மகாநாடு கல்கத்தாவில் நடந் தது. அதில் பேசிய ஸ்ரீ அஜாய்முகர்ஜி, 'காங்கிரஸ் ஸ்தாபனம் பெரிய முதலாளி களையே நம்பி வாழ்கிறது. பொருத்தமான வேறு எதிர்க்கட்சி அபேட்சகர்கள் இல்லாத குறையால்தான் மக்கள் காங்கிரஸைத் தேர்ந்தெடுத்தனர். நேர்மையான மனம் படைத்த எந்தக் காங்கிரஸ்காரர்தான் நிகழ் கால உண்மையை இன்னமும் சகித்துக் கொள்ள முடியும்? இன்றும் காங்கிரஸில் நேர்மையான சத்தியமுள்ள தொண்டர்கள் சிலர் இருக்கின்றனர். ஆயினும் சர்வாதி காரிகளின் வெறுப்புக்குப் பாத்திரமாகி விடுவோமே என்ற பயத்தில் அவர்கள் மௌனமாக இருக்கிறார்கள். உண்மையான காங்கிரஸ்காரர்கள் இந்தப் பயத்தை உதறித் தள்ள வேண்டும். ஸ்தாபனத்தைச் சரியான தடத்தில் நடத்திச் செல்வதற்கு அவர்கள் பகிரங்கமாகப் போர் புரிய வேண்டும்' என்றெல்லாம் கூறினார்.

கட்சிக்குள்ளேயே இருந்து கொண்டு அதைச் சீர்திருத்துவது சாத்தியமேயில்லை. டில்லியில் சமீபத்தில் இதற்கு நன்றாக நிரூபணம் கண்டு விட்டோம். எனவே ஸ்ரீ முகர்ஜி கூறும் 'உண்மையான காங்கிரஸ் காரர்கள்' கட்சியிலிருந்து வெளியே வந்து அடுத்து வரும் தேர்தலில் பெர்மிட்—லைசென்ஸ் முறையையும், இதனை அமுல் செய் யும் சர்க்காரையும் தோல்வியுறச் செய்வது தான் வழி. நேர்மைக்கும் சுபிட்சத்துக்கும் அப்போதுதான் நாட்டில் இடம் கிடைக்கும்.

★

மத்திய உணவு மந்திரியைப் பொறுத்த மட்டில் சர்க்கார் கட்டுப்பாடுகளை அவர் ஆதரிப்பதற்குக் காரணம் அதிகாரப் பசி அல்ல என்பதை நான் அறிவேன். நிலைமை யைச் சரியாகச் சீர்தூக்கிப் பார்க்க அவர் தவறுவதாலேயே உணவுத் துறையில் பல விதத் தடைகளையும் கட்டுப்பாடுகளையும் ஆதரிக்கிறார்.

காங்கிரஸ் அக்கிராசனரோ சர்க்காரே எல்லாத் தானியங்களின் வியாபாரத்தை யும் ஏகபோக்கிய அடிப்படையில் நடத்தி விடலாமென நினைக்கிறார். இந்தத் 'துக்ளக்' சிந்தனை பயங்கரமான ஊழலுக்கும் மகத் தான நஷ்டத்துக்கும்தான் வழி வகுக்கும். தேசத்தின் ஏராளமான வியாபார சமூகத் தினரிடம் ஒரு மொத்தமாக நம்பிக்கை வைக்க மறுப்பது மனோ வியாதியாகவே தோன்று கிறது. இந்த வியாதி பிடிக்காத ஓர் அரசாங் கத்தை நாம் அமைக்க முயல வேண்டும்.

நாட்டின் ஒரு பகுதியில் அரிசி சரளமாக விற்பனையாகும்போது இன்னொரு பகுதியில் மக்கள் அதே அரிசிக்காகப் பலாத்காரங் களில் இறங்க வேண்டிய சூழ்நிலையை ஏற் படுத்தியிருப்பது பெரும் குற்றம். உபரியாக உற்பத்தியாகும் இடங்களில் பெருவாரி வோட் பெறுவதற்காக, பற்றாக்குறைப் பகுதி களில் அமைதியின்மையையும், குழப்பமும் விளைவிப்பது அறிவுடைமையா? இந்தியா வின் எல்லாப் பகுதிகளின் வோட்டுப் பலத் தையும் சார்ந்ததே ஆளும் கட்சியின் எதிர்




கால வாழ்வு. ராஜ்ய சர்க்கார்கள் குறுகிய திருஷ்டியால் பிரதேச நலனை மட்டும் கவ னிப்பது தேசத்துக்கு மட்டுமின்றி ஆள்கிற கட்சிக்கும் அபாயமாக முடியும்.

★

காங்கிரஸ் ஜமீன்தார்களுக்கும் சர்க்கார் சிப்பந்திகளுக்குமிடையே விரும்பத் தகாத சட்ட விரோதமான தொடர்பு பெருகிக் கொண்டே வருவதை ஒருபுறத்தில் காண் கிறோம். மறுபுறத்திலோ எதிர்க் கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதிகளுடன் சர்க்கார் சிப்பந்திகள் இலக்கிய அடிப்படையிலும், சமூக வாழ்வின் அடிப்படையிலும் கொள்ளும் தொடர்புகளைக் கூடச் சந்தேகக் கண்ணுடன் அரசாங்கம் பார்ப்பதாக நான் அநுமானிக்க வேண்டியிருக்கிறது. இவ்விஷயமாக நான் ஐயம் கொண்டிருப்பதற்குப் போதிய காரண முண்டு. சர்க்கார் உத்தியோகம் வகிக்கும் சில ரிடம் எனக்கு நட்பு உண்டு. அவர்களுக்கு என் னுடைய பழைய நாள் அரசியலிலும் சரி, இன்றைய அரசியலிலும் சரி, எவ்வித சம் பந்தமும் கிடையாது. எனினும் என்னிடம் அன்பு வைத்திருப்பதால் அவர்கள் கஷ்டத் துக்கு ஆளாகிறார்கள் என்று நான் அஞ்சு கிறேன். இது அரசியல் முன்னேற்றமோ,

நாகரிகமோ அல்ல; இந்த நிலை காட்டுமிராண்டித்தனமாகும். இது அவிவேகம் மட்டுமின்றி அநீதியுமாகும். மெஜாரிட்டி பலம் பெற்ற கட்சிதான் தேசம் என்றோ, எதிர்க் கட்சிகள் தேசத் துரோகம் செய்பவை என்றோ நினைத்து விடக் கூடாது. சாஸனப்படி பிரஜைகள் பெற்றுள்ள சுதந்திரத்துக்கு விரோதமாகச் சர்க்கார் சிப்பந்திகளின் சமூக—இலக்கியத் தொடர்புகளுக்கு ஊறு விளைவிக்கலாகாது. மேலும் இது ஆள்கிற கட்சியும் அரசாங்கமும் ஒன்றே என்ற பிரமைக்கு மற்றோர் அடையாளமுமாகும். அமெரிக்காவில் இவ்விதம் நடைபெற்றால் பெருத்த எதிர்ப்பு எழும். இந்தியாவிலோ இத்தகைய விஷயங்கள் சர்வ சகஜமாகிவிட்டன.

உண்மையில் எதிர்க் கட்சித் தலைவர்களிடம் சர்க்கார் அதிகாரிகள் நட்பு வைத்திருப்பதைவிட, ஆளும்கட்சி எஜமானர்களிடம் அவர்கள் நெருங்கிய தொடர்பு கொள்வதுதான் நிருவாகத்துக்கு ஆபத்து உண்டாக்கும். அரசியல் செல்வாக்கை ஒருவர் சுயநலனுக்குப் பயன்படுத்திக் கொள்வதை மட்டும் தடுக்க வேண்டுமே ஒழிய, சர்க்கார் கட்டுப்பாட்டுக்கு உட்படாத சமூகத்தொடர்புகளை அநுபவிப்பதற்கு உத்தியோகஸ்தர்கள் பெற்றுள்ள சுதந்திர உரிமையைத் தடை செய்யக் கூடாது.

★

ரஸாயன உரம் கிடைக்காததே உணவு உற்பத்திக்கு ஊறு விளைவித்து விட்டதாக நிறையப் பேச்சு அடிபடுகிறது. இயற்கைக் கழிவுப் பொருட்களும், தழைகளும் சரியானபடி காக்கப்பட்டால் நிறைய நல்ல உரம் பெறுவோம். ஆனால் உற்பத்தியாளருக்கு அளிக்கப்படும் ஊக்கமே இதைவிடச் சிறந்த உரம் ஆகும். தான் நல்ல மகசூல் பெற முடியும், தனது உபரி உற்பத்தியைத் தடையின்றி எடுத்துச் சென்று விற்கலாம் என்ற உறுதியை விவசாயிக்குத் தருவதே மிகச் சிறந்த உரம்.

நீண்ட காலமாக விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் இன்று தடைகள் இருப்பதையும் சமாளித்துக் கொண்டு நாட்டுக்கு மிகவும் முக்கியமான உணவு உற்பத்தியைத் தொடர்ந்து வருகிறார்கள். இவர்களை அரசாங்கம் குற்றவாளிகளுக்குச் சமமாகக் கருதுகிறது. திருட்டுச் சொத்துக்களை விற்பவர்களை எப்படிக் கண்காணிக்கிறார்களோ, அப்படியே விவசாயி தனது உற்பத்தியை விற்பனை செய்வதையும் கண்காணிக்கிறார்கள்.

''நாட்டுக்குத் தேவைப்படும் உணவை உற்பத்தி செய்வோருக்கு நாம் வரி போடக் கூடாது; மாறாக அவர்களுக்கு நாம் நன்றியைத் தெரிவிக்க வேண்டும்'' என்று காந்திஜி ஒரு முறை என்னிடம் கூறியது என் மனத்தில் ஆழப் பதிந்திருக்கிறது. அதை அடிக்கடி நினைத்துப் பார்க்கிறேன். நில உரிமையைக் காட்டுவதற்காக விவசாயி ஒரு சிறிய தொகையை ரிஜிஸ்தர் கட்டணமாகச் செலுத்தினால் போதும் என்று அவர் கருதினார். ஆனால் காந்திஜி சொன்னதை இன்று யார் பொருட்படுத்துகிறார்கள்? அவர் பெயரையும் பிம்பத்தையும் வைத்துக்கொண்டு சுயலாபம் பெற வேண்டும்; ஆனால் அவர் சொன்னதற்கு நேர்மாறாகவே நடக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். கிராமங்களில் புகுந்து சூறையாடிய கொள்ளைக்காரர்கள் கூடத் தங்களுக்கு ஒரு கடவுளை வைத்துக் கொண்டு வெற்றிக்காக வழிபாடு நடத்தியதாக நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்த வழக்கம் வேறு ரூபங்களில் இன்னமும் உயிர் வாழ்வதாகத் தோன்றுகிறது.

★

மத்திய உணவு மந்திரி ராஜிநாமா செய்ய விரும்பினாராயின், அடிக்கடி 'ராஜிநாமா செய்வேன்' என்று பயமுறுத்திக் கொண்டிராமல் உண்மையிலேயே ராஜிநாமாச் செய்துவிடலாம் என்று காங்கிரஸ் அக்ராசனர் கூறியதாகப் பத்திரிகைச் செய்தி கூறுகிறது. நண்பர் என்ற முறையில் இந்த யோசனை தெரிவிக்கப்பட்டிருந்தால் மிக நல்ல யோசனை என்றே சொல்லலாம். ஆனால் சந்தர்ப்பத்தையும், சொல்லப்பட்ட விதத்தையும் பார்க்கும்போது இது பிரதமருக்கும் மேம்பட்ட ஒருவரின் எதிர்த் தாக்குதலாகவே தோன்றுகிறது. இவ்வளவு அதிகாரத்தை அவர் எடுத்துக்கொள்வது யுக்தமுமல்ல; சட்டப்படி நியாயமுமல்ல. சர்க்கார் — ஆள்கிற கட்சி இவற்றிடையே உள்ள வித்தியாசம் எவ்வளவு வேகமாக அழிந்து வருகிறது என்பதையும், இந்தப் போக்கில் பிரதமர் பதவியின் அந்தஸ்தும் அதன் முக்கியத்துவமும் எவ்விதம் குறைந்து வருகிறது என்பதையும் கவனித்தால் வியப்பாக இருக்கிறது!



சக்திக்கும், வலிமைக்கும்!
கோகோ
சர்க்கரை
மால்ட்
பால்
காட்பரீஸ் போர்ன்-விடா




Bournvita
THE IDEAL FOOD DRINK FOR STRENGTH AND VIGOUR
ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப்
போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும்,
சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை
வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க
அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலப
மாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க
வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா?
போர்ன்விடா அருந்துங்கள்.




# தரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

# லிப்டன்ஸ்

## ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சிக்கனத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப்பெருமை வாய்ந்தது, தன்னிகரற்றது என்பது உண்மை.




லிப்டன் என்றாலே நல்ல டீ

LHCC-1 TAM



1. அமரர் சாஸ்திரியின் அஸ்தியை அவரது புதல்வர் திரு ஹரிகிஷன் அலகாபாத்தில் திரிவேணி சங்கமத்தில் கரைக்கிறார்.

2. சென்னை நக்கீரர் கழகத்தின் வெள்ளி விழாவும் தமிழ்த் திருநாளும் சென்னை மவுண்ட் ரோட், பாலர் அரங்கில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன.

3. புதிய பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியை அமெரிக்கத் தூதர் செஸ்டர் பௌல்ஸ் சந்தித்து அமெரிக்க ஜனாதிபதியின் அழைப்புக் கடிதத்தைக் கொடுக்கிறார்.

4. மாயூரம் முனிசிபல் ஹைஸ்கூல் திறந்த வெளி அரங்கில் பிராணிகள் வதைத் தடுப்புச் சங்கத்தின் கூட்டத்தில் ஸ்ரீமதி ருக்மிணி தேவி சிறப்பு உரையாற்றுகிறார்.







"அந்த நாட்களில் அரசசபைகளில் விதூஷகர்கள் இருந்தார்கள். தமாஷாகப் பேசிப் பொழுது போக்குவது மாத்திரம் அவர்கள் பணியில்லை. மற்றவர்கள் அரசர்களிடம் சொல்லத் தயங்கும் கனமானவிஷயங்களேயோ




சிக்கலான சம்பவங்களேயோ, நாசூக்காக, நகைச்சுவையுடன் அவர்களிடம் எடுத்துரைத்துக் கவனத்தைக் கவருவது தான் அவர்களுடைய முக்கியமான அலுவல். இதனுலேயே மற்ற மந்திரி பிரதானிகளைவிட ஆஸ்தான விதூஷகனுக்கு மதிப்பு அதிகம்.

"இது ஜனநாயக யுகம். எல்லோரும் இந்த நாட்டு மன்னர்கள். மக்களே மகாராஜாக்கள். இந்த மகாராஜாக்களுக்கும் பல விஷயங்களை மென்மையாகவும் நாசூக்காகவும் எடுத்துச் சொல்ல விதூஷகர்கள் தேவைப்படுகிருர்கள். மக்கள் தொகைக்குச் சமமான விதூஷகர்களுக்கு எங்கே போவது? அதனுல்தான் அவர்களுடைய பணியை இன்றைய சினிமாக்கள் செய்கின்றன" என்று ஆரம்பித்தார் திரைப்பட டைரக்டர் திரு கே. எஸ். கோபாலகிருஷ்ணன். பேட்டி களை கட்டியது!

"பொழுது போக்கு ஒன்றுதான் சினிமாவின் குறிக்கோளென்று நீங்கள் நம்புகிறீர்களா?"

"இல்லை! அதற்காகத்தான் நான்விதூஷகனைப் பற்றிச் சொன்னேன். திரைப் படங்கள் பார்ப்பவர்களின் பொழுது உபயோகமாகப் போக வேண்டும் என்று விரும்புகிறவன் நான். அதாவது படத்தைப் பார்த்துவிட்டுப் போகிறவர்கள் உள்ளங்கள் நிறைவு பெற்றிருக்க வேண்டும். ஒரு நல்ல கருத்து உருவாக வேண்டும். இதற்கு வகை செய்யும் படங்கள் சமூக வளர்ச்சிக்குத் தொண்டு செய்கின்றன. நல்ல புத்தகங்களினுல் இதயத்தை மாத்திரம்தான் தொட முடியும். சத் காலட்சேபங்கள் செவிகளின் உதவியுடன் இதயத்தில் இடம் பெறலாம். இந்த இரண்டிலுமே நிலைக்களன்களையும் சூழ்நிலைகளையும் கற்பனைசெய்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் படிப்பவர்களுக்கோ கேட்பவர்களுக்கோ ஏற்படுகிறது. ஆனுல் சினிமாவிலோ பார்த்துக் கேட்டுச் சிந்திக்க வகை இருக்கிறது. படம் பார்ப்பவர்கள் உள்ளங்களில் சிரமமில்லாமல் அப்படியே பதிந்துவிடக் கூடிய சாதனம் சினிமா. அதனுல்தான் அவை பயனுள்ளவைகளாக இருக்க வேண்டும். லட்சக்கணக்கில் இத் தொழிலில் முதலீடு செய்பவர்கள் பணலாபத்துடன் கொஞ்சம் பயன் லாபத்தையும் எதிர்பார்ப்பதில் தவறு இல்லை அல்லவா?" என்ருர்.

"பயனுள்ள படங்கள் பண வசூல் விஷயத்தில் பலனளிக்காமல் போகின்றன என்ற அபிப்பிராயம் சரியா?"

"பொதுப்படையாக அப்படிச் சொல்லிவிட முடியாது. திரைப்படக் கதையின் கருத்துக்கள் சில சந்தர்ப்பங்களில் பார்ப்பவர்கள் மனத்தில் சரியாகப் பதியாமல் இருக்கலாம். அப்படியே பதிந்தாலும் அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல் இருந்து விடலாம். கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து எடுக்கும் சில படங்களுக்கு இந்த நிலை ஏற்படலாம். என்னுடைய சொந்த உதாரணத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன். 'என்னதான் முடிவு'க் கதையின் கருக்கத்தைப் பார்த்தபோது மன்னிக்கும் மனப்பான்மையுள்ள அந்தக் கருத்து எனக்குப் பிடித்து விட்டது. படத்தைத் தயாரித்து வெளியிட்டேன். வெளியூர்க் கொட்டகை ஒன்றில் படத்தின் முதல் நாளன்று நானும் ரசிகர்களில் ஒருவனுக அமர்ந்து படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். படத்தின் கடைசியில் முக்கியமான கட்டம். ராஜனும் பாலையாவும் சந்திக்கும் இடம். 'குத்துடா! உதையடா!' என்ற ரசிகர்கள் ஆரவாரம் ராஜன் சார்பில் தியேட்டரில் எழுந்தது. அந்தக் கணத்திலேயே என் ஆர்வம், உற்சாகம் எல்லாம் எங்கோ பதுங்கி ஒளிந்துகொண்டு விட்டது. படம் பணம் பண்ணுது என்று அங்கேயே அப்போதே முடிவு செய்துவிட்டேன். காரணம் கதையின் முக்கியமான அந்த மன்னிக்கும் மனப்பான்மையை ரசிகர்கள் ஏற்கவில்லை. படம் வெகு சிறந்த படம் என்ற பாராட்டை அமோகமாகப் பெற்றது உண்மை. ஆனுல் பண விஷயத்தில் அநுதாபத்தைத்தான் பெற்றது. நான் நினைத்தது சரியாகப் போயிற்று."

"இந்த அடிப்படையில் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளவேண்டும் என்று நினைக்கிறீர்களா?"

''இல்லை. கருத்துக்களை வழங்கும் முறையில் மேலும் நல்லபடியாக ஏதாவது செய்ய முடியுமா என்று யோசிப்பேன். காரணம், பொதுமக்கள் பரவலாக, அன்றாடப் பிரச்னைகளையும் அழகு உருவங்களையும்தான் திரையில் காண விரும்புகிறார்கள். இதற்கு என்ன கொடுக்கலாம் என்று ஒரு டைரக்டர் சிந்திப்பதை விட எடுத்துக் கொண்ட விஷயத்தை எப்படிக் கொடுக்கலாம் என்று ஆராய்ந்து பார்ப்பது உபயோகமாக இருக்கும். இதன் மூலமாகத்தான் பொதுமக்களின் மனோதத்துவத்தை ஓரளவு புரிந்து கொண்டு செயலாற்ற முடியும். 'என்னதான் முடிவு'க்குப் பிறகு வந்த என்னுடைய 'சித்தி' படத்தில் இந்த முறைகளைச் சற்று வெற்றியுடனேயே கையாண்டிருக்கிறேன். ஆனால் இந்தப் படம் தணிக்கையாகி முடிந்தவுடன் என்னுடைய ஆப்த நண்பர் ஒருவர் என்ன சொன்னார் தெரியுமா? ''கோபாலகிருஷ்ணன்! 'என்னதான் முடிவை' எடுத்த நீங்களா இந்தப் படத்தையும் எடுத்திருக்கிறீர்கள்?'' என்று அந்த 'உம்'மில் ஓர் அழுத்தத்தை வைத்தார். லட்சியம் நிறைந்த நண்பர் அவர். ஆனால் நான் ரசிகர்களின் மனப் பக்குவத்தையும் முதலீடு செய்த பணத்தின் எதிர்காலத்தையும் நினைவில் வைத்துக் கொண்டாக வேண்டுமல்லவா? இதனால் தான் இந்தப் படத்தில் பழிக்குப் பழியாக வி. கே. ராமசாமி, ராதாவை விரட்டுகிறார். ரசிகர்களுக்கு ஒரே உற்சாகம். படத்துக்கு வசூலும் உற்சாகமாக இருக்கிறது. 'சித்தி' பிரச்னை உலகத்தில் பொதுவான தொன்று. பெண்களுக்கு மிகவும் பிடித்த சப்ஜெக்ட். 'கற்பகம்', 'சாரதா' வரிசையில் சேர்ந்தது!''

''ரசிகர்கள் எதிர்பார்ப்பதைக் கொடுக்க முடியும் என்ற மனோ திடம் உங்களிடம் இருக்கிறதா?''

''ரசிகர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்பதை உத்தேசமாக அனுமானித்து அதைக் கொடுப்பது அவ்வளவு சிரமமான விஷயமில்லை. அவர்கள் எதிர்பார்ப்பதற்கு ஒரு படி மேலாகவே போய் அவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் அதிகமாகவே கொடுக்கும்போதுதான் ஒரு டைரக்டரின் திறமை வெளியாகும். அபிப்பிராய பேதங்கள், விமரிசனங்கள் முதலியவற்றை யெல்லாம் ஓரளவு முன்கூட்டியே கற்பனை செய்து பார்த்து அவைகளுக்கு ஈடு செய்யும் அளவுக்குத் திட்டமிட்டுப் படத்தைத் தயாரிக்க வேண்டும். 'கற்பகம்' படத்தில் கடைசிக் காட்சி. உயிருடன் போராடிக்கொண்டிருந்த கதாநாயகி ஏதோ வேகத்தால் உந்தப்பட்டு எழுந்திருப்பதாகப் படத்தை முடித்தேன். அதைக் கண்ட என்னுடைய ஆப்த நண்பர்கள் திடுக்கிட்டார்கள். அந்த முடிவு முழுப் படத்தையுமே குட்டிச் சுவராக்கி விடும் என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்கள். 'உடனே வெட்டி எறி' என்று உபதேசம் செய்தார்கள். ஆனால் இந்தத் துறையில் நிறைய நிறையப் படம் எடுத்து அனுபவப்பட்ட



ஒரு பெரியவர் மாத்திரம் 'கோபாலகிருஷ்ணன்! படம் முடிஞ்சு ஜனங்கள் எழுந்திருக்கிறபோது அவர்கள் மனத்தில் ஒரு நிறைவு இருக்கணும். பிரச்னையாகவே தங்கவிடக் கூடாது! நீங்க எடுத்தபடியே படம் ஓடட்டும்' என்றார். அப்படியே படமும் ஓடியது. பொது மக்களுக்குத் திருப்தி. அதனால் பணம் முதலீடு செய்தவர்களுக்கும் திருப்தி. ஆனால் இந்தத் திருப்தி ஹிந்தி 'கற்பக'த்தில் கிடைக்கவில்லை. நண்பர்கள் விமரிசனத்தை மனத்தில் கொண்டு ஹிந்திப் படத்தின் முடிவைப் பிரச்னை

யாக விட்டு விட்டேன். 'கோபால கிருஷ்ணன்! கெடுத்து விட்டீர்களே! கடைசியில் கதாநாயகி எழுந்திருப்பதாக ஷாட்டை அமைத்திருக்கக் கூடாதா?' என்ருர் தேசாய் என்ற வட இந்திய நண்பர். சாந்தாராம் ஸ்டூடியோவில் டைரக்டராக இருப்பவர். அவர் தமிழ்ப் பட முடிவைப் பார்த்ததில்லை! ஹிந்திப் பதிப்பு தமிழ் படத்தைப் போல் வெற்றிபெறவில்லை. இதனுல்தான் ரசிகர்கள் எதிர்பார்ப்பதை ஒரளவு அதிகமாகவே கொடுக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்."

"பொழுதுபோக்காக மட்டுமின்றி ஓர் உயர்ந்தகலை என்ற ரீதியிலும் சினிமாவை அணுகலாமல்லவா?"

"கண்டிப்பாக அப்படித்தான் அதனை அணுக வேண்டும். எத்தனையோ கலைகள் இதில் இடம் பெறுகின்றன. கற்பகம் படத்தில் பசியோடிருக்கும் குழந்தைக்குச் சாதம் ஊட்டப் போனவள் தட்டில் சாதத்தை எடுத்துக் கொண்டு ஒரு கரத்தால் அந்தப் பரபரப்பினிடையிலும், மறக்காமல் திறந்திருக்கும் பாத்திரத்தை மூடுகிருளே அதைப் பாராட்டி ஒரு பெண் எழுதியிருந்தாள். டைரக்ஷன் ஒரு கலை என்ற அளவிலே அந்த இடத்தில் வெற்றி பெற்றிருப்பதை உணர்ந்தேன். — இப்படிப் பல உதாரணங்களைக் கூறலாம்."

"திரைப்படங்களின் வெற்றி தோல்விக்கு ஏற்றவாறு பொதுமக்களின் ரசனையை எடை போடலாமா?"

"நீங்கள் வேண்டுமென்றேகேள்வியை மாற்றிப் போடுகிறீர்கள். மனித வாழ்வின் அடிப்படையான தர்மங்களைக் கருத்தாக வைத்துப் படமெடுத்தால் படம் ரசிகர்களால் வரவேற்கப்படும் என்று நம்பலாம், இன்றைய நிலையில். அதைவிட்டு வெகு கூடமான, எளிதில் புரிபடாத கருத்துக்களை நுழைக்கப் பார்ப்பது பலன் தராது. 'என்ன தான் முடி'வைப் பார்த்த பிறகு, தான் பொய் சொல்வதையே விட்டுவிட்டதாக ஒரு சிறுவன் எனக்குக் கடிதம் எழுதியிருந்தான். வசூல் விஷயத்தில் படம் அடைந்த தோல்வியைக் கூட இந்த ஒரு கடிதம் மறக்கடிக்கச் செய்து விட்டது. காந்திக்கே சிறு வயதில் மனம் திருந்த ஒரு நாடகம் தேவைப் பட்டதே என்று எண்ணும்போது என் மனம் இந்தப் படத்தை எடுத்ததற்காகப் பூரிக்கத்தான் செய்கிறது. பொதுமக்கள் ரசனை என்பது தர்மாமீட்டரில் உள்ள மெர்க்குரியைப்போன்றது. குளிருக்குக் கம்பளியும் வெயிலுக்கு மேல் துண்டும் போடுகிற மாதிரி அவர்களுக்குப் பயன்படும் படங்கள் எப்போதுமே வெற்றியடையும்! படங்களில் ஏதாவது போதனை, படிப்பினை ஆணித்தரமாக இருக்கவேண்டுமென்று அவசியமில்லை. புத்தர், ஏசு, காந்தி, போன்ற மகான்களின் போதனைகளே இன்னும் நிறைய ஏற்றுக் கொள்ளப் படாமல் இருக்கின்றன. ஆகையால் திரைப்படங்களால் இத்தகைய சாதனை ஒன்றும் செய்துவிட முடியாது. திரைப் படங்கள் மக்களின் உள்ளங்களிலே விழிப்பை ஏற்படுத்த உதவும். அவர்களைச் சிந்திக்க வைக்க உதவும். ஆகையால்தான் இந்தச் சாதனத்தை வெறும் நேரப் போக்குக்கு உபகரணமாக மாத்திரம் உபயோகிக்காமல் சிந்திக்க வைக்கும் 'ஸ்விட்சாக'வும் நினைக்கவேண்டும்.

"அந்நியச் செலாவணி நெருக்கடி காலத்தில் நமது திரைப் படங்கள் ஏற்றுமதியாக வேண்டும் என்ற நோக்கத்திலும் எடுக்கப்படலாமே? பொதுவாக நம் நாட்டின் வாழ்க்கை முறைகளை, ஜீவத் துடிப்புகளை நம் படங்கள் பிரதிபலிப்பதில்லை என்பதால்தானே மேல் நாடுகளில் இவற்றுக்கு 'மவுசு' இல்லை என்கிருர்கள்?"

"இதற்கு முதல்படியாகத் திரைப்பட விளம்பரச் சுவரொட்டிகளிலேயே மாறுதல் தோன்ற வேண்டும்! ஒரு ஜப்பானியப் பட விளம்பரமோ, மலையாளப் பட விளம்பரமோ, ரஷ்யப் பட விளம்பரமோ இவைகள் எதிலும் எழுத்துக்களை மறைத்துக் கொண்டு உருவங்களை மாத்திரம் பார்த்தால் அவை எந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த படம் என்று சொல்லி விடலாம். ஆனுல் தமிழ் நாட்டுத் திரைப்பட விளம்பரங்களைப் பார்த்து அப்படிச் சொல்லிவிட முடியாது! எல்லாமே ஒரே மேலை நாட்டு ஆடை அணிகள்! பல லட்ச ரூபாய்கள் முடக்கிப் படத் தொழிலில் இறங்குபவர்கள் இதையெல்லாம் சற்று முன் கூட்டியே நினைத்துப்பார்க்க வேண்டும்.

"திரைப் படங்களில் புது முயற்சிகள் செய்ய உதவும் வகையில் சர்க்கார் ஏற்படுத்தியிருக்கும் பிலிம் ஃபைனன்ஸ் கார்ப்பரேஷனே இயங்கவில்லை என்ருல் படங்களில் முதலீடு செய்யும் மற்றவர்கள் எங்கே மனம் மாறித் தைரியமாகப் பரிசோதனைகள் செய்து பார்க்க முன்வரப் போகிருர்கள்?"

"முடிவாக?"

"மனத்திலே நல்ல எண்ணம் உருவானல் படமும் நல்ல உருவம் பெறும் என்பது என் அனுபவம்." — **மேனு.**

# எச்எம்வி

# காஸ்மோபாலிடன்

**மெலிவு மோஸ்தரில் மேன்மைமிக்க மேஜை மாடல் டிரான்ஸிஸ்டர்**




வனப்பு மிக்க வடிவம் உங்களை மகிழ்விக்கும்.
சாதனையின் சிறப்பு உள்ளத்தை அள்ளும்
மலிவு விலையோ எச்எம்வி காஸ்மோபாலிடனை
நீங்கள் நிச்சயம் வாங்க வைத்துவிடும்.

எக்ஸைஸ் வரி உள்பட விலை ரூ. 415- இதர வரிகள் தனி.

ரேடியோ மாடல் 5766 ● 8 டிரான்ஸிஸ்டர்கள் ● 2 டயோடுகள் ● 3 வேவ் பாண்டுகள் ● நுண் சக்தி மிகுந்த 7" எலிப்டிகல் ஹைஃப்ளக்ஸ் லௌட்ஸ்பீக்கர் ● தனியான பிக்-அப் இணைப்பு ● ட்யூனிங் பாட்டரி இண்டிகேடர் ● உள்ளேயே உள்ள சுருள் ஏரியல்.




**His Master's Voice**

**முதல் பரிசு: ரூ. 30**

**ஜி. சுவாமிநாதன், D. com.**
64-ஏ, தேர்முட்டி சந்து
கீழ் ஆண்டார் வீதி, திருச்சி-2



# லட்சியக் கனவு

**இரண்டாவது பரிசு: ரூ. 20**

**அலமேலு ராமஸ்வாமி**
டெலிபோன் எக்ஸ்சேஞ்சு குவார்ட்டர்ஸ்
குரோம்பேட்டை, சென்னை-44

## லட்சியம் நிறைவேறியது!

**நா**ன் சிறுவயதில் பள்ளியில் படித்துவரும் நாட்களில் எனக்கு ஒருவிதமான பக்ஷவாத நோய் ஏற்பட்டது. டாக்டர் திருமூர்த்தி போன்ற பெரிய வைத்தியர்கள், மந்திர தந்திர வாதிகள், இன்னும் யார் யாரோ பற்பல விதங்களில் முயற்சிகள் செய்தும் என்னுடைய வியாதியைக் குணப்படுத்த முடியவில்லை. (தவறு! என் வியாதி அவர்கள் கையால் குணமடைய அதிருஷ்டம் செய்யவில்லை.) இன்னமும் விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது. என்மேல் அதற்கு அவ்வளவு ஆசை போலும்!

சிறு வயதில் இவ்வியாதி ஏற்பட்டதால் மற்ற குழந்தைகளைப் போல் ஓடி ஆடி விளையாட முடியாத நிலை எனக்கு ஏற்பட்டது. ஆகவே விடுமுறை நாட்களில் எனக்குக் கீழ் வகுப்புக்களில் படித்துக் கொண்டு வந்த மாணவ மாணவியருக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்காகப் பள்ளிக்கூட விளையாட்டு விளையாடுவது வழக்கம். அவர்களுக்குத் தெரியாத பாடங்களையோ கணக்குகளையோ (எனக்கும் தெரியாவிட்டால் பெரியவர்களிடம் இரகசியமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு) சொல்லிக் கொடுத்து அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்துவது வழக்கம். அந்தச் சமயங்களில் என் எண்ணங்கள் எல்லாம் நான் நன்றாகப் படித்து, உபாத்தியாயர் தொழிலை மேற்கொண்டு



கொண்டு, விளம்பரம் ஒன்றும் இல்லாமல் தொழில் நடத்தும் என்னிடம் ஒரு ''தோற்றோர் இயல் கல்லூரி'' (Tutorial college)யில் உள்ள மாதிரி மாணவ மாணவியர் படிக்க வருவதைப் பார்க்கும்போதும், ''இவரிடத்தில் சென்று படிக்க நமக்கு அதிருஷ்டம் வேண்டும், இவரிடம் சென்று படித்தால் நாம் நிச்சயம் தேர்வுகளில் வெற்றி பெற்றுவிடுவோம்'' என்று மாணவ மாணவியர்கள் திரளாக என்னிடம் படிக்க வருவதை நோக்கும்போதும் என் லட்சியக் கனவு நிறைவேறவில்லை என்று நான் யாரிடமாவது கூறிக்கொள்ள முடியுமா?

**—ஜி. சுவாமிநாதன்**

## கனவு நனவாகியது!

**சா**தாரணமாகப் பருவ வயதிலுள்ள மணமாகாத பெண்கள் தான் அதிகமாகக் கனவு காண்பார்கள் என்று சொல்வார்கள். சிலசமயம் அவர்கள் காணும் கனவை அவர்களே பிற்காலத்தில் நினைத்துப் பார்த்தால் வியப்பாக இருக்கும்!

எனக்கு அப்போது வயது இருபத்தைந்தாகி விட்டது. கல்யாணம் ஆகவில்லை. என் தந்தை தபால் இலாகாவில் பெரிய பதவியில் இருந்து அதிக சம்பளம் பெற்றவராயினும் ஒன்பது குழந்தைகள் கொண்ட குடும்பத்தை நிர்வகித்து வந்தவராதலால் ஆயிரக் கணக்கில் பணம் செலவுசெய்து எனக்குக் கல்யாணம் செய்வது என்பது அப்போது அவர் நினைத்துப் பார்க்க முடியாததாகத் தானிருந்தது. அத்துடன் என் அக்கா (அவள் தான் வீட்டுக்கு முதல் பெண்) வுக்குக் கல்யாணம் செய்து கொஞ்சம் கடன் பட்டிருந்தார்.

நான் எஸ். எஸ். எல். ஸிக்கு மேல் படிக்கவும் பண வசதியில்லாததால் வீட்டிலேயே தாய்க்கு உதவியாக வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன்.

என்னுடன் பள்ளியில் படித்த கிறிஸ்துவப் பெண் ஒருத்தி இரு குழந்தைகளுக்குத் தாயான பிறகு



நிறைய மாணவ மாணவிகளுக்குப் பாடங்களைப் போதித்து, அவர்களை நல்வாழ்வில் ஈடுபடுத்தும் சமூக சேவை செய்வது என்றே இருக்கும். நமது எண்ணங்களின், லட்சியங்களின் பிரதிபலிப்புகள்தானே நாம் காண்கின்ற கனவுகள்!

பல நாட்களில் காலை வேளையில் என் கைகள் வீங்கி யிருப்பதைப் பார்த்து, நான் என்னுள் நேற்றிரவு குறும்புக் காரச் சிதம்பரத்தை (சுவரை)க் குட்டியதுதான் இவ்வீக்கத் துக்குக் காரணம் என்று சொல்லிக் கொண்டு வீக்கத்துக்கு மருந்து போட்டுக் கொண்டிருக்கிறேன். என்னுடைய உறவினர்களுக்கெல்லாம் நான் சிறந்த முறையில் படித்து ஒரு டாக்டராகவோ, வக்கீலாகவோ, ஆடிட்டராகவோ மாறிச் செல்வம் சம்பாதித்து, வீடு, நிலம், கார், வேலை யாட்கள் முதலிய வசதிகளுடன் வாழ்க்கை நடத்த வேண்டும் என்று ஆசை. என் தந்தைக்கோ வெனில் நான் ஆடிட்ட ருக்குப் படித்து அரசாங்க ஆடிட்டராக மாறி நாட்டுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென ஆசை. என் கனவுகளின் படி என்னுடைய ஆசையும் லட்சியமும் உபாத்தியாயர் தொழில்தான். தந்தையின் ஆசைக்கு விரோதமாக இருக்கக் கூடாது என்ற நினைவின் அடிப்படையில் நான் புக் கீப்பிங் ஆடிட்டிங், பாங்கிங் எல்லாம் படித்து டிப்ளோமாக்கள் வாங்கினேன். என் தந்தையும் தம்முடைய ஆசைக்கேற்ப நான் பாஸான போதெல்லாம் மிகவும் மகிழ்ச்சிகொண்டார். ஆனால்...

என் வியாதி தொடர்ந்து என்னை விடாமல் பற்றிக் கொண்டு அவதிப்படுத்தியதால் நான் அரசாங்க வேலை களுக்கோ, தனியார் ஸ்தாபனங்களில் வேலைக்கோ செல்ல முடியவில்லை; செல்ல மனம் துணியவு மில்லை. பொழுதைப் போக்குவதற்காக அண்டை அயலில் உள்ள குடும்பங்களின் குழந்தைகளுக்கெல்லாம் கணக்கு, ஆங் கிலம் சொல்லிக் கொடுத்துவர ஆரம் பித்தேன்.



இன்று என்னிடம் பாடங்கள் படித் துத்தேர்வு பெற்ற மாணவ மாணவிகள் உயர்ந்த உத்தியோகங்களில் இருந்து வருகிறார்கள். தனி ஒருவளாக இருந்து

'ஏண்டி, நீங்க 'ப்ராமின்ஸ்' சீக்கிரம் கல்யாணம் கட்டுவீங்களே? நீ ஏன் இப்படித் தனியா நிக்கிறே?' என்று என்னை நேரிடையாகவே கேட்டு விட்டாள். எனக்கு அவமானமாக இருந்தது.

எனக்கு இன்னொரு உயிர்த் தோழி. நாங்கள் எல்லா விதத்திலும் சமமானவர்தான். இரட்டையாகத்தான் எப்போதும் காணப்படுவோம். ஒருநாள் அவளுக்கும் கல்யாணம் ஆகிவிட்டது! அன்று மற்றத் தோழிகள் என்னைப் பார்த்து, ''இனி நீயும் அவளைப் போல் 'ஜோடி' சேர்த்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்று நான் ஏன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்பதைக் கேட்காமல் கேட்டார்கள். இந்தவேளைக்கும் அந்தத் தோழி என்னைவிட இரண்டு வயது சிறியவள்!

அப்போதெல்லாம் நான் ஓரிரு சிறு கதைகள் எழுதி 'காவேரி' பத்திரிகையில் பிரசுரமாயின. சில ரேடியோவிலும் ஒலிபரப்பாயின. (பின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு என்னதான் செய்வது?) ஏழைக் குடும்பத்தில் பிறந்த என் தோழியைப் பெரிய பணக்கார இடத்துப் பிள்ளை கல்யாணம் செய்து கொண்டதைக் கண்டு ஊரே அதிசயித்தது! அதையே கதையாகவும் எழுதினேன். 'காவேரி'யில் பிரசுரமும் ஆயிற்று!

வரவர என்னைக் காண்பவர்கள் எல்லோரும் ஏன் நான் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்று கேட்பதுடன், தானே வரன் சொல்லவும் கிளம்பி விடவே எனக்கு என் மீதே ஆத்திரமாக வந்தது. எனக்குக் கல்யாணம் ஆகாதது யார் மேல் குற்றம்? தெரியாது...

ஒருநாள், என் பாட்டி அடிக்கடி சொல்லி வருவதுபோல் எலுமிச்சம் பழத்தைப் புறா கொத்திக் கொள்வது போல் எங்கிருந்தாவது பறந்து வந்து என்னை ஒருவர் திருமணம் செய்து கொண்டு அடுத்த நாளே இந்த ஊரை விட்டுக் கிளம்பிப் போய்விடவேண்டும்; அதன் பிறகு இந்தியாவை விட்டே வெளி நாட்டுக்குப் போய் இவர்கள் 'பிடுங்கல்' இல்லாமல் சில வருடங்களாவது இருந்து விட்டு வரவேண்டும்; அப்போது என்னை 'ஏன் கல்யாணம் செய்து கொள்ள வில்லை' என்று பரிதாபமாகக் கேட்டு அவமானப் படுத்தியவர்கள் என்னைப் பற்றி எப்படியெல்லாம் உயர்வாகப் பேசுவார்கள் என்று கற்பனை செய்தேன்.

அந்தக் கனவு வார்த்தைக்கு வார்த்தை பலிதமானதுடன் அதற்கு மேலும் பலித்து விட்டது!



என் கணவர் வேறு பெண்களைப் பெண் பார்க்கவென்று டெல்லியிலிருந்து 'பறந்து' வந்தவர் என்னைப் பார்த்ததும் மற்றப் பெண்களை விட்டுவிட்டு என்னையே மனைவியாகத் தேர்ந்தெடுத்தார்! எங்கப்பாவுக்கும் அதிக செலவு வைக்காமல் பதினைந்தே நாட்களில் கல்யாணம் செய்து கொண்டதும் மறுநாளே நானும் அவருடன் டெல்லி வந்தேன். டெல்லியில் இரண்டு மாதங்கள் தங்கிவிட்டு என் கனவின் படி வெளிநாடும் கிளம்பி விட்டேன்!

வெளிநாடு என்றால் எல்லோரும் சகஜமாகப் போகும், கதைகளில் வரும் அமெரிக்காவுக்கல்ல! இந்தியாவுக்குக் கிழக்குப்புறமாக இருக்கும் ஜாகர்த்தாவுக்குக் கப்பலில் போய் அங்கு ஒரு வருடம் வாழ்ந்தோம். என் கனவு பலித்து விட்டது அல்லவா?



'எம். ஏ. பட்டம் வாங்கின எங்களுக்கே அந்த ஸ்கூல்லே வேலை கிடைக்கல்லே. நீர் வெறும் பி. ஏ.; உமக்கு எப்படி வேலை கிடைத்தது ?'

'மதியஉணவுசமைக்கத்தெரியும்னேன்!'

என் கணவரும் எங்கள் குடும்பத்தைப் பொறுத்த வரையில் குபேரர்தான்! ஒரு பெண் தனது லட்சியக் கணவர் எப்படி இருக்க வேண்டும் என்று நினைப்பாளோ அதற்கு இலக்கணமாக விளங்குகிறவர் என் கணவர். அவரைப் போன்ற அழகும் சாயலும் கொண்ட எங்கள் மகள் ஆனந்திக்கு இப்போது நான்கு வயதாகிறது. எனது வெளி நாட்டு அனுபவத்தை நான் 'சிறுத்தனம்' என்று கதையாக எழுதியது 'கலைமகளி'ல் பிரசுரமும் ஆகி, எனக்குக் 'கலைமகளி'ன் பூரண கடாட்சமும் கிடைத்து விட்டது என்ற திருப்தியும் நான் கண்ட கனவுக்குச் சிகரம்தானே?

**அலமேலு ராமஸ்வாமி**

## அரிய வாய்ப்பு !

என்ன ஆச்சரியம்! ராஷ்டிரபதி ஸ்ரீ ராதாகிருஷ்ணன் விமானத்திலிருந்து இறங்கி வருகிறார். என் குடும்பத்தினர் அவரைக் கை கூப்பி வரவேற்கிறார்கள்! நானும் ஓடுகிறேன். கணவர் பக்கத்தில் நின்றுகொண்டு... பல காமிராக்கள் 'க்ளிக், க்ளிக்'...எல்லாம் வெறும் கனவு. வாசலில் பால்காரன் நிற்கிறான்.

என் கணவரிடம் ''நாம் எல்லோரும் ராஷ்டிரபதியுடன் போட்டோ எடுத்துக்கொள்வதுபோல் ஒரு கனவு கண்டேன்'' என்றேன்.

''நிச்சயம் பலிக்கும்! என்ன, நாம்ப பெரிய வி.ஐ.பி. பாரு...இல்லென்னு பிரபல சினிமா நட்சத்திரங்கள்! ஆனைப்பட்ட பேர் போன நடிகை யாரோ மதுரையில் ஒரு தடவை ஜவாஹர்லால் நேருஜியுடன் புகைப்படம் எடுத்துக்கொள்ள எவ்வளவோ முயன்றாளாம்! முடியவில்லையாம்! கனவுதானே! கண்டுகொண்டேயிரு! வெளியில் மட்டும் சொல்லாதே...'' என்று பரிகாசமாகவும் பக்குவமாகவும் பதில் சொல்லிவிட்டார். அப்போது அவர் டில்லியில்தான் வேலையாக இருந்தார்.

சில மாதங்கள் உருண்டோடின. ''இதோ பாரு, நாளைக் காலையில் நாம் ராஷ்டிரபதி பவனம் போகிறோம். ரக்ஷா பந்தனுக்குக் குழந்தைகளும், பெரியவர்களும் நம் ராஷ்டிரபதிக்கு ராக்கி கட்டுவார்கள். நூற்றுக் கணக்கானவர்கள் கூட்டத்தில் உனக்குச் சந்தர்ப்பம் கிடைப்பது சந்தேகம்தான். இருந்தாலும் போகலாம்'' என்றார் என் கணவர்.

மறுநாள் அந்தப் புனித தினத்தன்று வந்திருந்த ஒவ்வொருவரும் கொண்டுவந்திருந்த ராக்கியை ராஷ்டிரபதியின் வலக் கரத்தில் கட்டுவதற்குத் தயாராக எடுத்து வைத்துக் கொண்டோம். வந்திருந்த அனைவரும் கட்டி முடிக்க எவ்வளவு நேரமாகும்! ராஷ்டிரபதிக்கு எத்தனையோ அலுவல்கள். ஆகவே அவருடைய டெப்டி ராணுவ செகரட்டரி பெரியவர்களில் இருவரையும், குழந்தைகளில் சிலரையும் மட்டுமே கட்டுவதற்கு அனுமதித்தார். அந்த அரிய வாய்ப்பை அடைய என்னையும் ஒருவராக அவரே தேர்ந்தெடுத்தார்!

பயம் சூழ்ந்த பரமானந்த நிலையில் கைகால்கள் நடுங்க நான் அவர் அருகில் சென்று வலது கரத்தில் ராக்கியைக் கட்டினேன். இந்தக் காட்சியை அங்கு வந்திருந்த புகைப்படக்காரர்கள் தங்கள் தங்கள் புகைப்படப் பெட்டிக்குள் சற்றும் தாமதமில்லாமல் சில விநாடிகளில் புகுத்தி விட்டார்கள். நான் எப்போதோ கண்ட கனவு இப்படி லட்சியக் கனவாகியது. ராஷ்டிரபதியை என் சகோதரராகப் பாவித்து ராக்கி கட்டும் பாக்கியத்தை அடைந்தேன்.

**ஆர். ராஜலட்சுமி**

11, ஆதியப்ப முதலித் தெரு,
புரசவாக்கம், சென்னை-7

## சிறந்த பேச்சாளர் !

எனது வீட்டின் அருகிலுள்ள திடலில் அடிக்கடி அரசியல் கூட்டங்கள் நடைபெறும். ஒருமுறை அங்கு பாரதத்தின் தனிப் பெருந் தலைவர் ஒருவரது சொற்பொழிவைக் கேட்க நேர்ந்தது. அப்போது! ''அவரைப் போல் சிறந்த பேச்சாளராக வரக்கூடாதா?'' என்று நான் எண்ணினேன்.

ஆறு வருடங்கள் ஓடி மறைந்தன. இந்த ஆறு வருடங்களுக்கு இடைப்பட்ட எனது பள்ளிப் பருவத்திலே பலப்பல பேச்சுப் போட்டிகளிலும் கலந்து கொண்டு பரிசுகள் பல பெற்றேன். பள்ளியில் எந்த விழா நடந்தாலும் நான் பேசவேண்டிய நிலை ஏற்பட்டது.

ஆனால் உள்ளத்தின் ஒரு மூலையில் நான் ஆறு வருடங்களுக்கு முன் கண்ட லட்சியக் கனவு நிரந்தரமாகப் பதிந்துவிட்டது.

26-6-65. எனது ஊரில் உள்ள அதே திடலில் அளவிட முடியாத மக்கள் கூட்டம் கூடியிருந்தது. மேடையிலோ நான்! ஆம்! அன்று நான் கண்ட கனவு இன்று என் முன்னே உயிர் பெற்று நடக்கின்றது. அப்படி என்னதான் பேசிவிட்டேன்? ஒன்றும் இல்லை. காலஞ்சென்ற நம்முடைய பிரதமர் நேரு அவர்களது சொற்பொழிவு ஒன்றை அவர் பேசுவது போலவே அதே குரலில், அதே பாவனையுடன் பேசிக் காண்பித்தேன். மேடையை விட்டு இறங்கியவுடன் கூட்டம் என்னைச் சூழ்ந்துகொண்டு பாராட்டுக்களை அள்ளி வீசியது.''

ஆம்! இது நனவு. சமீபத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்தி குடந்தைக்கு விஜயம் செய்தபோது மேற்கண்ட வாறே பேசி அவரது பாராட்டுதலைப் பெற்றேன். அவர் எனது ''ஆடோகிராப்'' புத்தகத்தில் கையெழுத்தும் போட்டுக் கொடுத்தார். எனது லட்சியக் கனவு நிறைவேறியது!

**ஆர். பி. கிருஷ்ணமாச்சாரி**

சென்னை-5

சிங்கப்பூருக்கு அருகில் உள்ள ஓர் அழகான தீவு அது. வாழையும் தென்னையும் மாவும் செழித்து வளர்ந்திருந்தன. அந்தப் பசுமையான சோலைகளுக்கு நடுவே இருந்த வெட்டவெளி, பசுமையே இல்லாத காய்ந்த மரத்துப் போன இதயமுடையவர்களின் கைவசம் இருந்தது. அங்குதான் இரண்டாவது உலகப் போரின்போது ஜப்பானியர்கள் யுத்தக் கைதிகள் முகாம் அமைத்திருந்தனர். கைதிகள் அந்தத் தீவுக்குப் 'பிசாசுத் தீவு' என்று பெயர் சூட்டினர். கைதிகளின் மேற்பார்வையாளர்களாக வந்த ஜப்பானிய அதிகாரிகள் பிசாசுகளாகத்தான் தங்களிடம் அகப்பட்டவர்களை ஆட்டி வைத்தார்கள்.

சட்டப்படி யுத்தக் கைதிகளை விரோதி நாட்டினர் தங்களுடைய யுத்த முயற்சித் திட்டங்களில் ஈடுபடுத்தக் கூடாது. ஆனால் ஜப்பானிய அதிகாரிகள் அந்தச் சட்டங்களைக் காற்றில் விட்டு விட்டுத் தங்கள் வசமிருந்த ஆயிரத்து ஐம்பது கைதிகளையும் சிங்கப்பூர் அருகிலுள்ள துறைமுகம் ஒன்றைச் செப்பனிட உபயோகித்தார்கள். குறுகிய அரை நிஜார்களை அணிந்து மண்வெட்டி, கடப்பாரைகளைச் சுமந்து நாள் முழுதும்




வேலை செய்த அவர்களுக்கு அரிசிச் சாதமும் சர்க்கரைவள்ளிக் கிழங்குச் செடி இலைகளும் தான் அரைகுறை ஆகாரமாகக் கிடைத்தன.

1944ல் அந்த முகாம் மேற்பார்வை அதிகாரியாக வந்து சேர்ந்தவன் சார்ஜெண்ட் மான்ஜெண்ட் என்பவன். அவன் முகமும் கரங்களும் அசல் மனிதக் குரங்கின் அங்கங்கள் போலிருந்ததால் கைதிகள் எல்லாருமாகச் சேர்ந்து ரகசியமாக அவனுக்கு சார்ஜெண்ட் மங்கி (Sergeant Monkey) என்று பெயர் வைத்தார்கள். அந்த சார்ஜெண்ட் தன் அதிகாரத்தில் உள்ள கைதிகளைக் கைதிகளாகக் கருதவில்லை. அடிமைகளாகவே நினைத்தான்; நடத்தினான்.

அந்தக் கைதிகளில் ஒருவராகத்தான் டாக்டர் புருனிங் இருந்தார். ஹாலந்து தேசத்தைச் சேர்ந்தவர். அவ்வப்போது ஜப்பானிய அதிகாரிகள் அரை மனத்துடன் கொடுக்கும் கொஞ்ச ஆஸ்பிரின் பொடியையும் கொயினா மாத்திரைகளையும் கொண்டு நோய்வாய்ப்படும் கைதிகளைக் கவனித்து வந்தார். ரண சிகிச்சைக்கான எந்தவிதக் கருவியும் அவரிடம் கிடையாது. ஆனாலும் புண்களைக் கழுவிக் கட்டுப் போடும் போது உற்சாகமூட்டும் வகையில் அவர் பேசுவதே குணத்தைத் தோற்றுவிக்கும்.

''வைட்டமின் மாத்திரைகள் கொடுக்காவிடில் கைதிகளுக்குப் பலம் ஏற்படாது. பலமில்லாமல் அவர்கள் வேலை செய்ய முடியாது. வேலை செய்யாவிட்டால் உங்கள் துறைமுக நிர்மாணம் என்ன ஆவது?'' என்றெல்லாம் அவர் சார்ஜெண்ட் மங்கியிடம் வாதாடுவார். மங்கி முறைத்துப் பார்த்து விட்டு வேண்டாவெறுப்பாகச் சில மருந்துகள் கிடைக்க ஏற்பாடு செய்வான். டாக்டர் அவைகளை அத்தியாவசியமான நோயாளிகளுக்குக் கொடுத்து மகிழ்வார்.

கைதிகளிடையே டாக்டர் புருனிங்கினிடம் இருந்த மதிப்பும் மரியாதையும் சார்ஜெண்ட் மங்கியின் வயிற்றெரிச்சலைக் கிளப்பின. கைதிகளின் முன்னிலையில் டாக்டரை அவமானப்படுத்த ஆசைப்பட்டான்.

டாக்டர் புருனிங் ஒரு கைக்கடிகாரம் அணிந்திருந்தார். சார்ஜெண்ட் மங்கி அதைத் தனக்கு அன்பளிப்பாகத் தர வேண்டும் என்று உத்தரவிட்டான். அவன் நினைத்தால் அதை அவனே பிடுங்கிக் கொண்டிருக்கலாம். அல்லது இரண்டு காவலாளிகளை விட்டுக் கழற்றச் சொல்லியிருக்கலாம். அவன் அந்த முறையை விரும்பவில்லை. டாக்டரே சிரம் குனிந்து காணிக்கையாக அந்தக் கடிகாரத்தைக் கொடுப்பது போல் இருக்க வேண்டும் என்று நினைத்தான்.

''முடியாது'' என்ற பதில் புருனிங்கிடமிருந்து அழுத்தம் திருத்தமாக வந்தது.

சார்ஜெண்ட் முகம் கோபத்தால் சிவந்தது. டாக்டரை அடிஅடி என்று அடித்துக் கீழே தள்ளினான். டாக்டர் எழுந்திருக்க முயன்றால் காலால் உதைத்து மீண்டும் கீழே தள்ளிக் கர்ஜித்தான்: ''கடிகாரத்தைக் கொடு!''

''முடியாது'' என்று ஒரே பதில்தான் அவரிடமிருந்து மீண்டும் வந்தது.

''நாளைக்கு நான் மறுபடியும் கேட்பேன்'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி விட்டு சார்ஜெண்ட் அங்கிருந்து நகர்ந்தான்.

இதைத் தொடர்ந்து பல நாட்கள் ஒவ்வொரு நாளும் சார்ஜெண்ட் கடிகாரத்தைக் கேட்பதும், புருனிங் மறுத்து அடி உதை படுவதும் சகஜமான நிகழ்ச்சிகளாக ஆயின. புருனிங்கின் முகம் முழுதும் அடியும் உதையும் பட்டு மகா கோரமாக மாறி விட்டது. ஆனாலும் அவர் தம் வேதனையை மறந்து பிற நோயாளிகளுக்கு சிசுருஷை செய்யத் தவறவில்லை. சக கைதிகள் ஒவ்வொருநாளும் அவர் கையில் கடிகாரத்தைப் பார்க்கும் போது உற்சாகம் அடைந்தார்கள். ''நான் இந்தக் கடிகாரத்தின் உதவி கொண்டு காலத்தை மாத்திரம் அளக்கவில்லை. என் தைரியத்தையும், ஆண்மையையும், தன் மானத்தையும்கூட அளக்கிறேன்'' என்று புருனிங் அக் கைதிகளிடம் சொன்னார்.

சார்ஜெண்டின் ஆத்திரம் ஒவ்வொரு நாளும் அதிகரித்துக் கொண்டே வந்தது.

ஒரு நாள் வழக்கம்போல் மாலை வேளையின் டாக்டரை அடித்துக் கீழே தள்ளிக் கடி

காரத்தைக் கேட்டான். எழுந்திருக்க முயன்ற டாக்டர் வழக்கம்போல் 'முடியாது' என்றார். ''சரி! நாளைக் காலைவரை இங்கே 'அட்டென்ஷ'னில் நிற்க வேண்டும்' என்று சொல்லிவிட்டான். அந்தத் தண்டனை எவ்வளவு கடுமையானது என்று கைதிகளுக்குத் தெரியும். புருனிங் இருந்த நிலைமையில் அவரால் சில மணி நேரம்கூடத் தாக்குப் பிடிக்க முடியாது. கொஞ்சம் அசைந்தால் கூட சார்ஜென்ட் உதைப்பான்.

கைதி நண்பர்கள் கலந்து ஆலோசித்தார்கள். அஸ்தமிக்கவே இன்னும் சில மணி நேரம் இருந்தது. மேலும் புருனிங் நின்ற இடத்தில் நிலவின் ஒளி வேறு பளிச்சென்று வீசும். அதை நம்பி புருனிங் உடலைத் தளர்த்திக் கொள்ள முடியாது. அந்த வேளையில் சார்ஜென்ட் கவனித்து விட்டால் மேலும் உதை விழும்.

பக்கமாக 'அட்டென்ஷ'னில் நின்றார். டாக்டர் அப்படியே துவண்டு கீழே உட்கார்ந்தார். ரோல் அவரைத் தரையோடு இழுத்து ஊர்ந்து கொண்டே முகாம் குடிசைக்கு வந்து சேர்ந்தார். கைதி நண்பர்கள் புருனிங்குக்கு ஆகாரம் கொடுத்து அவரை ஒளித்து வைத்துத் தூங்கச் செய்தார்கள். விடிவதற்குச் சற்று முன்பு புருனிங் தரையோடு தரையாக ஊர்ந்து போய்த் தம் இடத்தில் நின்று கொண்டார். பியட் முகாமுக்குள் திரும்பி வந்தார்.




ஒரு வழியாக இரவும் வந்தது. டாக்டர் இடத்தில் இரவு முழுதும் நிற்கப் பலர் முன் வந்தாலும் ஏறத்தாழ டாக்டரின் உருவத்தை ஒத்திருந்த இருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பதில் ஆள் நிற்பதை எதிர்பாராத விதமாக சார்ஜென்ட் கவனித்து விட்டால் என்ன தண்டனை கிடைக்கும் என்று தெரியும். ஆனாலும் துணிந்தார்கள். அவர்களில் ஒருவர் பெயர் பியட். மற்றொருவர் பெயர் ரோல்.

இரவு கவிந்த சில மணி நேரம் கழித்து பியட்டும் ரோலும் தரையில் படுத்து அங்குலம் அங்குலமாக டாக்டர் நின்றிருந்த வெளியை நோக்கி நகர்ந்தார்கள், சார்ஜென்ட் அந்தப் பக்கமாக வந்து விடக் கூடாதே என்று பிரார்த்தித்தபடியே.

டாக்டரை நெருங்கியதும் பியட் தலையைத் தூக்கி நிமிர்ந்து டாக்டரின் முதுகுப்

காலையில் சார்ஜென்ட் மங்கி வந்து பார்த்த போது புருனிங் 'அட்டென்ஷனில்' தான் நின்று கொண்டிருந்தார். ஆத்திரமடைந்த சார்ஜென்ட் ஆசைதீர மட்டும் புருனிங்கை அடித்தான். அப்போதுகூட அவர் தம் கடிகாரத்தைக் கழற்றவில்லை.

சில நாட்களில் திடீரென்று சார்ஜென்ட் மங்கி வேறு போர்முனைக்கு மாற்றப்பட்டான். அவனுக்குப் பதிலாக வந்த ஆசாமி டாக்டர் மீதோ அவர் கடிகாரத்தின் மீதோ அக்கறை காட்டவில்லை.

இந்த நிகழ்ச்சி நடந்த ஒரு வருடகாலத்துக்குப் பிறகுதான் அந்த முகாம் கைதிகளுக்கு விடுதலை கிடைத்தது. டாக்டர் புருனிங் மகிழ்ச்சியுடன் தாய்நாடு திரும்பினார். அவர் கைக் கடிகாரம் பத்திரமாக அவரிடமே இருந்தது! (ஆதாரம்: காரனெட்)

இனிய தமிழ் புத்தகங்களை படித்து
அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு !

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

## முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே !

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

### இத் திட்டத்தின் சீரிய அம்சங்கள் :

* சிக்கல்கள் அற்ற சுலபமான வழி.
* வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்க உதவியாக 75க்கு மேற்பட்ட புத்தகப் பதிப்பாளர்களின் பல அரிய புத்தகங்களின் பட்டியல் இலவசமாக தரப்படுகிறது. சென்னை வாசிகள் டிரஸ்டின் அலுவலகத்திற்கு நேரில் விஜயம் செய்தும் வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்கலாம்.
* நாவல், நாடகம், வரலாறு, சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம் சிறுவர் இலக்கியம் போன்ற எல்லாவித புத்தகங்களும் உள்ளன.
* திட்டத்தில் சேரும் நேயர் மாதச் சந்தாவான ரூபாய் ஐந்தைத்தவிர தபால் செலவு போன்ற எவ்விதச் செலவையும் ஏற்கவேண்டாம்.
* டிரஸ்டின் மாத வெளியீடான "புத்தக நண்பன்" என்னும் சஞ்சிகைப் பிரதி ஒன்று அங்கத்தினர்களுக்கு ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படுகிறது.
* 18 மாதங்களில் 12 பரிசுப் புத்தகங்களும் கிடைக்கின்றன.

கீழே கொடுத்துள்ள திட்ட விவரங்களை படித்து உடனே அங்கத்தினராக சேருங்கள்.

1. முதல் மாத சந்தாவான ரூ. 5.00 தென் மொழிப் புத்தக டிரஸ்டாருக்கு கிடைத்தவுடன் சந்தாதார் இத் திட்டத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டு அவருக்கு கீழே கண்டவை தபால் மூலம் அனுப்பப்படும் :
   a) பதிவு செய்யப்பட்ட அங்கத்தினர் என்ற ஒரு சீட்டு.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று. (விளம்பரத்தில் காட்டியுள்ள 8 புத்தகங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுக்கும் 3 புத்தகங்கள்).
   c) ஒரு பெரிய புத்தகப் பட்டியல்.
   d) டிரஸ்டின் மாதவெளியீடான "புத்தக நண்பன்" என்ற சஞ்சிகையின் பிரதி ஒன்று. (இப் பிரதி தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படும்.)
2. 6 மாத சந்தா தொகை செலுத்திய பிறகு அங்கத்தினர்களுக்கு டிரஸ்டார் கீழ்க்கண்டவைகளை அனுப்புவார்கள் :
   a) ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்கள்.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று.

   மேற்கண்டவைகளைப் பெற, அங்கத்தினர்கள் ஏற்கனவே பெற்ற புத்தகப் பட்டியலிலிருந்து சுமார் ரூ. 75-00 மதிப்புள்ள புத்தகங்களைப் பொறுக்கி அதோடு பரிசுப் புத்தகங்கள் லிஸ்டிலிருந்து தனக்கு விருப்பமான 3 புத்தகங்களையும் குறிப்பிட்டு டிரஸ்டுக்கு தெரிவிக்க வேண்டும். இத் தகவல் கிடைத்தவுடன் டிரஸ்டார் ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்களும் 3 பரிசு புத்தகங்களும் அங்கத்தினருக்கு எவ்வித செலவுமின்றி அனுப்பி வைப்பார்கள்.
3. 12 மாத சந்தா செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு டிரஸ்டார் மறுபடியும் ரூ. 30-00 மதிப்புள்ள அங்கத்தினரே தேர்ந்தெடுத்த புத்தகங்களும், மேலும் 3 பரிசு புத்தகங்களும் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் மேற்சொன்னபடி செய்யவேண்டும்.

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன?**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் "புத்தக நண்பன்" 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

முதல் மாத சந்தா கட்டியவுடன் பரிசாக கொடுக்கப்படும் புத்தகங்கள்:


பனிப்படலத்துப் பாவை


ஆரம்ப நீதி மாலை


தாயார் கொடுத்த தனம்


நிலம் தரும் செல்வம்


ரதோத்சவம்


நாகரீகச் சிற்பிகள்


பெரும் புகழும்


வாழ்வதற்கு வழி

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள்:**

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
### 25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

"வீட்டு நூலகம்" அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம்* அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள எட்டு பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1
2
3

பெயர் ..........

ஊர்: .......... கையொப்பம் ..........

தேதி: .......... முழு விலாசம் ..........

..........

*குறிப்பு: சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

**1966, மார்ச் 10ந் தேதிக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.**



## பல்சுவைப் பக்கம் — 1

சினிமா நடிகர் :

அந்த முரட்டுத் திருட்டுப் பயல் என் மேல் பாய்ந்து அடித்து என் 'மணி பர்ஸை'ப் பிடுங்கிக் கொண்டு ஓடியதை நீ ஏனய்யா சும்மா நின்று வேடிக்கை பார்த்திண்டிருந்தே?

போலீஸ்காரர் :

ஐயோ, ஸார்! நான் ஏதோ ஷூட்டிங் தான் நடக்குதுன்னு நினைச்சுச் சும்மா பார்த்துக்கிட்டிருந்து விட்டேனுங்க...!

### உனக்குத் தெரியுமா?

ஒவ்வொரு கண்டத்தின் பெயருக்கும் பொருள் அடங்கியே உள்ளது.

ஆசியா என்னும் பதத்தின் பொருள் சூரியோதயப் பூமி என்பது. ஆப்பிரிக்கா என்பதற்குப் பொருள் கறுப்பு. அமெரிக்கா என்பது அங்கே ஆதியில் சென்ற ''அமெரிகோ வெஸ்ட் புச்சி'' என்னும் இத்தாலியரின் நினைவாக வைக்கப்பட்டது. ஆஸ்திரேலியா தென்னாடு என்றும், ஐரோப்பா பூமியின் படர்ந்த முகம் என்றும் பொருள் படும்.

ஆதாரம்: ''உனக்குத் தெரியுமா?''
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்

### சட்டசபை மோதல்



எதிரிகளைச் சமயோசிதமாகப் பேசி மடக்குவதில் இராஜாஜிக்கு இணை அவரேதான்.

சென்னை மாநிலத்தின் முதல் முதன் மந்திரியாக ராஜாஜி அவர்கள் பதவி வகித்த சமயம்! அப்போது திரு டி. டி. கே. எதிர்க்கட்சி உறுப்பினராயிருந்தார். இருவருக்குமிடையே அடிக்கடி சட்டசபையில் மோதல் நிகழ்வதுண்டு. தமது பிரசித்தமான கடன் நிவாரண மசோதாவை இராஜாஜி அவர்கள் சட்டசபையில் கொண்டு வந்தார். காரசாரமான விவாதம் நடந்தது. திரு டி. டி. கே. எழுந்தார். குடியானவர்களின் கடன் தொல்லையை நீக்கச் சட்டம் கொண்டு வருவதற்கு முன்னால், கிராமியக் கடன் சுமையைப் பற்றிய புள்ளிவிவரங்களை முதலமைச்சர் சேகரிக்க வேண்டுமென்று அடித்துப் பேசினார். அதற்கு இராஜாஜி அவர்கள் கூறிய பதில் சாதுரியமானது. 'எனது மதிப்புக்குரிய நண்பர் திரு கிருஷ்ணமாச்சாரி அவர்கள் கொசு உபத்திரவம் தாங்காமல் கொசு வலை வாங்க விரும்பினால், முதலில் சென்னை நகரத்தில் எத்தனை கொசுக்கள் இருக்கின்றன, அவை எந்த விகிதாசாரத்தில் மைலாப்பூருக்கும் திருவல்லிக்கேணிக்குமிடையில் பரவிக் கிடக்கின்றன என்ற புள்ளிவிவரங்களைத் தேடிப் போக மாட்டார் என்று நம்புகிறேன்.'

ஆதாரம்: ''மீரா'' தகவல்: பஞ்சராஜன்

### மகோன்னத சித்திரம்

சினிமாக் கொட்டகையில் ஸ்லேடு போடப்பட்டது. 'வருகிறது. அடுத்த வாரம்! மகோன்னத சித்திரம்' என்று அதில் எழுதி யிருந்தது!

'ஹூம்! எப்போது வந்தாலும் அடுத்த வாரம் மகோன்னத சித்திரம் வருகிறது என்றுதான் சொல்கிறார்கள்! உண்மையாக எப்போதுதான் அது வரப்போகிறதோ?' என்று அலுத்துக் கொண்டார் ஒரு ரசிகர்!

★

★

★

★



எவனுகிலும் தன் காருக்குள் இருக்கும் பெண்மணி இறங்குவதற்குக் காரின் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு நின்றானுல்,

அவள் இப்பொழுதுதான் புதுமணம் செய்து கொண்டு வந்த அவனது மனைவியாக இருக்க வேண்டும். அல்லது கார் புதிதாக இருக்க வேண்டும்!

— புது மொழி

## மனிதக் குரங்கு

மாஜி நடிகர் ஒருவர் வேலை எதுவும் கிடைக்காமல் ஒரு சர்க்கஸ்காரரிடம் சென்றார்.

சர்க்கஸ்காரர் அவரைப் பார்த்துவிட்டு, 'சரி! உங்களுக்கு ஒரே ஒரு வேலைதான் என்னுல் கொடுக்க முடியும். அதற்குச் சம்மதமா' என்று கேட்டார்.

சம்மதம் என்றார் அவர்.

'சரி! அதோ, அந்த உடையை மாட்டிக் கொள்ளுங்கள்! இப்போது உங்களைப் பார்த்தால் ஒரு மனிதக் குரங்கு போலிருக்கும். சர்க்கஸ் நேரத்தில் உங்களை ஒரு கூண்டுக்குள் தள்ளிவிடுவோம்' என்றார்.

மாஜி நடிகரும் ஒப்புக் கொண்டார். சர்க்கஸ் நேரத்தில் அவரை ஒரு கூண்டுக்குள் தள்ளினார்கள். ஆனால் இரண்டு நிமிடங்களில் மற்றொரு மனிதக் குரங்கையும் கொண்டு வந்து அதே கூண்டில் தள்ளினார்கள்.

இதைக் கண்ட மாஜி நடிகர் பயந்து கொண்டு கூண்டை விட்டு வெளியே ஓடி வர முயற்சி செய்தார். அப்போது, 'ஏனய்யா, இப்படிப் பயப்படுகிறீர்? நீங்கள் ஒருவர்தான் மாஜி நடிகர் என்று எண்ணிவிட்டீரோ? பயப்படாமல் உள்ளே வாரும்' என்றது அந்த இன்னொரு குரங்கு ரூபம்!

— தமிழ்நாவரசன்

## அட, வெங்காயமே!

ஈ. வெ. ரா. பெரியாரின் பேச்சில் அடிக்கடி அடிபடும் வார்த்தைகளுக்கே எப்போதும் ஒரு தனி மகத்துவம் உண்டு. உதாரணம்: வெங்காயம், கண்ணீர்த் துளிகள்.

பச்சை வெங்காயத்தை வாயில் போட்டு நறநற வென்று கடித்துத் தின்பதால் நம்மைவிட்டு அகலுவது ஜலதோஷமும் இலேசான ஜுரமும். ஆனால் நமக்கு வருவது மண்டையில் ஏறுவது அதன் காரம். பென்சிலின், ஆரியோமைசின் போலவே வெங்காயமும் பல நோய்களைத் தீர்க்கும் என்று கண்டு பிடித்திருக்கிறார்கள் — மேல்நாடுகளில் வெங்காயத்தின் மகிமையைப் பறைசாற்றுவது ஆனியனாலஜி. ருஷியாவில் இந்த ஆனியனாலஜி சாஸ்திர ஆராய்ச்சி உச்சக் கட்டத்தை அடைந்திருக்கிறது. பல் நோயாளிகளின் வாயைச் சுத்தம் செய்ய வெங்காயத்தை மென்று தின்னச் சொல்கிறார்கள்! காயத்தையும் கட்ட புண்ணையும் ஆற்ற வெங்காயப் பசையை உபயோகிக்கிறார்கள். ரோமர்களின் காலத்திலிருந்தே இருபத்தெட்டு வகையான நோய்களைக் குணப்படுத்தக் கூடியதென்று கருதப்பட்டு வருகிறது வெங்காயம்.

வெங்காய வடையின் மூலம் எலிகளைப் பொறிகளில் பிடித்துக் கொல்லும் நமக்கு அதிர்ச்சியைத் தரும் மற்றொரு செய்தி: மேல்நாடுகளில் எலிகளுக்கு வெங்காயத்தை ஆகாரமாக நிறையக் கொடுத்து, அதன் மூலம் அவை பளபளவென்று வளருவதை, யௌவன உணர்ச்சியுடனும் திகழ்வதை ஆராய்ந்து மகிழ்கிறார்கள். அமெரிக்காவில் வெங்காயச் சத்து அதிக சம்பந்தமுள்ள அல்லிசின் என்ற மருந்தின் மூலம் நிமோனியாவையும், ஸ்கார்லெட் ஜுரத்தையும் குணமாக்குகிறார்கள்.

மேலையில் வெங்காயம் இவ்வளவு பாடுபட்டுக் கொண்டிருக்கும் போது, தேள் கடித்தால் கொட்டிய இடத்தில் வெங்காயத்தைத் தேய்ப்பதையும், உடல் சூடு தணிய வெங்காயத்தை விளக்கெண்ணெயில் வதக்கிச் சாப்பிடுவதையும் இங்கே நாம் சர்வசாதாரணமாகச் செய்து கொண்டிருக்கிறோம். ஆனால் வெங்காயத் தோலுக்கு நாம் வைத்திருக்கும் மதிப்பே அலாதி! உதாரணம்: வெங்காய சருகு சேலை! இவ்வளவு படித்த பிறகு வெங்காயம் உரித்தால் நமக்கு வருவது கண்ணீர்த் துளிகள் என்பதைக் காணுமல் விடலாமோ!

## நீல வண்ணர்கள்

ஸ்ரீமதி இந்திரா காந்தி பிரதமராவது நிச்சயம் என்று தெரிந்த நாள் முதலாகவே கர்வத்துடன் தலைநிமிர்ந்து அலட்சியமாக நடக்கும் சில பெண்மணிகள் இதைப் படித்தாலே....!

சஹாராவின் நீலவண்ணர்கள் எனப்படும் 'ரெகிபத்' இயக்கத்தைச் சார்ந்த ஆப்பிரிக்கர்கள் இந்தப் பெயர் பெற்ற காரணம், அவர்கள் முழுக்க முழுக்க நீல நிறத்தைப் பெற்றிருப்பதுதான். அவர்களில் ஆண்கள் முகமூடி (பர்தா) தரித்திருப்பர். தங்கள் மனைவிமார்களுக்கெதிரே அவர்கள் புகை பிடிப்பதோ உண்பதோ— ஏன், உட்காருவதோகூட இல்லை. மனைவிமார்கள் பேச விரும்புவதாகத் தெரிந்தால் இந்த 'ஆண் சிங்கங்கள்' வாய் பொத்தி மௌனியாகி விடுகின்றனர். பெண்களின் அல்லி ராணி தர்பார் இதோடு நின்றுவிடவில்லை. வாரிசு உரிமையே பெண்களின் வழியாகத்தானே யன்றி ஆண் வழியே அல்ல! இந்த நீலவண்ணர்களின் மொத்த ஜனத்தொகை ஐந்து லட்சம்!

— ஆர். எஸ். மணி



# நான் ஆணையிட்டால்



கருத்து மிக உன்னதமானதுதான். அதாவது, கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவன், முதலில் தான் திருந்தி, பின்னர் தன் கூட்டத்தின் தலைவனையும், சக கொள்ளைக்காரர்களையும் திருத்தி நல்லபடியாக வாழச் செய்ய எடுத்துக் கொள்ளும் முயற்சிதான் ''நான் ஆணையிட்டால்'' படத்தின் அடிப்படைக் கருத்து.

கொள்ளைக் கூட்டத்தாரைத் திருத்த விநோபா அடிகள் மேற்கொண்ட முயற்சிகள் நம் நினைவுக்கு வருகின்றன.

கருத்து இருந்துவிட்டால்மட்டும் போதுமா? அதைச் சரியானபடி போஷாக்குக் கொடுத்து வளர்த்து நிர்வகிக்கவில்லையே என்ற ஏமாற்றம்தான் இப்படத்தைப் பார்க்கும்போது ஏற்படுகிறது. 20 ரீல்கள் படம் ஓடியும் கதை துண்டு துண்டாக நிற்கிறது!

''கருத்து யாருக்கு வேணும்? கதை என்னத்துக்கு வேணும்? எம். ஜி. ஆர். இருக்காங்களா! சரோஜா தேவி இருக்காங்களா! காதல் காட்சிகள் — கட்டிப் பிடித்தல் — நெட்டித் தள்ளுதல் — இழுத்து அணைத்தல் — மேனாட்டு நடனம் — இத்யாதிகள் இருக்கின்றனவா? அது போதும்'' என்று சொல்லும் ரசிகப் பெருமக்களுக்கு இந்தப் படம் பரிபூரணத் திருப்தியளிக்கும்.

வில்லனாக வரும் எம். என். நம்பியாரும் கதாநாயகனாக வரும் எம். ஜி. ஆரும் மல்யுத்தம் புரியும் காட்சிகளும் மெய்சிலிர்க்கும்படி இருக்கின்றன!

நாகேஷ் பிரதான கதைக்கு உருப்படியாக உதவாவிட்டாலும் அவருடைய நல்ல ஹாஸ்ய நடிப்பாலும் வசனத்தாலும் அலுப்பைக் குறைத்துச் சிரிப்பை உண்டாக்குகிறார். அவருக்கு ஒரு நன்றி சொல்லவே தோன்றுகிறது.

''தாய் மேல் ஆணை; தமிழ் மேல் ஆணை— குருடர்கள் கண்ணைத் திறந்து வைப்பேன்'' என்ற வாலியின் பாடல் ரம்மியமாக இருக்கிறது.

ஓ.ஏ.கே. தேவரும், அசோகனும் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பகுதியை நன்றாகச் செய்திருக்கிறார்கள். கே. ஆர். விஜயாவுக்கு நடிக்கச் சற்று அதிக வாய்ப்பளித்திருக்கலாம்.

கதை நடக்கும் காலம் மிகப் பழைய காலம் என்பதை நினைவூட்ட போலீஸ் ஸ்டேஷனில் உள்ள ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் படம் பெரிதும் உதவி யிருக்கிறது. இல்லையேல் கதை பிடிபடுவது கஷ்டமாகத்தான் இருந்திருக்கும்.

மொத்தத்தில் சத்யாமூவீஸாரின் இப்படம் பாமரரஞ்சகமான படம் என்பதில் ஐயமில்லை.

# வக்த்

உலகம் என்னதான் விஞ்ஞான ரீதியில் முன்னேறியிருந்தாலும் மனிதன் 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' என்னும் கோட்பாட்டை நம்பவே செய்கிறான். விதியை மதியால் வெல்லலாம் என்று வாதாடும் அதே நேரத்தில் விதி வலிது என்பதையும் ஒப்புக் கொள்ளுகிறான்.

காலம் என்னும் பொருள் தரும் 'வக்த்' என்னும் ஹிந்திப் படத்தின் மையக் கருத்து இதுதான். என் செல்வங்களின் விதியை நான் வகுப்பேன் என்று எந்த விஷக்கடி வேளையில் லாலா கேதார்நாத் சூளுரைத்தாரோ, தெரியவில்லை! அடுத்த சிறிது நேரத்துக்கெல்லாம் சீரும் சிறப்புமாக வாழ்ந்த அவரது குடும்பம் பூமி அதிர்வுக்கு இலக்காகிச் சிதறுகிறது. அவரது மூன்று பையன்களும் மூவகைச் சூழ்நிலையில் வளருகிறார்கள். காலத்துக்கேற்ப, கதை வளருகிறது. போதாத காலம் பிரிக்கிறது என்றால் நல்ல காலம் ஒன்று சேர்க்கிறது.

சில கட்டங்களில் 'இப்படியும் நடக்குமா? அப்படியும் நடக்குமா?' என்று கேட்பவர்கள் சரியான கேள்வி கேட்டு மடக்கி விட்டதாக நினைத்து மகிழும் நேரத்திலேயே 'நாம் எல்லோருமே காலத்தின் கைப் பொம்மைகள்தானே ஐயா!' என்று அடித்தாற்போல் பதில் சொல்லிவிட முடியாதா? ஆயினும் 'வக்த்' படத் தயாரிப்பாளர்கள் காலத்தை மட்டும் நம்பிக் கைகட்டிக்கொண்டுஉட்கார்ந்திருக்கவில்லை. தங்கள் கையைக் கடித்து விடக் கூடாதே என்பதற்காகப் புகழ் வாய்ந்த பல நடிகர்களைப் பொறுக்கிப் போட்டிருக்கிறார்கள். சுநீல் தத், சாதனா, ராஜ்குமார், பல்ராஜ் ஸாஹ்னி, மோதிலால், சசிகபூர், சசிகலா என்று பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம். காலத்தின் கோலத்தைக் கருத்தில் கொண்டு பங்கு கொண்ட நடிகர்களும் வஞ்சனையின்றித் தங்கள் நடிப்புத் திறனைக் காட்டியிருக்கிறார்கள்! எனவே, அவர்கள் திறமையைச் சந்தேகிக்க முடியுமா? உணர்ச்சிகளைக் கிளறி விடும் பணியில் சுநீல் தத், சாதனாவோடு காமிராவையே போட்டிபோட வைத்திருக்கிறார்கள்! காலத்தோடு கைகோத்துச் செல்லும் நவீன உத்திகள், ஒளி — ஒலிப் பதிவுகள் எல்லாமே உயர்ந்த ரகம் தான். மோட்டார்ப் பந்தயம் ஒன்று போதும், விழிகளை வியப்பில் ஆழ்த்த. இவ்வளவெல்லாம் இருந்தும் இந்தப் படம் இதயத்தைத் தொடவில்லையே! காரணம், காலத்தின் கோளாறு? அல்லது அத்தனை நடிகர்களும் கடைசிக் கட்டத்தில் அமெச்சூர் நாடக — நடிகர்களாகிக் கோர்ட்டிலேயே ஒன்று சேர்ந்து கும்மி கொட்டியதா?

# 2

அவள் பெயர் சீதாவாம்; ருக்கம்மா சொன்னாள்.

பெயர் எதுவாக இருந்தாலென்ன, அந்தப் பெண் பெயரிட்டு அழைக்கத்தக்க வரம்பைக் கடந்த ஏதோ ஒரு மன நெகிழ்ச்சியின் இலக்கணமாகத் தோன்றினாள். அநாதை என்று அறிமுகம் செய்விக்கப் பட்ட நாணாவினிடம் வெறும் இரக்க உணர்ச்சியை மட்டுமே அவளுடைய விழிகள் காட்டியிருக்குமானால் நாணா அவளைப் பற்றிய சிந்தனையையே ஒதுக்கியிருப்பான். அவன் யாரிடமும் பரிதாபத்தையும் கருணையையும் எதிர்பார்க்கவில்லை. அவனுடைய நிலையைப் புரிந்து கொள்கிற பரிவையும் இங்கிதத்தையுமே அவன் நாடினான். அவற்றை அந்த விழிகள் ஏந்தி நின்றன.

''வக்கீல் மாமாவின் பெண் அவள். எப்பேர்ப்பட்ட வழக்காகத்தான் இருக்கட்டும், வக்கீல் மாமா கோர்ட்டுக்கு வந்தால் உடைத்தெறிந்து விடுவார். அவர் வக்காலத்து வாங்கி இது வரை தோற்றுப் போனார் என்று கிடையாது'' என்றாள் ருக்கம்மாள்.



# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

அவ்வளவு வாக்கு வன்மை படைத்தவரின் பெண்ணாக இருந்தும் சீதா அதிகம் பேசி நாணா பார்க்கவில்லை. வாய் ஓயாமல் பேசுபவள் கமலா தான். சீதா வெறுமே ' ஊம்' கொட்டிக் கொண்டிருப்பாள். இதை அடிக்கடி அந்த அறைப் பக்கமாய்ப் போகும் போதும் வரும் போதும் அவன் கவனித்திருக்கிறான்.

அவளும் கமலாவும் இணைபிரியவில்லை. எந்நேரமும் பாட்டும் நடனமும் தான். சமவயதினராக இருந்தும் அவர்கள் இருவருக்குள் நிறைய வேற்றுமைகள் இருந்தன. கமலா நல்ல சிவப்பு. சீதா மாநிறம்தான்.கமலா ஒல்லி; சீதா பூசினாற்போன்ற நடுத்தரம். கமலாவுக்கு உலகில் தன் தந்தையைத் தவிர மற்றவர்கள்மீது அலட்சியம். சீதா அப்படி எண்ணுவதில்லை. அநாதையான நாணாவிடம்கூட அவள் அன்பு பூணத் துடித்தாள்.

தன்னை அநாதை என்று கமலா கூறியதை எண்ணி நாணா மனம் வெதும்பினான். யார் அநாதை? யார் அதிகாரி? உலகில் எல்லாருமே அநாதைகள்தாம். கடவுள் ஒருவர்தான் நாதன். அவனுடைய அம்மாவின் சித்தாந்தம் இது.

கமலாவுக்கு இது எங்கே புரியப் போகிறது? நிமிடத்துக்கு ஓர் ஆடை புனைகிறாற் போல் நிமிடத்துக்கு ஒரு மன உணர்ச்சியைப் புனைகிற கர்வம் அவளுக்கு இயல்பாகவே அமைந்து விட்டது. அத்தானின் பெண்ணாக இருந்தும் அவள் போக்கே அலாதியாக இருந்தது. —

காவேரியின் கரையில் அமர்ந்தவாறு நாணா இவ்வாறு சிந்தனைகளை ஓட விட்டுக் கொண்டிருந்தான். காலடியில் தண்ணீர் மோதிப் புரண்டு சுழித்து ஓடியது. ஆற்றின் குறுக்கே நூறு கஜத்துக்கு ஓர் அணை கட்டி யிருந்தார்கள். கரை அரிப்பதைத் தடுப்பதற்காக அதைக் கட்டியிருக்கிறார்களாம். அந்தச் சின்ன அணைக்குப் பயந்து காவேரி மடங்கி ஓடுவது நாணாவுக்கு வியப்பாக இருந்தது. கட்டுகிற அணையைப் பொறுத்து முரட்டு வெள்ளத்தையும் அடக்கிவிடலாமென்று தோன்றியது அவனுக்கு.

ஏதோ ஓர் உண்மை பளிச்சென்று விளங்கினாற் போலிருந்தது. தன் வாழ்க்கைக்கு மிகவும் பயன்படுகிற அறிவுரை கிடைத்துவிட்டாற் போலவும் தோன்றியது.

நாணா வியப்புடன் காவேரியைப் பார்த்தான்.

அதே சமயம் அவனை வேறொருவன் பார்த்துக்கொண்டு நின்றான் கரையருகே. அவன் வந்ததை நாணா கவனிக்கவில்லை. ''பண்ணையார் வீட்டுக்கு வந்திருக்

கிறவன் நீதானு?'' என்று கேட்டான் வந்தவன்.

''ஆமாம்... நீ யார்?'' என்று வியப்புடன் கேட்டான் நாணு.

''என் பெயர் சீனு.... பயில்வான் சீனு வாஸன் என்று கூப்பிடுவார்கள் என்னை... வக்கீல் வீரராகவனின் பையன் நான்'' என்றுன் அவன்.

நாணுவுக்கு வேலூரில் அத்தானையும் முதலியாரையும் தவிர யாரையும் தெரியாது. ஆனல் வக்கீல் என்றதும் சீதாவின் தந்தையாக இருக்கலாமோ என்று எண்ணியவனய், ''சீதாவின் அண்ணனு நீ?'' என்று கேட்டான்.

''ஆமாம்'' என்றுன் சீனு.

நாணு அவனுடன் நீண்ட நாள் பழகியவன் போலப் பேசத் தொடங்கிவிட்டான். சீதாவின் அண்ணன் என்பதே நெருக்கத்துக்கான தகுதியாகப் பட்டது. சீனு வாட்டசாட்டமாக இருந்தான், பயில்வான் என்கிற அடைமொழிக்குப் பொருத்தமாக. கல்லூரியில் சேர்ந்திருந்தானும். எந்தக் கல்லூரி என்று நாணு விசாரித்ததும் அவன் சிரித்தவாறே, 'மார்ச் — செப்டம்பர் — மார்ச்'... இது தெரியாதா? டுடோரியல் கல்லூரி' என்றுன். தற்காலத்திய கல்வித் திட்டத்தின் மீது சீனுவுக்கு ஏராளமான மனத் தாங்கல் இருந்தது. முதலாவதாக இந்தக் கணக்குப் புத்தகங்களை யெல்லாம் கொண்டு வந்து காவேரியில் போட வேண்டும் என்றுன். இரண்டாவதாக மண் மூடிப் போன சாம்ராஜ்யங்களையும், மக்குப் பிளாஸ்திரிகளான மன்னர்களையும் பற்றிய சரித்திரப் புத்தகங்களைத் தீயில் போட வேண்டும் என்றுன். ஆண்டவன் கொடுத்திருக்கிற அழகான உடலை வளர்ப்பதற்கான பாடத் திட்டங்கள் குஸ்தி, கர்லா, பார், மைதானங்கள் உடனடித் தேவையாம்! சீனு பேசுவது நாணுவுக்கு வேடிக்கையாக இருந்தது. உயர்திணை அஃறிணை வேற்றுமைகள் அவனிடம் இல்லை. 'பேசுவதற்கு மனிதனுக்கு மொழி அவசியம் தான். ஆனல் இந்த இலக்கணம் எதற்காக? பல்லை உடைக்கவா?' என்று சீறினன். கமலாவைப் பற்றிப் பேச்சு வந்தபோது சீனு சொன்னன்: 'நிமிஷத்துக்கு ஒரு டிரஸ் செய்து கொள்ளுமே — அது மகா ராங்கி பிடிச்சதாச்சே!' சீதாவைப் பற்றி அவன் விமர்சனம்: 'அது ஓர் அசடு... எப்போது பார்த்தாலும் பாடிக் கொண்டிருக்கும். மற்றபடி ஒரு மண்ணுங்கட்டியும் தெரியாது அதற்கு!'

சீதாவுக்குப் பாடுவதைத் தவிர வேறு ஒன்றும் தெரிய வேண்டாம் என்றே நாணு எண்ணினன். அவனுடைய அம்மாவுக்கு எல்லாம் தெரிந்திருந்தது. அவற்றைத் தெரிந்திருந்ததால்தானே என்னவோ, அவள் வாழ்வே சுவையில்லாமற் போயிற்று!

அதிகம் தெரிந்திருப்பது ஆபத்து; தெரியாதிருப்பதும் ஆபத்துத்தான். தெரிந்தும் தெரியாத நிலையில், தெரியாதும் தெரிந்த நிலையில் இருப்பதே போதும்.

சீனு காவேரியை இரண்டாக்கினன். நாணுவுக்கு அவ்வளவு தைரியமில்லை.

''கடப்பாரை நீச்சலும், காக்காய் முழுக்கும் போடத்தான் காவேரிக்கு வந்தாயா?'' என்று சிரித்தான் சீனு.

அவனுடைய அகன்ற மார்பையும், வாளிப்பான கை கால்களையும் பார்த்தபோது மெலிந்த தன் உடலின் மீது நாணுவுக்கு வெட்கமும் வேதனையும் எழுந்தன. சீனு பலசாலி. வெள்ளம் வந்தபோது இக்கரைக்கு அக்கரை நீந்தியிருக்கிறானும். அவன் நீந்தியிருப்பான் என்பதில் நாணுவுக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

இருவரும் வீடு திரும்பினர். வழி நெடுக, தனது வீரப் பிரதாபங்களைச் சொல்லிக் கொண்டே வந்தான் சீனு. குரங்குப்பிடி என்று பல ரகசிய குஸ்திப் பிரயோகங்களைப் பலபடியாக வர்ணித்தான். தாராசிங், கிங்காங் போல அவனும் ஒரு மல் யுத்த வீரனக விளங்கப் போகிறானும். இப்படி ஒரு வீரன் தனக்கு நண்பனக வாய்த்தானே என்பதில் நாணுவுக்குப் பெருமை பிடிபடவில்லை.

ருக்கம்மா சமையற்கட்டின் நிலைவாயிலில் தலை வைத்துப் படுத்திருந்தாள். கனத்த புத்தகம் ஒன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு ராகம் போட்டுப் படித்துக்கொண்டிருந்தாள் அவள். அந்த மூக்குக் கண்ணாடிக்குள் அவளுடைய விழிகள் சோழி போலப் பெரிதாகத் தெரிந்தன.

''ருக்கம்மா, மூக்குக் கண்ணாடி உனக்கு அழகாக இருக்கிறது'' என்றுன் நாணு.

''அது ஒன்றுதான் குறைச்சல் எனக்கு'' என்றுள் அவள்.

''பசிக்கிறது... சாதம் போடு.''

''இப்போதுதான் தலையைச் சாய்த்தேன்.. இத்தனை நேரம் எங்கே போய் ஊரைச் சுற்றி விட்டு வருகிறாய்?''

''காவேரிக்குப் போய் நீச்சலடித்துவிட்டு வருகிறேன்.''

''நீச்சலா?''

''ஆமாம். ஏன் எனக்கு நீந்தத் தெரியாது என்று பார்த்தாயோ?''

ருக்கம்மா எழுந்து உட்கார்ந்தாள். ''உனக்கு நீந்தத் தெரியாது என்று நான் சொல்வேனுடாப்பா?... சுந்தரியின் பிள்ளையாச்சே நீ! அவள் என்னமா நீந்துவாள் தெரியுமோ?'' என்றுள்.

அம்மா நீச்சலில் கெட்டிக்காரியாக விளங்கிய செய்தியைக் கேட்ட நாணுவுக்குப் பெருமையாக இருந்தது. அவனிடம் அவள் இதைச் சொன்னதில்லை. இதை மட்டுமா, பல முக்கியமான செய்திகளையும் அவள் அவனிடம் சொல்லாமலேயே இருந்திருக்கிறுள் என்று தோன்றிற்று.

புத்தகத்தை மூடினுள் ருக்கம்மா. கண்ணாடியைக் கழற்றி வைத்தாள். ''கமலாவும் சாப்பிடவில்லை. அவளைக் கூப்பிட்டுக் கொண்டு வா!'' என்றுள்.

மாடிப் படி ஏறியபோது அந்த வீட்டில் கமலாவைச் சாப்பிட அழைக்கிற வேலை எவ்வாறே தனக்கு வாய்த்திருப்பதை எண்ணி அவன் சிரித்துக் கொண்டான். அவளுக்குப் பசிக்காதோ! பாட்டும் நடனமுமே போதும் என்றிருக்கிறுள் போலிருக்கிறது!

ஆனால் அவள் அறை வரையில் போய்க் கூப்பிடும் அவசியம் ஏற்படவில்லை. அவளே எதிரே வந்தாள். அவளுடன் சீதாவும் வந்தாள். ''கமலா! ருக்கம்மா உன்னைச் சாப்பிடக் கூப்பிடுகிறாள்'' என்றான்.

கமலா அதைக் காதில் வாங்கிக்கொண்டவளாகவே காட்டிக் கொள்ளாமல், ''சீதா! நீயும் இங்கேயே சாப்பிட்டுவிடேன்'' என்றாள் தோழியைப் பார்த்து.

''சரி'' என்றாள் சீதா.

நாணுவைத் தாண்டிக் கொண்டு அவர்கள் போனார்கள். அவனை அநாதையாகக் கூடக் கமலா எண்ணவில்லை. அதற்கும் கீழே, ஒரு வேலைக்காரனாகத்தான் எண்ணினாள் என்பது அவளுடைய அலட்சியத்திலிருந்து புரிந்தது. அவள் சாப்பிடக் கூப்பிட்டால் இந்தச் சீதா மறு பேச்சுப் பேசாமல், 'சரி' என்று ஏன் சொல்ல வேண்டுமோ, தெரியவில்லை. கமலாவின் ராங்கியில் கடுகளவாவது இருக்க வேண்டாமா சிநேகிதியிடம்!

''நாணு சாப்பிட வாயேன்'' என்று ருக்கம்மா கத்தினாள் சமையற்கட்டிலிருந்து.

அவன் நகரவில்லை. கமலாவுடன் சாப்பிட அவனுக்கு விருப்பமில்லை.

''உன்னைத்தாண்டா... உடம்பைப் பார்... கையும் காலும் ஈர்க்குச்சி மாதிரி!... நன்றாய்ப் பருத்து லட்சணமாக இருக்க வேண்டாமோ? இந்த உடம்போடு காவேரியில் எப்படித்தான் நீச்சல் அடித்தாயோ தெரியவில்லை!'' என்றாள் ருக்கம்மா.

கமலாவின் தலை நிமிர்ந்தது. ''நாணு நீச்சலில் கெட்டிக்காரனா, ருக்கம்மா?'' வியப்புடன் கேள்வி நிமிர்ந்தது.

''பின்னே என்னவென்று நினைத்துக் கொண்டாய் அவனை!... சுந்தரியின் பிள்ளையாடி அவன். இக்கரைக்கு அக்கரை நீந்திவிட்டு வந்திருக்கிறான்.'' ருக்கம்மா கண்ணும் மூக்கும் வைத்து அவனுடைய திறமையைப் பற்றிப் பறைசாற்றினாள்.

கமலா எழுந்து நாணுவை நோக்கி ஓடி வந்தாள். சற்று முன் அவனைத் திரும்பிப் பார்க்காமல் சென்றுவிட்ட தன் அறியாமைக்கு வருந்துபவளாக அவள் தோன்றினாள். ''நாணு நீ நீச்சலில் கெட்டிக்காரனாமே? ருக்கம்மா சொன்னாள். நாளைக்கு நானும் சீதாவும் வரோம். நீந்திக் காட்டுகிறாயா?'' என்று கேட்டாள்.

நாணு தலையை ஆட்டினான்.

''வா, சாப்பிடப் போகலாம்.''

அவளுடன் நாணு சமையற்கட்டுக்குச் சென்றான். ''மதுரையில் காவேரி ஏது? வைகை மணலில் நீந்தக் கற்றுக் கொண்டாயோ?'' என்று கேட்டுச் சிரித்தாள் அவள். பிறகு அவளாகவே, ''இந்த ஊரில் சீனுத் தடியன் தான் நன்றாக நீந்துகிறவன். நீ அவனோடு போட்டி போட்டு ஜெயித்தாயானால் பத்து ரூபாய் தருகிறேன்'' என்றாள்.

குருநாதனோடு போட்டியா? நாணுவுக்கு உள்ளூற நடுக்கம் எடுத்தாலும் அந்தப் பெண்கள் முன்னால் அந்தச் சாதனை தனக்கு மீறியதென்று கூறும் நெஞ்சுறுதி வரவில்லை. எல்லாப் புகழுரையையும் தட்டிக்கொள்ள அவன் துணிந்து விட்டான்.

''ருக்கம்மா! அவனுக்கு நிறையத் தயிர் ஊற்று... பந்தயத்தில் தோற்றுவிடப் போகிறான்!'' என்றாள் கமலா.

ருக்கம்மா சிரித்தாள். சீதாவும் சிரித்தாள். நாணு பல்லைக் கடித்தான்.

கை கழுவிவிட்டு மாடிக்கு அவன் சென்றபோது கமலாவும் சீதாவும் அறை வாயிலிலேயே நின்று கொண்டிருந்தார்கள். அவனுக்காகவே காத்து நிற்பவர்கள் போல. அவன் அலட்சியமாக அவர்களைத் தாண்டிச் செல்ல முயன்றதும், கமலாவின் குரல் அவனைத் தடுத்தது. ''நாணு, இங்கே வா.''

''என்ன?'' என்று அவன் கேட்டான் விரைப்பாக.

''உன்னிடம் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும்'' என்றாள் அவள்.

'குப்'பென்று வியர்த்துவிட்டது அவனுக்கு. கேலி செய்யப்பட்டபோது கொதித்த ரத்தம் பனிக்கட்டியாகக் குளிர்ந்துவிட்டது. கமலாவின் குரலில் இருந்த குழைவு, பரிவு,



கழிவிரக்கம் எல்லாம் அவனை உலுக்கியெடுத்து விட்டன.

''உன்னை அநாதைன்னு சொல்லிவிட்டேன்... அதுக்காக என்னை மன்னிச்சுடு.''

கமலாவால் எவ்வளவுக்கு ராங்கிக்காரியாக இருக்க முடியுமோ, அவ்வளவுக்கு மேலே பணியவும் முடியும் என்பது நாணுவுக்கு வியப்பாக இருந்தது. ஒரு பெண்ணிடம் இத்தகைய மாறுபட்ட குணங்களை அவன் கண்டதில்லை. சொல்லப் போனால் எந்தப் பெண்ணிடமும் அவன் பழகியதே இல்லை. அம்மாவே அவன் உலகமாக இருந்து விட்டாள் இதுவரை. எனவே கமலாவின் வேண்டுகோள் அவனுடைய நெஞ்சைப் பிசைந்து விட்டது.

''நீ தப்புச் செய்தால் அல்லவா உன்னை நான் மன்னிப்பதற்கு?'' என்றான் அவன்.

''உள்ளே வாயேன்!'' என்று அழைத்தாள் கமலா.

அன்று நாணுவுக்கு இசை விருந்தும், நடன ஊறுகாயும் கிட்டின. கமலாவின் நடனம் ஊறுகாயாகத்தான் அவனுக்குத் தோன்றியது. சீதாவின் குரலில் இருந்த இனிமையும், குழைவும் கமலாவின் நடனத்தில் இல்லை.

மதுரையில் அம்மாவின் நிழலில் இத்தனை காலமும் வளர்ந்த நாணு புற உலகை




# சிமெண்ட்—

# சீரான வினியோகம்...

நமக்குத் தேவையான சிமெண்ட், முன்போலவே தாமதம் தடங்கல் அன்றி கிடைக்கும் நன்னாளை கூடிய விரைவில் அடையப் போகிறோம்.

சிமெண்ட் வினியோகக் கட்டுப்பாடு நீங்கியதைத் தொடர்ந்து, மற்ற சகோதர உற்பத்தியாளர்களுடன் சேர்ந்து, பொதுமக்கள் **ராம்கோ பிராண்ட் சிமெண்ட்** தட்டுப்பாடின்றி பெறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறோம். இப் புதிய திட்டங்கள் அமுலாகி நடைமுறைக்கு வர சற்று தாமதம் நேரிடினும், கூடிய சீக்கிரம் வாடிக்கையாளர் ஒவ்வொருவரும், **ராம்கோ பிராண்ட் சிமெண்ட்** வேண்டுமளவு எளிதில் பெற்றுத் திருப்தியடைய வேண்டும் என்பதே எம் லக்ஷிய பூர்வமான நம்பிக்கையாகும்.




# மதராஸ் சிமெண்ட்ஸ் லிட்

*ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்:* ராஜபாளையம்

*தொழிற்சாலை:* துலுக்கப்பட்டி ராமநாதபுரம் ஜில்லா



LPE-Aiyars-MC-16



புது மணத் தம்பதிகள் வெளியே கிளம்பினார்கள். 'நான்தான் கார் ஓட்டப் போகிறேன்....நாம் எங்கு போய் நம் 'ஹனிமூனை'க் கழிக்கப் போகிறோம் சொல்லுங்கள், பார்க்கலாம்?' என்றாள் மனைவி.

'ஆஸ்பத்திரியில்தான்' என்றான் கணவன்.

அதிகம் பார்த்தவனில்லை. கொஞ்சம் கண் விழித்துப் பார்க்கிற வயது வந்தபோது விதி அவனுடைய பார்வையாக விளங்கிய அம்மாவைப் பறித்து விட்டது. அதன் பிறகு பயமும் கவலையுமே அவனைப் பற்றிக் கொண்டன. வேளூருக்கு வந்தது கூட அவனாகச் செய்த முடிவினால் அல்ல. அம்மா சொல்லி யிருந்தாள்: 'என் காலம் ஆனதும் நீ அத்தானிடம் போய்விடு. அவர் நல்லவர்' என்று. அதனால்தான் இங்கு வந்தான்.

அத்தான் ஊரிலே தங்குவதில்லை. அடிக்கடி வெளியூர் அலுவல்கள் அவரை இழுக்கடித்தன. அவரோடு பேசுவதற்குக்கூட அவனுக்கு வாய்ப்பே கிட்டவில்லை. வாய்ப்புக் கிட்டியிருந்தாலும் அவனால் என்ன பேசியிருக்க இயலுமென்பது வேறு விஷயம். அவருடைய கம்பீரத்துக்கு முன்னால் பேச்சு எழுமா? அவருடைய பார்வையை எதிர் நோக்க அவனால் இயலுமா? உலகத்தையே ஓரடியால் திருமால் அளந்தாராம். உலகத்தையே ஒரு பார்வையால் அத்தான் அளந்து விடுவாரென்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால் கமலாவுடன் சகஜமாக அவன் பேசத் தொடங்கி யிருந்தான். சீதாகூடத் தலையைத் தாழ்த்திக் கொள்ளாமல் இரண்டொரு பேச்சுப் பேசுவதுண்டு அவனுடன். இப்போதெல்லாம் நீச்சல் பயிற்சியை அவன் விடுவதில்லை. என்றைக்காவது ஒரு நாள் திடீரென்று கமலா வந்து கரையில் நிற்பாள் என்கிற அச்சம் உள்ளூற உந்த அந்த ஒரு நாள் வருவதற்குள் வல்லமை பெற்றுவிட அவன் முனைந்தான்.

ஒரு நாள் பொழுது போகாமல் அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தான் அவன். கமலாவின் அறையில் பாட்டு வழிந்தது. அங்கே போவோமே என்று எண்ணியவனாக எழுந்தான். ஆனால் கதவருகில் அவன் போய் நிற்பதற்குள் பாட்டு நின்றுவிட்டது. உள்ளே பேச்சுக் குரல் கேட்டது.

''கதையே ரொம்ப மோசம். எதற்காக இப்படி யெல்லாம் படம் எடுக்கிறார்களோ, தெரியவில்லை. இன்னமும் தலைவலி தீரவில்லை'' என்றாள் கமலா.

''அதையும்தானே நூறு நாள் விடாது பார்க்கிறார்கள்!'' என்றாள் சீதா.

முதல் நாள் இரவு இருவரும் வண்டி கட்டிக் கொண்டு படம் பார்க்கப் போயிருந்தார்கள். நாணுவைக்கூட அழைத்தார்கள். அவன் போகவில்லை. நெடு நேரம் நீந்தி விட்டு வந்திருந்ததால் கை காலெல்லாம் அசதியாக இருந்தது அவனுக்கு. அந்தப் படத்தைப் பற்றிய விமர்சனம்தான் அடிபடுகிறது உள்ளே. என்னதான் பேசுகிறார்கள் என்று அறியும் ஆவலுடன் நாணு வெளியிலேயே நின்றான்.

''தொந்தியும் தொப்பையுமா ஒரு ராஜகுமாரன், பூனைக் கண்ணும், சப்பை மூக்குமா ஒரு ராஜகுமாரி... இவர்களுக்காக ஒரு காட்டுமிராண்டி குரூப் டான்ஸ், போதாக்குறைக்குக் கத்திச் சண்டை, குத்துச் சண்டை வேறே'' என்றாள் கமலா தொடர்ந்து.

சீதா சிரிப்பது தெரிந்தது. உரக்க அவள் சிரிக்கவில்லைதான். ஆனால் அவள் சிரித்திருப்பாள் என்றுஉறுதியாக நாணுவுக்குத்தெரியும்.

''பாட்டைப் பாரேன்... காதல் என்பது மண்ணும், கல்யாணம் என்பது வீடாம்.... மண்ணுங்கட்டிக் காதல்!'' கமலா உரக்கச் சிரித்தாள்.

''அப்படிச் சொல்லாதே கமலா. அந்தப் பாட்டு நன்றாக இருந்தது'' என்றாள் சீதா.

நாணுகூட அந்தப் பாட்டைக் கேட்டிருக்கிறான். அதன் இசையமைப்பு சிறப்பாகவே இருந்தது. இல்லாவிட்டால் எல்லோர் வாயிலும் அது அடிபடுமா?

கமலாவுக்குக் கோபம் வந்துவிட்டது. ''பாட்டு நன்றாக இருந்தால் போதுமா? படம் பைசா பிரயோசனமில்லை. காதல், காதல்னு கூத்தடிக்கிறார்கள். என்ன காதலோ கண்றாவியோ!'' என்று சீறினாள்.

சீதா அமைதியாக ஆனால் அழுத்தமாகக் கேட்டாள். ''இவ்வளவு பேசுகிறாயே, நீ யாரையுமே காதலிக்க மாட்டாயா?''

நாணுவுக்குச் சிரிப்பை அடக்கிக்கொள்வது சிரமமாக இருந்தது. பேச்சு இவ்வளவு சுவாரசியமான வளைவில் வந்து நிற்கும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

''மாட்டேன்... எனக்குக் காதலும் வேண்டாம், கல்யாணமும் வேண்டாம்... தா! தா: என்ன காதல் வேண்டியிருக்கிறது!'' என்று முகம் சுளித்தாள் கமலா. பிறகு தொடர்ந்தாள்: ''ருக்கம்மா சொன்னாள், காதலைப் பத்தியே நாமெல்லாம் பேசக் கூடாதாம். ஸ்ரீ ராமபிரான் சீதா தேவி மேல் வைத்திருந்த அன்புதான் உண்மையான காதலாம். ஆனால் அவ்வளவு அன்பாக இருந்ததற்கு ராமபிரான் எவ்வளவு கஷ்டப்பட்டார்! காதல்னு ரொம்பவும் கஷ்டம்தானாம்.''

சீதா ஒன்றும் சொல்லவில்லை. அவளுக்குக் கமலாவை விடக் காதலைப் பற்றி அதிகம் தெரிந்திருக்க நியாயமில்லை. ஆனால் தனக்குத் தெரிந்ததைக்கூடச் சபலத்தில் சொல்லிவிடுபவள் அல்ல அவள்.

''என்னைக் கேட்டால், காதலே கிடையாது, கல்யாணமும் கூடாது. நய் நய்னு குழந்தை குட்டி பெற்றுக் கொண்டு சுகமில்லாமல் வாழணுமாடி? அந்த அவஸ்தை எதற்காக?'' என்றாள் கமலா.

அவள் பேசியதைப் பார்த்தால் இந்தப் பிரச்னையை இதற்கு முன்பே அவள் ஆராய்ந்துதானிருந்தாள் என்று தெரிந்தது. காதல் துயரங்களில் முளைத்துத் துயரமாகவே முடிவது என்பது அவளுடைய கருத்து.

இவ்வளவு நேரமும் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்த சீதா பேசலானாள்: ''அப்படிச் சொல்லாதே கமலா. ஸ்ரீ ராமபிரான் கஷ்டப்பட்டார். ஆனால் அதெல்லாம் அவருடைய அன்பை உயர்த்திக் காட்டிற்று இல்லையா?... காதல் தெய்வீகமானது...நீ சொல்கிறாற் போல் கஷ்டங்களின் பிறப்பிடம் அல்ல அது.''

உலகத்திலே?' பதிலாக இல்லாமல் கேள்வியாக வெளிப்பட்ட அந்த விளக்கம் அவனுடைய கேள்வியைத் தின்றுவிட்டது. அதன் பிறகு அதை ஆராய அவன் புகுந்ததில்லை.

சீதா கூறியது போல் அது தெய்வீகமானதா? அல்லது கமலா வெறுத்தது போல் துயரமானதா?

அவனுக்கு வியப்பாக இருந்தது. அவனுள் ஏதோ ஒரு மாற்றம் நிகழ்ந்து கொண்டிருந்தது போலும்! அது தன்னை, தன் சூழ்நிலையை மறந்து காதலைப் பற்றி ஆராய்ந்தது. மனசின் விழிப்பு மட்டுமல்ல அடிப்படைக் காரணம். அதுவாக இருந்தால் அம்மாவின் எதிர்க் கேள்வியே போதுமானது இல்லையா?

ஒரு கணம் குப்பென்று வியர்த்துவிட்டது அவனுக்கு. ''ஊஹும்... நான்... நான்... காதல் ஏது உலகத்திலே?...அதுவும் எனக்கு?''

நினைவுச் சுமை, சுமையின் நினைவு அவனை அழுத்திற்று. பெருமூச்சு கடலலை போல அறைச் சுவரில் மோதிற்று. பிறகு மெல்ல மெல்ல, மேல் விட்டத்தையும் மோதிற்று.

அவனால் அந்தப் பெருமூச்சுக் கடலில் நீந்தவும் முடியவில்லை; மிதக்கவும் முடியவில்லை.



''ஏண்டாப்பா! எல்லாக் காரியமும் முடிஞ்சு போனப்புறம் இப்படி லேட்டா ஆபீஸுக்கு அவசரம் அவசரமாக வர்றயே, முன்னாலே நீ எங்கே வேலை செய்தாய்?''

''தீயணைக்கும் படையிலே இருந்தேனுங்க!''

''மண்ணாங்கட்டி!'' கமலா மறுத்தாள்.

''மனசிலேதான் காதல் பிறக்கும். அதை நீ மறைக்க முடியாது. ஆனால் அது மறைவாகவே இருந்து உன்னை மறைத்துவிடும்.''

''அதைத்தான் பார்த்துவிடுவோமே!''

''நான் பந்தயம் போடவில்லையம்மா. நீ கோபித்துக் கொள்ளாதே!''

இருவரும் சிரித்தனர்.

நாணு அங்கிருந்து நகர்ந்தான். இனியும் நின்றால் ஆபத்து. இவ்வளவு நேரம் கமலாவின் கண்ணில் படாமல் தப்பித்ததே பெரிது.

அறையை அடைந்தான். இனம் புரியாத படபடப்பு அவனை ஆட்கொண்டது. ஒரு முறை வாய் விட்டு உரக்கச் சிரித்தான். ஆனால் சிரிப்பின் இறுதியில் பெருமூச்சு சிக்கிக் கொண்டு விட்டாற்போலிருந்தது.

அவன் தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்: 'காதல் என்றால் என்ன?'

முதன் முதலாக இப்போதுதான் அந்தக் கேள்வியை அவன் கேட்கிறான் என்று சொல்ல முடியாது. ஓர் ஆண்டுக்கு முன்புகூட அவன் கேட்டதுண்டு. அப்போது அவனுடைய அம்மா பதில் சொன்னாள். 'காதலா? அப்படி ஒன்று இருக்கிறதாப்பா

'வேண்டாம், நாணு...நீ காதலைப் பற்றிச் சிந்திக்க வேண்டாம், அது உனக்கு ஏற்றதில்லை' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான் நாணு. அது எதுவாக இருந்தாலும் சரி. அவனுக்கு அது ஏற்றதல்ல. அவனால் அந்தக் கடலில் நீந்த முடியாது.

அவன் எழுந்தான். தாற்காலிகமாக அவனை ஆட்கொண்ட அந்தப் புதிருக்கு விடை கண்டு பிடித்தாயிற்று. உண்மையான அன்பு என்பது அம்மாவின் கருத்துப்படி, இந்த உலகில் இல்லை. நாணு போன்ற ஏழைச் சிறுவனுக்கு அது ஆகாயத் தாமரை. மற்றப்படி அது தெய்வீகமானதாகவோ மண்ணாங்கட்டியாகவோ எதுவாக இருந்தாலும் அவன் அதை நாடப் போவதில்லை. அந்தக் காதலுக்கு வல்லமை இருந்தால் அதுவே அவனை வெல்லட்டும். அவன் அதன் வழிக்குப் போகப் போவதில்லை.

மீண்டும் அந்த அறை வழியாக மாடிப் படிகளை நோக்கி அவன் நடந்தபோது உள்ளே சீதாவின் பாட்டும் கமலாவின் நடனமும்தான் காதில் விழுந்தன.

காதல்?

அது போயே போய் விட்டது! (தொடரும்)

# ஆல்போ-ஸாங்



**எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்**

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விரோதப் பொருட்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.




**ஜே. அன் ஜே. டிஷேன்**
ஹைதராபாத் (டெக்கான்)

---

# கால்கேட் டூத் பிரஷ்

**மேலும் துப்புரவாக உங்கள் பற்களை சுத்தம் செய்யும்படி**
அமைக்கப்பட்டிருக்கிறது!

4 சைஸ்கள் - அடல்ட் - ஜூனியர் - சைல்ட் - பேபி
ஹார்ட் - மீடியம் - ஸாப்ட்

ஸ்டரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸல்கள் உறுதியாகப் பொருத்தப்பட்டபடியால் அதிக நாள் உழைக்கக்கூடியது!






**புதியது மிகவும் கவர்ச்சியானது!! கால்கேட் சூபர் டீலக்ஸ் டூத் பிரஷ்**

கவர்ச்சியான, நவீன பெட்டியில்......விசேஷமான உருவமைப்புடன் அதிகமான பிரஸில்களைக் கொண்ட முன் நயமையாக வேலைகளைச் செய்யும் டூத் பிரஷ்!

வாய் துர்நாற்றத்தை அகற்ற கால்கேட் காட்டும் வழி

TBC-18 TAM



"கோவையில் ஒரு புதிய தொழிலகம் திறக்கிறார்கள். முதன் மந்திரி பக்தவத்ஸலம் அவர்கள் திறந்து வைக்கப் போகிறார்கள் விமானத்தில். அந்த விமானத்தில் உனக்கும் இடம் இருக்கிறது. போகிறாயா?'' என்று கேட்டால் யாரால் மறுக்க முடியும்? விமானப் பயணத்தை உத்தேசித்தாகிலும் ஒத்துக் கொள்ள வேண்டியதுதானே என்று நினைப்பீர்கள். அப்படியல்ல. உண்மையில் தொழிற்கூடம் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கிறதே என்றுதான் ஒப்புக் கொண்டேன். ஆம். தொழிற்கூடம் பார்க்கும் ஆர்வத்தில் திரும்பி வரும் விமானப் பிரயாணத்தைத் தவற விட்டு, மறு நாள் சென்னைக்கு ரயிலில் திரும்பினேன்!

விழா முடிந்ததும் முதன் மந்திரி பக்தவத்ஸலம் அவர்கள், ஒரு விநாடி தாமதிக்காமல், கோவை விமான நிலையத்துக்குத் திரும்பினார்கள். நான் தொழிற்கூடம் பார்த்து விட்டுப் போகலாம் என்று உள்ளே நுழைந்தேன். விமானத்தைத் தவறவிடும்படியாகி விட்டது!

கோவையில் இரண்டு அதிசயங்கள் காணலாம். தண்ணீரே கிடைக்காத அந்த ஜில்லாவில் தண்ணீரை நம்பியே இருக்கக் கூடிய விவசாயமும், தொழில்களும் பல்கிப் பெருகியிருக்கின்றன. விவசாயத்தில் கவுண்டர்மார்களும், தொழில்துறையில் நாயக்கர்மார்களும் மகத்தான பணி புரிந்திருக்கிறார்கள்! இந்த வளர்ச்சிக்குக் காரணம் அவர்களது இடைவிடாத உழைப்பே! அதல பாதாளத்திலிருந்து தண்ணீர் கொண்டு வந்து, அவர்கள் சாதித்துள்ள சாதனைகள் அபாரம்! அவ்வழியில் கோவை லட்சுமி மில்சார், தொழில் துறையில் ஒரு புதிய படியில் அடியெடுத்து வைக்கிறார்கள் என்று



# கோவையில் ஒரு புதிய தொழிலகம்

எஸ்.வி.எஸ்



அறியும் போது தனியானதோர் உற்சாகம் ஏற்படுவது இயல்பேயல்லவா ?

அந்தப் படிதான் — நூற்புத் தொழிலுக்கான யந்திரங்களை, கோவையிலேயே செய்யும் புதிய தொழிற்கூடத்தை லக்ஷ்மி மில்லார் தொடங்கியிருக்கிறார்கள்.

லக்ஷ்மி மில்லின் முக்கிய அதிபர்களான ஸ்ரீமான்கள் ஜி. கே. தேவராஜுலு, ஜி. கே. சுந்தரம், கே. ராஜகோபால் மூவரும் இத்தொழிலில் நீண்ட அநுபவமும், நல்ல பெயரும், செல்வாக்கும் பெற்றவர்கள். இவர்களது அசாத்திய செயல் திறமை காரணமாகப் பல்லடம், கோவில்பட்டி முதலிய ஊர்களில் கிளை மில்கள் தொடங்கி வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள்.

இப்படி அநுபவப்பட்டவர்கள் இந்தத் தொழிலுக்கு வேண்டிய யந்திரங்களையும், வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்வதற்குப் பதில் நம்நாட்டிலேயே உற்பத்தி செய்ய வேண்டும் என்று கருதியதில் வியப்பில்லை. அப்படித் தீர்மானிக்கும் போது, யாருடன் அவர்கள் உதவிபெற முடியும்— சென்ற நாற்பத்தைந்து வருடங்களாகத் தங்கள் நெசவு — நூற்பு ஆலைகளுக்காக யந்திரங்களை மேனாட்டில் எந்தக் கம்பெனியாரிடம் வாங்கி வந்தார்களோ, அவர்களையே உதவி கோரினார்கள். அவர்களும் மனமுவந்து இணங்கி யிருக்கிறார்கள்.

எதிர்ப் பக்கத்தில் :

மேலே : 56 கதிர்கள் கொண்ட மாதிரி யந்திரத்தை முதன் மந்திரி பக்தவத்ஸலம் பார்வையிடுகிறார். கம்பெனியில் பங்கு பற்றியுள்ள மேனாட்டுத் தொழில் நிபுணர் யந்திர சாலையின் நுட்பங்களை விளக்குகிறார்.

கீழே : பெரிய நாயக்கன்பாளையத்தில் புதிதாகத் தோன்றியுள்ள "லட்சுமி ரீட்டர் மிஷன் ஒர்க்ஸ்" தொழிற்சாலையின் தோற்றம்.

திரு ஜி. கே. சுந்தரம்

(மானேஜிங் ஏஜண்ட்)



○●○

திரு ஜி. கே. தேவராஜுலு

(மானேஜிங் டைரக்டர்)



ஸ்விட்ஸர்லாந்து தேசத்து ரீட்டர் கம்பெனியார், நூற்பு யந்திரங்கள் செய்வதில் உலகிலேயே மிகவும் புகழ் எய்தியவர்கள். உலகில் சுமார் அறுபது நாடுகளுக்கு மேலாக, அவர்கள் தங்கள் யந்திரங்களை விற்பனை செய்திருக்கிறார்கள். இவர்கள் யந்திரங்களை விற்பார்களே தவிர, உலகில் வேறு எந்த நாட்டுடனும், கூட்டு சேர்ந்து நூல் ஆலைத் தொழிலுக்கான யந்திரங்களை உற்பத்தி செய்ய உதவியது கிடையாது. முதன் முதலாக இப்பொழுது தான் லட்சுமி மில்லாருடன் சேர்ந்து "லக்ஷ்மி ரீட்டர் மெஷின் ஒர்க்ஸ்" என்ற பெயரில் மூலதனம் போட்டு, தொழில் நுட்பஅறிவும் வழங்கி, யந்திர உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம், திரு தேவராஜுலு, திரு சுந்தரம் ஆகியவர்கள் மேற்படி கம்பெனியாரிடம் சென்ற நாற்பதாண்டுகளாகத் தொடர்பு கொண்டு நேர்மையாக நடந்து கொண்டதுதான் என்பதை யாரும் புரிந்து கொள்ளலாம். ஏனெனில், ரீட்டர் கம்பெனியார் இம்மாதிரி விஷயங்களில் அதிகம் ஈடுபடாமல் தங்கள் வேலை உண்டு தாங்கள் உண்டு என்றிருப்பவர்கள் என்பதாக ஏற்கனவே பெயர் எடுத்தவர்கள். அவர்களை நம் நாட்டில் மூலதனம் போடச் செய்து, தொழில் துறையில் பங்கு கொள்ளச் செய்வது என்பது எளிதான காரியமா?



மந்திரி பக்தவத்ஸலம் திறப்பு விழாப் பேருரை நிகழ்த்துகிறார். அவருக்குப் பக்கத்தில் தலையில் கறுப்புக் குல்லாயுடன் அமர்ந்திருப்பவர்தான் விழாத் தலைவர் ஸ்ரீ தாக்கர்ஸே.

இதில் பெருமளவு ப்பருமை வோல்டாஸ் கம்பெனியாருக்கும் நாம் வழங்க வேண்டியதுதான். அவர்கள்தான், ரீட்டர் கம்பெனியாரின், இந்திய ஏஜண்டுகள். அவர்கள் மூலம்தான் ரீட்டர் கம்பெனியார் தங்கள் யந்திரங்களை லக்ஷ்மி மில்லாருக்கு விற்று வந்திருக்கிறார்கள். அவர்கள்தான், இந்தியாவில் கோவையில் இத்தொழிற்கூடம் ஆரம்பிக்கப் பெரும் உதவி புரிந்தவர்கள். அத்துடன், இனி இப்புதிய தொழிற்கூடத்தில் உற்பத்தியாக இருக்கும் யந்திரங்களை விற்கும் ஏஜண்டுகளாகவும் தொடர்ந்து பணியாற்றப் போகிறார்கள். இப்பணியை, இவ்வாலை தொடங்கப்பட்ட 29–1–66 அன்றே ஆரம்பித்து விட்டார்கள்! மூன்று நூல் ஆலைத் தொழிலதிபர்களுக்கு மூன்று யந்திரங்களை விற்று விட்டிருக்கிறார்கள்! வாங்கிய மூவரும், மேடைக்கு வந்து, வோல்டாஸ் கம்பெனி டைரக்டரிடம் கிரயத்தைச் செக்காக வழங்கிய போது, கூடியிருந்த இரண்டாயிரம் பேர்களுக்கும் அளவுகடந்த மகிழ்ச்சி ஏற்பட்டது.

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் போகும் வழியில் பதினைந்து மைல் தூரத்தில் பெரியநாயக்கன் பாளையம் என்ற ஓர் ஊர் உள்ளது. ஆனால், சாலையை ஒட்டினாற் போல் ரயில் தண்டவாளம் செல்கிறது. தண்டவாளத்துக்கப்பால் பரந்த நிலத்தில் தொழிற்கூடம் இருக்கிறது. இத்தொழிற்கூடத்தைப் பிரதான சாலையிலிருந்து அடைய, தண்டவாளத்துக்குக் கீழாக, குடைந்து பெரிய சாலை அமைத்திருக்கிறார்கள். இந்தப் பாலமும் சாலையும் அமைக்கவே, இரண்டரை லட்ச ரூபாய்க்கு மேல் ஆகியிருக்கிறது. அப்படியானால் இத்தொழிற்கூடத்துக்கு முதல் எவ்வளவு போட்டிருப்பார்கள் என்று ஊகிக்க முடிகிறதா ?

சுமார் இரண்டரைக் கோடி ரூபாய் மூலதனத்தில் தொடங்கப்பட்டுள்ளது இந்த நிறுவனம்.

இப்பொழுதெல்லாம் ஒரு புதிய நிறுவனம் தொடங்க வேண்டுமெனில் அதற்கு அந்நியச் செலாவணி தேவைப்படுகிறதல்லவா? இது கிடைப்பது எவ்வளவு கஷ்டம் — குதிரைக் கொம்பான விஷயம் — என்பது இன்று சாதாரண பாமரனுக்குத் தெரிந்துள்ள செய்தி. ஆனால் லக்ஷ்மி மில்லாரின் தனிப்பட்ட சீலமும் நற்பெயரும் இங்கும் துணை நின்றிருக்கின்றன. பம்பாயில் உள்ள தொழில்நிறுவனங்களுக்குக் கடனுதவி புரியும் கார்ப்பரேஷன் நாற்பது லட்ச ரூபாய் அந்நியச் செலாவணியும், பதினைந்து லட்ச ரூபாய் கடனும் கொடுத்து உதவியிருக்கிறது. அதே போல் அமெரிக்காவில் வாஷிங்டனில் உள்ள இண்டர் நேஷனல் பைனான்ஸ் கார்ப்பரேஷன் 45,88,800 ரூபாய்க்கு அந்நியச் செலாவணி கொடுத்து உதவியிருக்கிறது. 'தட்டினால் திறக்கப்படும், கேட்டால் கொடுக்கப்படும்' என்ற முறையில் லட்சுமி ரீட்டர் தொழிலகத்தாருக்கு எங்கும் உதவியும், ஒத்துழைப்பும் கிடைத்துள்ளன. அதேபோல் இத்தொழிலில் மிகுந்த அனுபவமும் இத்தொழிலில் ஈடுபட்ட அனைவருக்கும் மூத்த சகோதரர் என்றும் கௌரவிக்கப்படும் ஸ்ரீமான் கிருஷ்ணராஜ் தாக்கர்ஸே இத்தொழிலகத்தின் திறப்புவிழா வைபவத்துக்குத் தலைமை வகித்து நடத்திக் கொடுக்க பம்பாயிலிருந்து வந்திருந்தது பெரிய கௌரவமாகும். அவர் தமது தலைமையுரையில் ஒரு கருத்தை வெளியிட்டார். அது அனைவரது சிந்தனையையும் தூண்டக்கூடியதாகும். அவர் சொன்னதாவது:

''உலகில் பருத்திச் சாகுபடியையோ, துணி நெய்யும் தொழிற்சாலைகளையோ பெற்றிராத நாடுகள் எல்லாம் ஆடை நெய்யும் தொழில்களுக்கான யந்திரங்களை உற்பத்தி செய்து பிற நாடுகளில் வியாபாரம் செய்யும் போது பருத்திச் சாகுபடியும், நூற்பு, நெசவுத் தொழில் கூடங்களும் பெருவாரியாக உள்ள நம் நாட்டில் அவற்றுக்குத் தேவையான யந்திரங்களைச் செய்யாதிருப்பது மிகவும் துர்ப்பாக்கியமாகும்'' என்று குறிப்பிட்டார். அந்த அவல நிலையைத் தென்னகத்தில் லக்ஷ்மி மில்லார் போக்க முன்வந்திருப்பதைப் பற்றிப் பெருமகிழ்ச்சியுற்று ஆசி வழங்கினார்.

இந்தத் தொழிற்கூடத்தைத் தொடங்கி விட்டார்களே, இயக்க என்ன செய்யப் போகிறார்கள்? மேனாட்டிலிருந்துதான் தொழில் நுட்ப வினைஞர்களை அழைத்து வரப் போகிறார்களா என்ற கேள்வி எழலாம். அதற்கு விடையளிக்கும் வகையில் நல்லதோர் ஏற்பாடு ஏற்கனவே செய்து வைத்திருக்கிறார்கள். இங்கிருந்து சுமார் 27 நூற்புத் தொழில் இயல் என்ஜினீயர்களை ஸ்விட்ஜர்லாந்து நாட்டுக்குப் பயிற்சி பெற அனுப்பியிருக்கிறார்கள். அவர்களில் 19 பேர் பயிற்சி பெற்று இங்கு வந்திருக்கிறார்கள். பயிற்சி 12 முதல் 30 மாதங்கள்வரை அவரவர் தகுதிக்கேற்ப அளிக்கப்படுகிறதாம். இப் பயிற்சிக் காலத்தில் நமது என்ஜினியரிங் இளைஞர்கள் கஷ்டப்பட்டு உழைத்து, கற்க வேண்டியதைக் கற்று அந்நாட்டு விற்பன்னர்களின் பாராட்டு

கலையும் பெற்று இந்நிறுவனத்துக்கும் நல்ல பெயர் தேடித் தந்திருக்கிறார்கள்.

இவ்வாறு திரு ஜி. கே. தேவராஜுலு தமது வரவேற்பு உரையில் அறிவித்தபோது ஒவ்வொருவர் உள்ளமும் பெருமிதத்தால் விம்மியது. அத்துடன் நம் இளைஞர்கள், அந்நாட்டு மொழியினை வெகு சீக்கிரமாகக் கிரகித்துப் பேசியது அங்கெல்லாம் ஒரே வியப்பாக இருந்திருக்கிறதாம்.

நம் நாட்டில் நூற்புத் தொழில் நூறு ஆண்டுகளுக்கு மேலாக இருக்கிறது. நூல் உற்பத்தியிலும், துணி நெசவிலும் நாம் நம் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொண்டு மேனாட்டுக்கும் விற்பனை செய்து அந்நியச் செலாவணி சம்பாதிக்கும் நிலையில் இருக்கிறோம் என்பதில் பெருமைப்படலாம். பஞ்சாடைகள், நூல்கள் மட்டுமல்ல, தற்கால ரேயான், நைலான் ஆடைகள் செய்வதிலும் நாம் மேனாட்டினருடன் போட்டி போடும் நிலையில் இருக்கிறோம். ஆனால் நூற்பு—நெசவு ஆலைகளுக்குத் தேவையான யந்திர சாதனங்களுக்கு இதுகாறும் மேனாட்டையே நம்பியிருந்தோம். இனி உள் நாட்டிலேயே கிடைக்க வழி பிறந்து விட்டது! இப்படி இத்துறையில் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்வதோடு அந்நியச் செலாவணியை மிச்சம் பிடிக்க வழிவகுத்தாகி விட்டது.

1966ம் ஆண்டு உற்பத்திப்பெருக்கும் ஆண்டாக அரசாங்கம் அறிவித்திருக்கிறது. எல்லாத் துறைகளிலும் உற்பத்திப் பெருக்க வேண்டும் என்பது அரசாங்கத்தின் குறிக்கோள். அதற்கேற்ப லக்ஷ்மி-ரீட்டர்ஸ் யந்திரங்களும் பெருகி நாடு முழுவதும் பரவ வேண்டும் என்று விழைகிறோம். தென்னகத்தில் தொழில் வளத்தைப் பெருக்கி லட்சுமிதேவி அருள் பாலிக்க வேண்டும் என்று விழைகிறோம்.

## நேசக் கரம்: நள்ளிரவு உதவி



வசதி குறித்தும், விரைவு கருதியும் அந்த நெடுந்தூரப் பயணத்தை ஸ்கூட்டரிலேயே முடித்துக் கொள்ளக் கருதிப் புறப்பட்டேன்.

உடுமலைக்கும் கோவைக்குமிடையே மழையால் நான் அவதிப்பட்டேன். நேரம் ஆகிக் கொண்டே இருந்தது. ஆனால் மழை ஓயவில்லை. இரவு நேரம்; கருகும்மென்ற இருட்டு.

ஸ்கூட்டரை நான் நேர் வழியிலே செலுத்தியும் அது செல்ல மறுத்துச் சாலையின் இருபுறமும் மாறி மாறி ஓடியது. காரணம் பின்புறம் 'பஞ்சர்!'

பின்புறம் சக்கரத்தைக் கழற்றிய பின்னர் 'ஸ்டெப்னி'யை எடுத்தேன். எடுத்தவுடன் எனக்கு மயக்கமே வரும் போலிருந்தது. ஸ்டெப்னியும் பஞ்சர்!

சில நாட்களுக்கு முன்பு பஞ்சரான ஸ்டெப்னியைச் சரி செய்ய மறந்ததற்காக என்னை நானே நொந்து கொண்டேன்.

ஸ்கூட்டரைத் தள்ளிக் கொண்டு எவ்வளவு தூரம் நடப்பது? அதிலும் பஞ்சரான சக்கரத்துடன்?

சரி, ஸ்டெப்னியை எடுத்துப்போய் 'பஞ்சர்' அடைத்துவரலாமா? அப்படிப் போவதாயிருந்தால் நடப்பதைத்தவிர வேறு வழி கிடையாது. நள்ளிரவில் கார்களையும் காணோம். பிரயாணிகள் பஸ்...மூச்! ஏதாவது லாரியில் தொற்றிக்கொண்டு போனாலும் அந்த நள்ளிரவில் பஞ்சர் போட்டுத் தர யார் முன்வரப் போகிறார்கள்?

வானம் மீண்டும் அழத் தொடங்கியது. என்ன இரக்கம்! தொப்பல் தொப்பலாக நனைந்தேன் நான். எங்கும் வீடு இருப்பதாகவும் தோன்றவில்லை. மணி பன்னிரண்டும் ஆகியது. வெளிச்சம் தென்பட்டது. சாலைக்கு நடுவே வந்து அந்த வெளிச்சத்துக்குரிய வாகனத்தை நிறுத்தினேன். அதுவும் ஒரு ஸ்கூட்டர்!

அந்த ஸ்கூட்டர்க்காரரிடம் எனது நிலைமையை விளக்கினேன். அவர் சில நிமிடங்கள் யோசனை புரிந்தார். பின்னர் தமது ஸ்டெப்னியை எடுத்து உபயோகித்துக் கொள்ளச் சொன்னார். எனக்குத் தாள முடியாத வியப்பு. என்னால் நம்பவே முடியவில்லை. முன்பின் தெரியாத ஒருவரை நம்பி, அவரிடம் எழுபது ரூபாய் மதிக்கத் தக்க ஸ்டெப்னியைத் தருகிறாரே! மேலும் அவருக்கே அந்த ஸ்டெப்னி எந்த நிமிடத்திலும் தேவைப்படலாம் அல்லவா? ஒரு வாரம் கழித்தே அதைத் திரும்பப் பெற்றுக் கொண்டார்.

சாலையில் நிற்பவர்களைச் சரிவரப் பார்க்காமல் போவதே நாகரிகம் என்று பலர் நினைக்கும் இந்தக் காலத்தில் அத்துணை அரும்பெரும் உதவி செய்த நண்பரை என்னால் எப்படி மறக்க முடியும்?

**வி. கிருஷ்ணசாமி**
பட்டணம்

# ஜீவகீதம்

## ஜெயகாந்தன்

அத்தியாயம் அறுபது

## வேதாவின் தந்தை

தம்பையா சிரித்துக் கொண்டே தொடர்ந்து சொன்னான்: ''அந்தப் பொண்ணை அபேஸ் பண்ணிக்கிட்டுப் போயிட்டேனா?... அடுத்த நாள்...'ஆ, போலீசு, கிலீசு'ன்னு உதார் விட்டு, மிரட்டிப் பார்த்தான் மருதமுத்து. நம்பகிட்டயா ஜம்பம் பலிக்கும்? மேஜரான பொண்ணு; யாரு இன்ன பண்ண முடியும்? மோடவாக்கம் டாங்க் ரோட்டிலே ஒரு வீடு எடுத்துப் பொண்ணைக் கொண்டு போய்ப் பத்திரப்படுத்தி வைச்சுட்டேன். காவலுக்கு நம்ம பொடிப் பசங்க ரெண்டு பேரைப் போட்டுட்டேன். எவனும் கிட்ட நாட முடியலே! ...தொரை, அந்த ஏழெட்டு மாசம் தாண்டா நான் மனுஷ வாழ்க்கையே வாழ்ந்தேன்!... இன்ன குஷி, இன்ன சுகம்!... இப்படி ஒழுங்காக் குடும்பம்



நடத்திக்கிட்டு இருந்த என்னை ஒழிச்சுக் கட்டத் திட்டம் போட்டான் மருதமுத்து. அது அப்படி ஒண்ணும் பெரிய திட்டமில்லே. அவனோட அடியாள் ஒருத்தனை விட்டு என்னை வழி மடக்கி வம்புச் சண்டை இழுக்க வைச்சான். அண்ணைக்கு என்னமோ எனக்குக் கொஞ்சம் கோவம் வந்துடிச்சு. வழி மடக்கின பையனைச் சும்மா ஒரு தட்டுத் தட்டினேன். மண்டை கிழிஞ்சு போச்சு. நேரே போலீசுக்கு ஓடி ரிப்போர்ட் பண்ணிப்பிட்டான். எல்லாம் மருதமுத்து தான் பின்னாலே யிருந்து அதைச் செய்தான். கேசு நடந்துச்சு. ஒரு வருஷம் என்னை உள்ளே தள்ளிப்பிட்டாங்க. எனக்கு அது ஒண்ணும் பெரிசில்லே. அதுக்காக நான் கவலைப்படவும் இல்லே. பாவம், அந்தப் பொண்ணு அநாதையாப் போயிட்டாளே. அத்தோட அவள் எட்டு மாசம் கர்ப்பிணி வேறே.''

தம்பையாவின் தொண்டை அடைத்துக் கொண்டது. சற்று நேரம் பேசாமல் இருந்த அவன் கம்மிய குரலில் மேலும் சொன்னான்: ''அப்புறம் இன்னடா? அந்தப் பொண்ணு என் சிநேகிதக்காரங்களுடைய உதவியாலே ரொம்பச் சாமர்த்தியமாத்தான் நாளைத் தள்ளிக்கிட்டு வந்திருக்குது. பத்தாம் மாசம் ஒரு பொண் குழந்தையையும் பெத்து எடுத்திருக்குது. இது மருதமுத்துவுக்கு ரொம்ப அவமானமாப் போச்சாம். அவன் வந்து அவளை உருட்டி மிரட்டி ஊரை விட்டே ஓடிப் போயிடும்படி கலாட்டா பண்ணியிருக்கிறான்; அதையும் சமாளிச்சுக்கிட்டு அவள் இருந்திருக்கிறாள். அப்புறம் அந்தக் குழந்தையைக் கொன்னுப் போட்டுப்பிடுவேன்னு பயமுறுத்தினானும். நான் திரும்பி வர இன்னும் ஆறு மாசம் பாக்கி இருந்திச்சு. அதுவரை அவள் எப்படிக் காலம் தள்ளுவாள்? தம்பிக்காரனுடைய இம்சை பொறுக்க முடியலே. குழந்தையைத் தூக்கிக்கிட்டு எங்கோ ஓடிப் போயிட்டாள். ஒரு வருஷம் கழிச்சு நான் வந்து பார்த்தா, வீடு பூட்டிக் கிடக்குது. எங்கெங்கேயோ தேடிப் பார்த்தேன். ஒரு தகவலும் கிடைக்கலே. அதோடு நான் ஆளே மாறிப் போயிட்டேன். எனக்கு உலகம் வெறுத்துப் போச்சு. வாழ்க்கை கசந்து போச்சு. எந்த வம்பு தும்புக்கும் போகிறதை அடியோட விட்டுட்டேன். அதுக்கு முன்னாடி யெல்லாம் நான் தண்ணி போடற பழக்கமில்லே. உடம்பு கட்டுவிட்டுப் பிடும்னு அதைத் தொடறதில்லே. அதுக்கப்புறம்தான் ஆரம்பிச்சேன். இல்லேன்னு எனக்குப் பைத்தியமே பிடிச்சுடும் போல இருந்திச்சு. இப்பக்கூட அதிலேதான் இருக்குது. இரு, இதோ வர்றேன்.''

சடாரென்று எழுந்த தம்பையா தள்ளாடியவாறு உள் அறைக்குப் போய்ச் சற்றைக்கெல்லாம் சிவந்த கண்ணும், புதிய மிடுக்குமாகத் தள்ளாடித் தள்ளாடித் திரும்பி வந்து கட்டிலில் உட்கார்ந்தான்.

கீழே கிடந்த புகைப்படத்தை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்த நச்சி, ''அப்ப டன்னு அந்தச் சிவகாமி என்கிறவங்க இந்த அம்மாதானா வாத்தியாரே?'' என்று தணிந்த குரலில் கேட்டான்.

''ஆமாண்டா!'' என்று அலட்சியமாகத் தலையாட்டிய தம்பையா, ''அது சரி; அவள் தான்னு எப்படித் தெரிஞ்சு இந்தப் படத்தை நீ என்னிடம் கொண்டு வந்து காட்டினே?'' என்று கண்களை உள்ளே இடுக்கியவாறு வினவினான்.

''நான் இந்த அம்மாளைப் பார்த்திருக்கிறேன், வாத்தியாரே!''

''பார்த்திருக்கிறயா? இன்னா தொரை, நம்பகிட்டேயே டூப் அடிக்கிறே? அப்ப நீ கோமணம் கட்டாத பையனா இல்லே சுத்திக்கிட்டு இருந்திருப்பே?''

''ஆமாம்; அப்பத்தான் ஒரு நாள் இவங்களைப் பார்த்தேன்.''

''எங்கேடா?''

''சென்ட்ரல் ஸ்டேஷனண்டை.''

''இன்னாது?'' என்று கேட்டுக் கொண்டே பரபரப்புடன் அவனருகில் நகர்ந்து வந்தான் தம்பையா.

''மெய்தான், வாத்தியாரே! இந்த அம்மாதான் அந்தப் பிரம்புப் பெட்டியை என்கிட்ட கொடுத்துட்டுப் போயிட்டாங்க.''

''பிரம்புப் பெட்டியா?......''

''இன்னா, இதுக்குள்ளாற மறந்து போயிடிச்சா?..... மூணு மாசத்துக் குழந்தை ஒண்ணு பிரம்புப் பெட்டியிலே இருந்ததைப் பார்த்து நான் வீட்டுக்குத் தூக்கியாந்ததை என் அம்மா உன்கிட்டே சொல்லலே? நீதானே அதுக்கு வேதகுமாரின்னு பேரு வைச்சே?''

சட்டென்று துள்ளியெழுந்த தம்பையா, ''வேதா!....... என் பொண்ணா வேதா?... என் அருமை மகளா வேதகுமாரி?.......'' என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் கூவிக் கொண்டே அந்த அறையில் கிடந்த உடற் பயிற்சிக் கருவிகள் பலவற்றையும் அநாயாசமாகத் தூக்கி அங்குமிங்குமாக வீசியெறிந்து ஓர் அழகிய நடனத்துடன் 'சலாம் வரிசை' போட்டுவிட்டு எழுந்த அதே வேகத்துடன் ஓடி வந்து, ''ஏண்டா, நச்சி! இந்த விஷயத்தை ஏன் இவ்வளவு நாளா நீ என்கிட்ட சொல்லலே?'' என்று அதட்டிக் கேட்டான்.

''எனக்கே நேத்து ராத்திரிதானே வாத்தியாரே இது தெரியும்!'' என்று முணுமுணுத்த நச்சி, வேதாவுக்கு மருதமுத்து டீச்சர் வேலை வாங்கித் தருவதாகச் சொல்லி ஏமாற்றிப் பெங்களூருக்குக் கடத்திச் சென்றதையும், அங்கு எதிர்பாராத விதமாகச் சபேசன் வந்து அவளைக் காப்பாற்றி அழைத்து வந்ததையும், அப்படி வரும்போது அவ்வூரிலே சிவகாமியம்மாளை ஆச்சரியகரமான விதத்தில் வேதா சந்திக்க நேர்ந்ததையும், அவளது வீட்டிலே தம்பையாவின் புகைப்படம் ஒன்று இன்னமும் இருப்பதையும், இந்த விவரங்களைத் தான் முதலில் தெரிந்து கொள்ளாமல், வேதாவை ஏமாற்றி இட்டுச் சென்ற மருதமுத்துவைப் பழி வாங்கிவிட்டு வர அவர் வீட்டுக்குப் போனபோது அங்கே

இந்தப் புகைப்படத்தைக் கண்டு திடுக்கிட்டுக் கையோடு எடுத்து வந்து விட்டதையும், இதனை வேதா பார்த்த பிறகே தனக்கு அவ்விவரங்களெல்லாம் தெரிய வந்ததெனவென் றும் சொல்லி முடித்த மறுகணம் —

பயில்வான் தம்பையா பழைய முரட்டு மனிதனுனன். அவனுக்கு இப்போது தன் அன்புக் காதலி சிவகாமி உயிருடன் இருக் கிறுள் என்ற தகவல்கூடப் பெரிதாகப்பட வில்லை ; தன்னுடைய அருமை மகள் வேதா வைப் பாழ்படுத்த முயன்ற மருதமுத்து வைப் பழி வாங்க வேண்டுமென்னும் வெறி யாவேசமே வந்து விட்டது. "அயோக்கிய ராஸ்கோல்! உன்னை இனியும் சும்மா விட்டு வைக்க மாட்டேன்.....!" என்று பற்களைக் கடித்துப் பயங்கரமாகக் கறுவிக் கொண்டே ஒரு மூலையில் கிடந்த பிச்சுவாக் கத்தியை வெடுக்கென எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டு வெளியே பாய்ந்து சென்றுன்.

தங்கள் குருநாதர் இப் படித் திடீரென்று 'யுத்த சன்னத்து'க்களுடன் புறப் பட்டுவிட்டதைக் கண்ட சீடப் பிள்ளைகள், "வாத்தி யாரே! வாத்தியாரே! இரு, வாத்தியாரே! நாங் களும் வர்ரோம்!" என்று கூவியவாறு அவனைப் பின் தொடர்ந்து ஓடினர்.

என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்து நின்றுள் நச்சி.

ஃ ஃ ஃ

"ஹல்லோ!... நான் தான்...வணக்கம், வணக் கம்...! என்ன தோழரே? பொதுக் கூட்டமா? என் றைக்கு?...... நாளைக்கா ? ரொம்ப அவசர டைம்மா இருக்கே?...ஹெஹ்ஹே. . ஹெஹ்ஹே.....என்னையே போட்டுக்கிறீங்களா? எனக்கு வேறே ஒரு எங்கேஜ்மெண்ட் இருக் கப்பா!...சரி; ம்...ஐம்பது ரூபாதானு?... பரவா யில்லை. கார் மட்டும் மறக்காமல் அனுப்பி வையுங்க!...இன்னு கண்ணு, உனக்குத் தெரியாதா?......ஆல் ரைட்!..... ஆமாம்; போஸ்டர்லே என் பேரு பெரிசா இருக் கணும்! மாலையும் பெரிசா கட்டச் சொல்லி விடுங்க..... அப்ப..... வைச்சுடட்டுமா ?.... வணக்கம் !" — மெய்யடியார்கள் புடை சூழத் தம் பங்களாவின் கூடத்து அறை யில் சோபாவிலே சாய்ந்தவாறு இவ்வளவு நேரம் போனில் பேசிய களைப்புடன் ரிஸீவரை டக்கென்று வைத்து விட்டுப் பின்னால் நின்றிருந்த காரியதரிசி செங்கோட னிடம் ஏதோ சொல்ல வாயெடுத்த மருத முத்து அப்படியே திகைத்து விறைத்து விட்டார். காரணம் —

"இவரைத் தெரியுமோ! இவர் ஆபீஸிலே எப்பவும் வேலே செய்வதி லேயே குறி. ஒரு நாள் லீவு போட மாட்டார். ஆபீசுக்கே லீவு நாளா இருந்தால்கூட கவர் ஏறிக் குதித்து, மறுசாவி போட்டுக் கதவைத் திறந்து கொண்டு போய் வேலே செய்து முடித்துவிட்டு வருவார்!"

காம்பவுண்டு இரும்பு 'கேட்'டைத் தன் காலால் உதைத்துத் திறந்து கொண்டு ஓங்கிய கத்தியுடன் ஒரு ராட்சஸனைப் போல் பாய்ந்து வந்தான் தம்பையா.

மருதமுத்துவினுல் எழுந்திருக்கக்கூட முடிய வில்லை. சப்தநாடியும் ஒடுங்கியவராய் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தார் அவர். அவருக்குப் பின்னுலிருந்த காரியதரிசி களுக்கும், சுற்றி நின்ற தொண்டர்களுக்கும் என்ன செய்வதென்றே தோன்றவில்லை. உயிர்ப் பயம் பிடித்தவர்களாய்க் கிடுகிடு வென நடுங்க ஆரம்பித்து விட்டார்கள்.

"மாலேயாடா வேணும், சோம்பேறி ! இன்னைக்கே ஒரேமுட்டா போட்டுக்கிட்டுப் போயிடுடா!" என்று பயங்கரமாகக் கர்ஜித் துக் கொண்டே பசி கொண்ட வேங்கை போல் சீறி வந்த பயில்வான் தம்பையா, மருதமுத்துவின் மார்பைக் குறி பார்த்த வாறு அறைக்குள் பாயக் காலெடுத்த சமயம் வாசற்படி தடுக்கிவிடவே தடாலெனக் குப்புறச் சாய்ந்துவிட்டான். அப்படி விழுந்த வேகத்தில் அவன் கையிலிருந்த கத்தி சற்றுத் தொலைவில் போய் உருண் டது. அளவுக்கு மீறிய ஆத் திரம், குடி மயக்கம், உடல் நலமின்மை — இவை மூன் றும் சேர்ந்தே அவனை அவ்வாறு நிலைதடுமாற வைத்துக் கீழே விழுத் தாட்டிவிட்டன.

"பிடியுங்கடா, அவனை! பிடிச்சுக் கட்டுங்கடா அவனை!" என்று கூவிக் கொண்டே எழுந்த மருத முத்து சடாரெனப் பக் கத்து அறைக்கு ஓடிக் கத வைத் தள்ளிச் சாத்திக் கொண்டார்.

பீதியால் பிரமை பிடித் தவர்கள்போல் நின்றிருந்த செங்கோடனும், கருப் பண்ணனும், மற்றவர் களுடன் ஓடி ஒளிய எங்கா வது இடம் இருக்கிறதா என்று பார்த்தார்களே தவிர, அவர்களில் ஒருவனுக்குக்கூடத் தம்பையாவை நெருங்கத் தைரியம் இல்லை.

நெடும் பனை மாதிரி விழுந்து கிடந்த தம்பையா தட்டுத் தடுமாறி எழுந்தான். அதே சமயம், "வாத்தியாரே! இரு, வாத்தியாரே!" என்று கூவிக் கொண்டே கும்பலாக ஓடி வந்த அவனது சீடப் பிள்ளைகள் திமுதிமுவென அப்பங்களாவினுள் நுழைந்து, அப்போதுதான் எழுந்துநின்ற தம்பையாவை அப்படியே கட்டிப் பிடித்து அலாக்காகத் தூக்கிக் கொண்டு வெளியே விரைந்தனர்.

"விடுங்கடா, என்னை! அந்தக் காவாலிப் பயலோட கழுத்தைக் கடிச்சு ரத்தத்தை உறிஞ்சுட்டு வர்ரேன்! விடுங்கடா, என்னை!"

என்ற தம்பையாவின் ஆவேசப் பிளிறல் தொலைதூரத்தில் கேட்டுக் கொண்டிருந்தது.

ஏழெட்டு நிமிடங்களுக்குள் நடந்து முடிந்துவிட்ட இந்தப் பயங்கர நிகழ்ச்சிக்குப் பின் நிலவிய ஆழ்ந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு மெல்லக் கதவைத் திறந்து வெளி வந்த மருதமுத்து, "எங்கேடா, அந்த ரௌடிப் பயல்? பயந்துகிட்டு ஓடிவிட்டானா? அவன்களெல்லாம் இப்படித்தான்; முதலில் ரொம்பச் சூரப்புலி மாதிரி ஆ, ஊன்னு சத்தம் போட்டுக் கலாட்டா பண்ணுவான்கள்! கொஞ்சம் எதிர்த்து நின்னால் போதும், பிடரியிலே மண் படும்படி ஓடியே விடுவான்கள், கோழைகள்!" என்று அமர்த்தலாகச் சொல்லிக் கொண்டே சோபாவில் வந்து அமர்ந்தார்.

கீழே விழுந்து கிடந்த கத்தியை ஏற்கனவே எடுத்து வைத்துக் கொண்டு இந்நேரம் வரை எங்கோ மறைந்திருந்த செங்கோடன் அதைக் கையில் வைத்து உருட்டிக் கொண்டே வந்து, "அல்கா பய, தப்பிச்சுக் கிட்டான்! இல்லேன்னா அவனை இதாலேயே பாளம் பாளமா அறுத்துக் காட்டியிருப்பேன்!" என்றான். மற்றவர்களும் அவனைப் போலவே வீரப் பெருமிதத்துடன் சட்டைக் கையை மடித்து விட்டுக் கொண்டு கூடத்து அறைக்கு வந்தனர்.

"எதுக்கு சார், அந்த ஆள் வந்து அப்படிக் கலாட்டா பண்ணினான்?" என்று கேட்டார் கண்டிராக்டுக்காகச் சிபாரிசு கோரி வந்திருந்த ஓர் அப்பாவி.

"என்னைப்போல் பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிற பெரிய மனிதர்களுக்கெல்லாம் இப்படி ஏதாவது ஆபத்து வந்து கொண்டிருப்பது சகஜம்தான்!" என்று அலட்சியமாகச் சொன்ன மருதமுத்து வன்மச் சிரிப்புடன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் செய்யலானார்.

"உண்மைதானா அண்ணா? நீ சொல்வது உண்மைதானா?" என்று நெஞ்சு கொள்ளா மகிழ்ச்சித் துடிப்புடன் கேட்டாள் வேதா.

"ஆமாம், தங்கச்சி!" என்று அமைதியாகத் தலையாட்டிய நச்சி, ஆழ்ந்த கவலையோடு பெருமூச்சு விட்டான்.

இந்தச் சமயம் அரக்கப் பரக்க ஓடி வந்த கன்னியம்மாள், "ஏண்டா, பையா! இன்னா அந்தப் பயில்வான் ஊட்டாண்டை ஒரே கூட்டமா இருக்குது? போலீஸ் லாரி வேறே வந்து நிற்குது? ஓடிப் போய்ப் பாருடா!" என்று அங்கலாய்த்தாள்.

சடாரென்று எழுந்த நச்சி வெளியே ஓடினான். வேதாவும், கன்னியம்மாளும் அவனைப் பின்தொடர்ந்து விரைந்தனர். அவர்கள் வேலிப் படலருகில் போவதற்குள் போலீஸ் லாரி அந்தத் தெரு வழியே மெல்லக் கிளம்பி வந்தது. அதன் உள்ளே—இரு போலீஸ்காரர்களின் நடுவில் — விலங்கு பூட்டிய கைகளுடன் கம்பீரமாக உட்கார்ந்திருந்த பயில்வான் தம்பையா வெளியே எட்டிப் பார்த்து, "வேதம்மா!.... நான் போயிட்டு வரேம்மா!..... ஒரு வருஷமோ, ரெண்டு வருஷமோதான்! திரும்பி வந்துடுவேன்!..... டேய், நச்சி! கன்னிம்மா!....என் மகளைப் பத்திரமாப் பார்த்துக்குங்கோ!.... நான் வரட்டுமா?......." என்று சிரித்துக் கொண்டே கூவினான்.

"நாயனா!" — அறுந்தெறிந்த அல்லிக் கொடி போல் வேலிப் படல் மீது மூர்ச்சையற்றுச் சாய்ந்தாள் வேதா.

அன்று பிற்பகல் மூன்று மணியிருக்கும். பல அச்சகங்களுக்குச் சுற்றியலைந்தும் எங்குமே காகித ஜல்லி கிடைக்காததால் சோர்ந்து போன சபேசன், கடைசியாக ஒரு சிறிய அச்சகத்தில் சிறிதளவு கிடைத்ததைக் கோணியில் கட்டி முதுகில் சுமந்து கொண்டு சதர்ன் ரயில்வே அலுவலகத்துக்குக் கிழண்டைப் பக்கமிருந்த மெமோரியல் ஹால் ரோட்டில் மெல்ல நடந்து கொண்டிருந்தான்.

அந்த ஜல்லியை விற்றால் எட்டணாகூட இலாபம் தேறாது. ஏனெனில், அது பாதியளவுக்கு வர்ணக் காகித ஜல்லியாக இருந்தது. 'பிட் நோட்டீஸ் அச்சடிக்கும் காடிகானா பிரஸ்களில் ஜல்லி வாங்கினாலே இந்தத் தொல்லைதான்' என்று தனக்குள் முணுமுணுத்தவாறு நடந்த சபேசன், "மிஸ்டர், இங்கே கொஞ்சம் வரயா?" என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

தங்கசாலை முனையில் தொடங்கி, ஈவினிங் பஜார் ரோட்டில் போய் முடிவடையும் அந்தச் சிறிய மெமோரியல் ஹால்ரோட்டின் இறுதியில் — நைனியப்ப நாயக்கன் தெரு ஆரம்பத்தில் — மீன் வளர்ப்புக்காக உபயோகப்படும் கண்ணாடித் தொட்டிகளைச் சிலர் நடைபாதையிலேயே போட்டுச் செய்து கொண்டிருக்க, அவர்களுக்குச் சற்று அப்பால் வலதுபுறமிருந்த ஒரு சிறு ஓட்டுக் கூரை வீட்டின் வாசலில் பர்மியக் கிழவியொருத்தி புன்முறுவலுடன் நின்று சபேசனைப் பார்த்துக் கையசைத்தாள்.

சற்றே தயங்கிய சபேசன், 'இவள் யார்? ஏன் என்னைக் கூப்பிடுகிறாள்?' என்று தயங்கியவாறு அவளருகில் சென்றான்.

"இதெல்லாம் என்ன, பேப்பர் கட்டிங் பீஸ்களா?" என்று வெகு அக்கறையாக விசாரித்தாள் பர்மாக்காரி.

'ஆம்' என்று தலையசைத்தான் சபேசன்.

"இதிலே கலர் பேப்பர் பீஸ்கள் இருக்குமா?"

"எதற்காகக் கேட்கிறாய்?" என்று பர்மிய மொழியிலேயே கேட்டுவிட்டான் சபேசன். அவனுக்கு அந்த மொழி ஓரளவு தெரியும். பர்மாவில் கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டுகள் இருந்தவனாயிற்றே?

வியப்புடன் அவனை ஏறிட்டுப் பார்த்த பர்மியக் கிழவி, "ஓ...... நீ எனக்கு என் மொழியால் உறவுக்காரனா? மிகவும் நல்ல சந்திப்பு!" என்று மகிழ்ச்சியுடன் தன் தாய் பாஷையில் கூறினாள். இதற்குள் அவ்வீட்டிலிருந்த ஒரு கிழவன், நடுத்தர வயதுப் பெண்ணொருத்தி, ஒரு சிறுமி, சிறுவனொருவன்—இவர்களும் பர்மியர்கள்தாம் — வெளியே எட்டிப் பார்த்தனர். (தொடரும்)

# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்
— அநுத்தமா

உண்மையில் ஐஸ் ஹவுஸ் ஓர் அரண்மனை அல்ல. மாலைச் சூரியனின் கிரணங்களால் தழுவப் பெற்று நின்றதும் வட்ட வடிவம் கொண்டிருந்ததுமான அந்த மூன்றடுக்கு மாளிகை பார்க்க விசித்திரமானதாகத் தோன்றியது.

சென்னையில் உள்ள எல்லோருக்கும் அதன் வரலாறு தெரியும். இருநூறு ஆண்டுகளுக்குமுன் அது கட்டப்பட்டபோது அதற்கெதிரே இப்போது இருப்பது போல் அவ்வளவு அகலமான மணற்பரப்பு இருக்கவில்லை. குறுகலான கடற்கரைதான் இருந்தது. வடக்கே சில மைல்களுக்கு அப்பால் இருக்கும் துறைமுகம் அப்போது தோன்றியிருக்கவில்லை. அமெரிக்காவிலிருந்து கொண்டு வரப்பட்ட ஐஸ் கட்டிகள் இந்த இடத்துக்குக் கூப்பிடு தூரத்தில் இறக்கப்பட்டு அந்தக் கட்டடத்தில் சேமித்து வைக்கப்பட்டன. பல வருடங்கள் வரை அதில் ஐஸ் கட்டிகளைத் தவிர வேறு ஒன்றுமே இருந்ததில்லை. பிறகு கடந்த ஐம்பது ஆண்டுகளுக்குமேலாக அது பலவிதமாக உபயோகப்பட்டு வந்தது. ஸிஸ்டர் குழந்தையாக இருந்த போது மைசூரிலிருந்த ஒருவர் அதை வாங்கி 'கெர்னன் அரண்மனை' என்று பெயர் வைத்திருந்தார். பிறகு அத்தனை பெரிய மாளிகையின் நிர்வாகச் செலவுகளைச் சமாளிக்க முடியாததால் தமது மாவட்டத்தைச் சேர்ந்த மாணவர்கள் தங்குவதற்கான விடுதியாக அதனை மாற்றி விட்டார். 1897ம் ஆண்டு அமெரிக்கா, ஐரோப்பா போன்ற இடங்களுக்குத் திக்விஜயம் செய்துவிட்டுத் திரும்பிய ஸ்வாமி விவேகானந்தர் கல்கத்தாவுக்குத் திரும்பிச் செல்லும் வழியில் இம்மாளிகையில் தங்கினார். அதற்குப் பின்னர் அந்தச் சொத்து பல கை மாறி விட்டது. இப்போது அதன் சொந்தக்காரர் யார் என்பதே சுப்புலக்ஷ்மிக்குத் தெரியாது. அதை அறிந்து கொள்ளவும் அவள் முயன்றதில்லை. கோடைக் காலத்தில் குளிர்ந்த மலைப் பிரதேசங்களுக்குச் செல்வதைவிடக் கடற்கரை வாசத்தையே பெரிதும் விரும்பிய மகாராஜாக்களும், ஜமீந்தார்களும் வேறு தனவந்தர்களும் இக்கட்டடத்தில் தங்குவது உண்டு என்று மட்டும் அவள் அறிவாள். அத்தகைய ஓர் இடம் தங்களுக்குச் சரிப்படாது என்று அவள் தன் பராமரிப்பின் கீழுள்ள பெண்களிடம் கூறியது முற்றிலும் சரிதானே ?

ஆகவே, ஓரிரண்டு வாரங்கள் கழித்து முன்பின் தெரியாத ஒருவர் பள்ளிக்கூடத்துக்கு வந்து தான் ஐஸ் ஹவுஸின் தற்போதைய சொந்தக்காரரான ஜமீந்தாரின் காரியதரிசி என்று அறிமுகப்படுத்திக் கொண்டதும் அவளுக்குத் திகைப்பாகி விட்டது. சகோதரி சுப்புலக்ஷ்மி தன் பாதுகாப்பின் கீழுள்ள இளம் விதவைகள் வசிப்பதற்குத் தகுந்த ஒரு வீட்டைத் தேடுவதாக அவர் கேள்விப்பட்டிருந்தார். ஐஸ் ஹவுஸை நேரில் வந்து சுற்றிப்

பார்த்தபிறகு தங்களுடைய தேவைக்கு அது சரிப்பட்டு வரும் என்று அவர்கள் கருதினால் ஜமீந்தார் சில வருஷங்களுக்கு அந்தக் கட்டடத்தைச் சர்க்காருக்கு வாடகைக்குவிட இசையலாம்; ஒருவேளை அதை விற்கவும்கூட அவர் முன்வரலாம்.

இப்படி அந்தக் காரியதரிசி கூறியதை யெல்லாம் சகோதரி தன் வழக்கமான சிரத்தையுடன் கேட்டுக் கொண்டாள். அவளால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. வந்தவர் சொல்லி முடித்ததும் அவள் சிலை போல் சற்று நேரம் அமர்ந்திருந்தாள். பேரானந்தத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமல் தன்னைச் சுதாரித்துக் கொள்ளச் சிறிது நேரம் பிடித்தது அவளுக்கு.

வந்திருந்த புது மனிதர் அவளுடைய மௌனத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், அந்தக் கட்டடம் கொஞ்சம் பழுது பார்க்க வேண்டிய நிலையில் இருந்தாலும், அவர்களுடைய தேவைக்கு மிகவும் வசதியான இடமாக இருக்கும் என்று விவரிக்க ஆரம்பித்தார். இப்போது உள்ள அதன் சொந்தக்காரர் தம் கல்யாணத்துக்குச் சற்று முன்னால்தான் அந்த மாளிகையை வாங்கியிருந்தார். தம்முடைய அழகான இளம் மனைவி காற்று வாங்கவும், உடற்பயிற்சி செய்யவும் மறைவாக இருக்கும் பொருட்டு இந்த வீட்டைச் சுற்றி உயர்ந்த மதிலை எழுப்பியிருந்தார். திருமணம் மிகவும் கோலாகலமாக நடந்தேறியது. அவர்களுடைய இல்வாழ்க்கை சிறிது காலம் சந்தோஷம் நிரம்பியதாக இருந்தது. ஆனால், சாஸ்திரப்படி பார்க்கப் போனால், அந்தக் கல்யாணம் நடந்தே இருக்கக் கூடாது! ஜமீந்தார் தங்களைவிடத் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவர் என்று தெரிந்ததும் அப்பெண்ணின் பெற்றோர் தம் பெண்ணை அவரிடமிருந்து அழைத்துச் சென்று விட்டார்கள்! தம்முடைய இந்தப் பொய் வெளிப்படாது என்ற நம்பிக்கையில் கல்யாணம் செய்து கொண்ட ஜமீந்தார் இப்படி நடந்ததும் முற்றிலும் மனமுடைந்து விட்டார். உடனே அவர் தம் ஜமீனுக்குத் திரும்பிப் போய் அங்கு தனிமையில் வசித்து வந்தார். தாம் முதலில் மிகவும் சந்தோஷமாக வாழ்ந்து, பிறகு இந்தக் கஷ்டத்தையும் எந்த மாளிகையில் அநுபவிக்க நேர்ந்ததோ, அங்கு அவர் என்றும் திரும்பி வர மாட்டார் என்பது நிச்சயம்.

ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி தம் அபிப்பிராயத்தை வெளியிடுமுன் ஒருமுறை அக்கட்டடத்தைப் பார்க்க வேண்டும் என்று அந்தக் காரியதரிசியே கூறிப்பிட்டார்.

ஸிஸ்டர் மிஸ் லின்ச், மிஸ் பிரேகர் சித்தி நால்வரும் போய்ப் பார்த்தார்கள்.

ஜன நெருக்கடியான திருவல்லிக்கேணியிலிருந்து வெகு சமீபத்தில் இருந்தாலும் ஐஸ்ஹவுஸ் ஒதுக்குப்புறமாகவே இருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை எங்கும் வீடுகளைக் காண முடியவில்லை. சகோதரியும், சித்தியும், மற்ற பெண்களும் அந்த இடத்துக்கு வந்து விட்டால், தெற்கே மதிலுக்கு அப்பாலுள்ள மீனவர் குப்பத்தைத் தவிர வேறு ஜனசந்தடியே இருக்காது. அந்த வீட்டைக் கவனித்துப் பராமரிப்பார் யாருமில்லை என்பது முதல் பார்வையிலேயே புரிந்து விட்டது. தோட்டத்தில் வேலைக்காரர்களுக்கான குடியிருப்புகள் முதலியன இருந்தன. ஆனால் எல்லா இடங்களிலும் புல் பூண்டுகள் மண்டிக் கிடந்தன. அந்தப் புதர்களுக்கிடையில் பாம்புகள் கூட இருக்கலாம் என்று தோன்றியது. விசாலமான முன்முகப்பும் பிரும்மாண்டமான மாடிப் படிகளையும் கொண்ட அந்தப் பெரிய கட்டடம் பண்டைய நாட்களில் அன்றைய தேவைக்கு ஏற்ற விதத்தில் ஐஸ் வைப்பதற்கென்றே கட்டப்பட்டிருந்தது. கீழ்த் தளம் முழுதும் சிறு சிறு அறைகளாகத் தடுக்கப்பட்டிருந்தது. மொட்டை மாடியிலிருந்து பார்க்கும் போது சமுத்திரமும், சென்னை நகரமும் சுற்றுவட்டாரத்தில் உள்ள வயல் பரப்புக்களும் தெரிந்தன. மழைக் காலமாதலால் வயல்வெளிகள் பசுமையாகக் கண்களுக்குக் குளிர்ச்சியாகத் தோற்றமளித்தன.

மொத்தத்தில் அது ஒரு விசித்திரமான இடமாக இருந்தது. எனினும், அதில் ஓர் அழகுக் கவர்ச்சியும் இல்லாது போகவில்லை. நன்கு யோசித்துப் பார்க்கையில் அது தங்கள் தேவைக்கேற்ற விதத்தில் அமைந்திருப்பதை உணர்ந்து அவர்களே அதிசயித்தார்கள்! இது பற்றிப் பேசி முடிவு செய்ய வரும் சர்க்கார் அதிகாரிகள், நூறு பேர்கள் இருக்கக் கூடிய ஒரு பெரிய மாளிகையை முப்பது பேர்களுக்காக எடுத்துக் கொள்வது வீண் செலவு என்று கூறுவார்களோ என்ற ஐயம் எழுந்தது. இருந்தாலும் மொத்த மலிவாகவே அது அரசினருக்குக்

கிடைக்கலாம் அல்லவா? தவிரவும், இந்த விதவைப் பெண்கள் உண்மையிலேயே இருக்க இடம் இல்லாமல் சிரமப்பட்டார்கள். ஆகையினால் நிதி இலாக்காவினர் இவர்கள் நிலைமையை உணர்ந்து நியாய வாதம் செய்யாமல் கொஞ்சம் சலுகை காட்டலாம். மேலும் இப்போது அநேகம் பெற்றோர்கள் தம் விதவைப் பெண்களைத் தைரியமாக நிலையத்துக்கு அனுப்ப ஆரம்பித்து விட்டனர். ஆகவே சீக்கிரத்திலேயே இந்தப் பெரிய மாளிகையும் கூட நிரம்பி விடலாம்.

இந்த ஒரு முறை மிஸ் லின்ச் எப்படியோ தம் மேலதிகாரிகளை உடனுக்குடன் ஒரு முடிவுக்கு வரும்படி தூண்டிக் காரியத்தைச் சாதித்துக் கொண்டாள். விலைக்கு வாங்குவதற்கான பேச்சு வார்த்தைகளெல்லாம் முடிவு பெறும் வரை அதற்கு மாதம் நூற்று அறுபது ரூபாய் வாடகை தருவது என்று தீர்மானமாயிற்று. சில வாரங்களுக்குள் முக்கியமான செப்பனிடுதல்களெல்லாம் முடிந்தன. கட்டடத்தை உள்ளும் வெளியும் துப்புரவு செய்து சுண்ணாம்பு அடித்தார்கள். ஜனவரி மாத மத்தியில் அவர்கள் இங்கு குடியேறி விடலாம்.

திருவல்லிக்கேணியில் வாழும் பழைமைப் பற்றுள்ள வைதீகமான பிராம

## கிள்ளை மொழி ● ○ ● ○ ● ○ ● ○ ○ ● உங்கள் அனுபவம் என்ன?

ராமுவுக்கு வயது மூன்றுகூட இராது. ஆனால் நல்ல துடுக்கு; விஷமக் கொடுக்கு. அடம் பிடித்தால் அவனைச் சமாதானப்படுத்துவது சிரமமான காரியம்.

ஒரு நாள் காலை முரண்டு பிடித்த அவன் கையில் ஒரு முறுக்கைக் கொடுத்துவிட்டுத் தாயார் ஏதோ வேலையாகக் கிணற்றடிக்குப் போனாள். அவனும் அழுதுகொண்டே அவள் பின்னால் போனான்.

தருணம் பார்த்துக் காக்கை ஒன்று அவன் கையிலிருந்த முறுக்கை விள்ளாமல் விரியாமல் லபக்கென்று கொத்திச் சென்றுவிட்டது. பிரமை பிடித்தவன் போல் நின்ற ராமு, 'அம்மா, முறுக்கு....' என்று அழுகையோடு சேர்த்துக் கூறினான்.

அண்ணாந்து பார்த்த அவன் தாயார், ''போய் விட்டதா? காக்காய் கொத்திக் கொண்டு போய்விட்டதா?'' என்றாள்.

அவன் அழுகை அதிகமாயிற்று.

''இப்படி அழுது அடம் பிடித்தால் காக்காய் உன்னையும் கொத்திக் கொண்டு போய் விடும்!'' என்றாள் தாயார்.

ராமு சட்டென்று அழுகையை நிறுத்தினான். அண்ணாந்து பார்த்தான், கிளைமேல் உட்கார்ந்திருந்த காக்காயை. பிறகு இரண்டு கைகளாலும் தன் தலையைத் தொட்டுத் தடவிப் பார்த்துக் கொண்டான்.

அழுகை நின்றுவிட்டதைக் கவனித்த தாயார் அவன் பயந்து விட்டான் என்று எண்ணி, ''இனிமேல் படுத்த மாட்டாயே!'' என்று கேட்டாள்.

அவன் அதற்குப் பதில் சொல்லாமல், ''ஏம்மா! காக்காய்க்கு இத்தனை யூண்டுதானே வாய் இருக்கு. என் தலை இத்தனை பெரிசா இருக்கே. எப்படி அம்மா கொத்திக்கொண்டு போகும்?'' என்று கேட்டான்.

பிள்ளையின் துடுக்கான இந்தப் பேச்சைக் கேட்டுத் தாயார் அயர்ந்து போனாள். அதோடு அகமகிழ்ந்தும் போனாள்.




எல்லாச் செல்வங்களுக்கும் மேலான மக்கட் செல்வம், தம் மழலை மொழியினால் இப்படியெல்லாம் பெற்றோர்களை மகிழ்வித்து வருகிறது உலகம் அறிந்த உண்மை. உங்கள் மழலைகளின் சுவையான, சுறுசுறுப்பான செயல்களைக் கண்டு நீங்கள் மகிழ்ந்திருப்பீர்கள். உங்களுக்கும், மேலே குறிப்பிட்டதுபோல் எத்தனை எத்தனையோ அநுபவங்கள் ஏற்பட்டிருக்கலாம். அவற்றைச் சுவைபட 'கல்கி'யில் அரைப் பக்கத்துக்கு மேலே போகாமல் எழுதி அனுப்புங்கள். உங்களோடு நேயர்களும் சுவைத்து மகிழ்வார்கள். **சிறந்தவற்றுக்குப் பரிசும் உண்டு.**

கட்டுரை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி **26-2-66.**

உறையின் மேல் 'கிள்ளை மொழி' என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. பிரசுரமாகாத கட்டுரைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் **தங்கள் விலாசமிட்ட தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் அனுப்ப வேண்டும்.**

ணைப் பெண்கள் இதையெல்லாம் கேள்விப்பட்ட போது மிகவும் கோபமடைந்தனர். சாரதா மாதர் சங்கம் அந்த வட்டாரத்தில் தவறாமல் வாரம் ஒருமுறை கூட்டம் நடத்தியது. கவர்னரின் நிர்வாகக் குழுவில் அங்கம் வகித்தார் 'ஸர்' சதாசிவ ஐயர். அவர் மனைவி, சாரதா மாதர் சங்கத்தின் தலைவியாகப் பதவி வகித்தாள். திருவல்லிக்கேணி பெண்களில் பலர் சங்கத்தின் நடவடிக்கைகளில் பங்கு எடுத்துக் கொண்டார்கள். அடிக்கடி சமூகப் பிரச்னைகளை ஆராய்ந்தார்கள். பெண் கல்வி, குழந்தைப் பிராய விவாகங்களின் தீமைகள் முதலியவை பற்றிப் பேசுவதற்குச் சில சொற்பொழிவாளர்களை அழைப்பார்கள். இக்கூட்டங்களுக்கு வந்த இளம் பெண்மணிகள் சிறிது சிறிதாக மனம் மாறப் பெற்றார்கள். எனினும், தங்கள் வீடுகளில் இருக்கும் பெரியோர்களின் அழுத்தமான கருத்துக்களை எதிர்த்து வாய் விட்டுப் பேசத் தைரியம் இருக்காது இவர்களுக்கு. அந்தப் பெரியோர்களோ மிகவும் வெளிப்படையாகத் தங்கள் அதிருப்தியைக் காட்டிக் கொண்டார்கள். 1916ம் வருஷம் டிசம்பர் மாதம் பல மூதாட்டிகள், ''இந்தப் பிராணிகளெல்லாம் ஐஸ்ஹவுஸுக்குக் குடி புகுந்தவுடனே கடல் பொங்கி வந்து இவர்கள் எல்லோரையும் கொண்டு போய் விட்டால் நன்றாக இருக்கும்'' என்று கூடக் கூறலானார்கள்!

இப்படிச் சிலர் சபித்தது சகோதரி சுப்புலக்ஷ்மியின் செவியில் விழவில்லை. ப்ளூரசியினால் கடுமையாகத் தாக்கப்பட்டு நோய்வாய்ப்பட்டுத் தன் பெற்றோர்களின் இல்லத்தில் அவள் படுத்திருந்தாள். மீண்டும் பிரயாணம் செய்யும் அளவுக்குச் சக்தி வந்ததும் உதகமண்டலத்துக்கோ, குன்னூருக்கோ சென்று நல்ல காற்றோட்டமான அந்தச் சூழலில் மூன்று மாதம் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வைத்தியர்கள் கூறினார்கள். அவர்கள் அபிப்பிராயத்தை ஏற்க அவள் மறுத்துவிட்டாள். உடம்பு கொஞ்சம் சுமாரானதும் எழுந்து ஜாகை மாற்றும் விஷயத்தைக் கவனிக்கத் தொடங்கினாள்.

சூரியாஸ்தமன சமயத்துக்குத்தான் ஒரு விதமாக ஜாகை மாறும் வேலைகள் எல்லாம் முடிந்தன. புதர்கள் நிறைந்த தோட்டத்தைச் சுற்றிக் கொண்டிருந்த பெண்கள் எல்லோரும் வீட்டுக்குள் குழுமினார்கள். அவர்களுடைய புதிய அறைகள் தயாராக இருந்தன. இரவு சாப்பாட்டுக்குமுன் தங்கள் தங்கள் பொருள்களை ஒழுங்குபடுத்தி எடுத்து வைப்பதற்காக அவர்கள் மாடிக்குச் சென்ற போது அவர்கள் முகத்தில் மகிழ்ச்சி ஒளி வீசியது.

அப்போதுதான் மிஸ் பிரேகர் எல்லோரையும்விட மிகச் சிறியவர்களான இரு பெண்கள் அக்கூட்டத்தில் இல்லை என்பதைக் கவனித்தாள். அவர்களைக் கடைசியாக எப்போது பார்த்தோம் என்று யாருக்கும் ஞாபகம் இல்லை. வீடு முழுவதும் தேடினார்கள். ஒவ்வோர் அறையும் காலியாகவே காட்சி அளித்தது. அக்குழந்தைகள் தோட்டத்திலும் இல்லை.

பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போது அவர்கள் எங்கும் நழுவி விட்டிருக்க முடியாது. அவர்கள் வரிசைக்கிரமமாக நடந்து வந்தார்கள். வரிசையிலிருந்து அச்சிறுமிகள் சிறிதேனும் நகர்ந்து இருந்தாலும் கண்டுபிடிக்கப்பட்டிருப்பார்கள். ஐஸ்ஹவுஸுக்கு — அவர்கள் எல்லோரும் வந்த பிறகு பல மனிதர்கள் வருவதும் போவதுமாக இருந்தபடியால் வாயிற்கதவுகள் திறந்தே கிடந்தன. துர் எண்ணம் கொண்ட யாரேனும் அச்சிறுமிகளைக் கடத்திக் கொண்டு சென்றிருப்பார்களோ? ஏதேதோ பயங்கர எண்ணங்கள் எழுந்தன.

பரபரப்புடன் மிஸ் பிரேகர் இங்குமங்குமாய்த் தேடலானாள். எங்கும் அவர்களைக் காணோம். ஒவ்வோர் அலமாரியையும் திறந்து பார்த்தாள். கடைசியில் கீழே சமையல் அறைக்குச் சென்று அங்கு இருந்த ராந்தல் விளக்கை எடுத்து ஏற்றிக் கொண்டு மற்றுமொரு சிறு அறையின் கதவைத் திறந்தாள். வேண்டாத தட்டுமுட்டுச் சாமான்களையெல்லாம் போட்டு வைக்கப் பயன்பட்ட இடம் அது. அதனுள்ளிருந்து பேச்சுக் குரல் கேட்டது. பிரேகர், ''இங்கே வாருங்கள்'' என்று கூவி அழைத்தாள். குழந்தைகள் ஒரே விநாடியில் அவள் அருகில் வந்து விட்டனர். இருள் சூழ்ந்த அந்த அறையில் அடைத்துக் கிடக்க நேரிட்டும் அவர்கள் முகத்தில் பயமில்லை. அதற்குப் பதிலாகக் குழப்பமும் ஏமாற்றமுமே காணப்பட்டன.

''எதற்காக அங்கே போனீர்கள்? நீங்கள் இருட்டில் அங்கிருப்பது தெரியாமல் வெளியே யாரோ கதவைச் சாத்தி விட்டிருக்கிறார்களே?'' என்று கேட்டாள் மிஸ். பிரேகர். (தொடரும்)

### அத்தியாயம் முப்பத்துமூன்று

## ஆணை மீறினால்!.....

அமைச்சர் சாளுவ நரசிம்மருக்குத் தாம் தலைநகரத்தில் இல்லாதபோது நடைபெற்ற அந்த நிகழ்ச்சி பேரதிர்ச்சியைக் கொடுத்து விட்டது. பாண்டிய நாட்டிலிருந்து வந்திருந்த அப்துலால் சக்கரவர்த்தியைக் காண முடியாது என்று அவர் நினைத்திருந்தார். விசுவநாதன் அப்துலைக் கிருஷ்ணதேவராயரிடம் அழைத்துக் கொண்டு சென்றதோ, சக்கரவர்த்தி நாகமருக்குக் கட்டளை இட்டதோ அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அதற்கான மாற்று ஏற்பாடுகளைக் கவனிப்பதில் அவர் தீவிரமாக முனைந்து விட்டார். அரண்மனையிலும் அவர் வழக்கம்போல் தங்குவதில்லை; மாளிகைக்கும் செல்வதில்லை. வேறு எங்கோ சென்று யாரிடமோ அடிக்கடி பேசிவிட்டு வந்தார்.

மாளிகையில் ஒரு நாள் இரவு லட்சுமியிடம் கூறி அவர் ஓலை எழுதச் சொன்னபோதுதான் அவருடைய பரபரப்புக்கான காரணம் லட்சுமிக்கே ஓரளவு புலப்பட்டது. நாகம நாயக்கருக்கு அவர் விவரமான ஓலை எழுதச் செய்தார். அதை எழுதும்போது லட்சுமிக்கே பெருந் திகைப்பாகத்தான் இருந்தது. என்றாலும் அவள் குறுக்கிட்டுப் பேசாமல் தன் கடமையை நிறைவேற்றினாள்.

லட்சுமியிடம் சாளுவ நரசிம்மர் தன் உயிரையே வைத்திருந்தார் என்றாலும் அவளைச் சில கட்டுத் திட்டங்களுக்கு அவர் பழக்கி வைத்திருந்தார். ஓலை எழுதும் வேளைகளில் அவள் குறுக்கிட்டுப் பேசக் கூடாது. அவள் உயிரைப் போலவே அதன் இரகசியங்களைக் காப்பாற்ற வேண்டும்; அரசியல் விஷயங்களை அவர் கூறும் அளவுக்கு மேல் அவள் தெரிந்து கொள்ள ஆவலுறக் கூடாது.

ஓலை மிகவும் விரிவான ஓலை; பயங்கரமான பின் விளைவுகளைக் கொண்ட ஓலையென்றும் லட்சுமிக்குத் தோன்றியது. நாகம நாயக்கருக்கு எழுதப்பட்டதாலும் அதில் விசுவநாதனின் எதிர்காலத்தைப் பற்றிய குறிப்புக்கள் காணப்பட்டமையாலும் லட்சுமியால் அதை எழுதும்போது பரபரப்படையாமல் இருக்க முடியவில்லை. எழுதி முடித்துவிட்டுத் தன் தந்தையை



# வெற்றித்திருநகர்

## அகிலன்

ஆவலோடு பார்த்தாள் லட்சுமி. அவராக ஏதும் கூற மாட்டாரா என்ற துடிப்பு அவள் விழிகளில் காணப்பட்டது.

“நாம் அவசரப்படுவதால் நாம் செய்கிற முயற்சிகள் தடைப்படக்கூடும்; ஆகவே நீ இந்த விஷயங்களை இப்போது தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அவசரமில்லை. இதன் பலனுக்காகப் பொறுத்திருந்தால் அப்போது எல்லாமே விளங்கும்” என்றார் அமைச்சர்.

“சரி அப்பா!” என்று உற்சாகம் இழந்த குரலில் கூறினாள் லட்சுமி.

“உன்னைத் தவிர வேறு யாருக்கும் இது தெரிய வேண்டாம்” என்று கூறியவர், “குறிப்பாக விசுவநாதனுக்குக் கூட இது தெரியக் கூடாது” என்றார்.

லட்சுமிக்கு மூர்ச்சை அடைப்பது போல் இருந்தது. தனக்குத் தொடர்பில்லாத பல இரகசிய ஓலைகளை அவள் இதற்கு முன்பு எழுதியிருக்கிறாள். ஆனால் இது அப்படிப்பட்டதல்ல. காரணம் கூற முடியாத ஒரு வகை அச்சம் ஏனோ அவள் மனத்தில் சூழ்ந்தது.

இரவில் ஓலையை எழுதி முடித்து விட்டு உடனுக்

குடன் அதை எடுத்துக் கொண்டு அவர் வெளியே புறப்பட்டார். அவர் மாளிகைக்குத் திரும்பி வரும் வரையில் லட்சுமிக்கு உறக்கம் வரவில்லை. விசுவநாதன் முன்போல் அங்கு அடிக்கடி வராமல் இருந்ததை அவள் நினைத்துக் கொண்டாள். அவனுடைய அன்னையார் கமலாதேவியிடம் விசாரித்ததில் அவனும் அமைச்சரைப் போலவே பரபரப்படைந்திருந்தான் என்று தோன்றியது. அவனுடைய மாளிகையில் கூட அவன் சரியாகத் தங்குவதில்லையாம்.

பொழுது புலரும் வேளையில்தான் சாளுவ நரசிம்மர் திரும்பி வந்தார். வந்தவர் சிறிது கூட ஓய்வெடுத்துக் கொள்ளாமல் "சக்கரவர்த்திகள் இன்றிலிருந்து சபைக்கு வருவதாகக் கூறியிருக்கிறார்கள். உடனே அரண்மனைக்குப் புறப்பட வேண்டும்!" என்று கூறிவிட்டுக் கிளம்பி விட்டார்.

ஆம்; கிருஷ்ண தேவராயருக்கு முழுவதும் உடல்நிலை தேறிவிட்டாலும், எழுந்து நடமாடத் தொடங்கியவுடன் மீண்டும் அவரே அரசியல் கடமைகளைக் கவனிக்கத் தொடங்கிவிட்டார். அரண்மனைப் பணிமனை அவருடைய வரவால் மீண்டும் புதுக் களையோடு காட்சியளித்தது. அமைச்சர், ராமராயர், விசுவநாதன் முதலியோரிடம் இடைப்பட்ட காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை விசாரிக்கலானார்.

விசுவநாதனின் கணக்குகளைச்! சோதனையிட்ட சக்கரவர்த்தி, அமரநாயக்கர்களில் முக்கியமான ஒருவரிடமிருந்து இறைப் பொருள் வராததைக் கவனித்தார்.

"வேங்கட நாயக்கர் ஏன் தாமதம் செய்கிறார்?" என்று விசுவநாதனிடம் கேட்டார் சக்கரவர்த்தி.

"பலமுறை அரியநாத முதலியாரை அனுப்பிக் கேட்டுவிட்டேன். நானும் நேரில் கேட்டிருக்கிறேன்" என்று தயக்கத்தோடு பதிலளித்தான் விசுவநாதன்.

"அவருடைய பகுதியில் விளைச்சலுக்கு ஒன்றும் குறைவில்லையே? மழை நன்றாகத்தானே பெய்திருக்கிறது? குடிமக்களிடமிருந்து அவர் பெறவேண்டியதை யெல்லாம் பெற்றுவிட்டாரல்லவா?"

இந்த விவரங்களை யெல்லாம் முன்னதாகவே விசுவநாதன் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தான். வேங்கட நாயக்கருக்குப் பொருள் கொடுக்க எண்ணமில்லை என்பதைத் தவிர, வேறு எந்தக் காரணமும் புலப்படவில்லை. அவர்களாகக் குறித்த காலத்தில் இறை அனுப்புவதுதான் அமர நாயக்கர்களின் வழக்கம். அவர்களுடைய பொறுப்பிலிருந்த நாடுகள் உட்பகுதிகளில் இருந்தாலும், அவர்கள் மட்டிலும் தலைநகரத்தில் வசிக்க வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தார் சக்கரவர்த்தி. தமது நேரடிப் பார்வையில் இல்லாவிட்டால் அவர்களுக்குள் ஏதாவது உடன்பாடுகள் செய்து கொண்டு சாம்ராஜ்யத்துக்கு எதிராகத் திரும்பக்கூடும் அல்லவா? அதைத் தவிர்ப்பதற்காகவே இந்த ஏற்பாட்டை அவர் செய்திருந்தார்.

"வேங்கட நாயக்கர் தாமதப்படுத்துவதற்கு எவ்வித நியாயமான காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை. கடைசியாக முதலியார் அவரைக் காணச் சென்றபோதும் முதலியாரிடம் அவர் சரியாக நடந்து கொள்ளவில்லை" என்றான் விசுவநாதன்.

"இன்றைக்கு எல்லோரும் சபைக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்கள் அல்லவா?"

"ஆம்."

கிருஷ்ண தேவராயரின் நெற்றி சுருங்கியது. அதை விசுவநாதன் உற்றுக் கவனித்தான். பிறகு மற்ற அலுவல்களைக் கவனித்து விவரங்களைச் சக்கரவர்த்தி விசாரித்துக்கொண்டார். வழக்கம்போல் நடந்து கொண்டவர்கள், வழக்கத்துக்கு மாறாக நடந்து கொண்டவர்கள், அதிகப் பொறுப்போடு நடந்து கொண்டவர்கள் முதலியவர்களை அவர்களுடைய செயல்களிலிருந்து அவர் குறித்துக் கொண்டார்.

சபை கூடியது. அங்கு கூடியிருந்த அமர நாயக்கர்கள் ஒவ்வொருவரும் சக்கரவர்த்திக்குத் தமது வாழ்த்தையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டார்கள். வேங்கட நாயக்கர் மற்றவர்களை விட அதிகமான பணிவுகாட்டிக் கிருஷ்ணதேவராயரின் பாதங்களில் விழுந்து எழுந்தார். ஓலை ஒன்றை அவரிடம் நீட்டி, "இறைப் பொருள்களின்



"கமலா! ...னுக்கு நாமியார்க. ...ண்டா ராஜா! உங்கிட்டே விடை பெற்றுக் கொள்ள மனசு இல்லாமல் தவிக்கிருளே என் நாட்டுப் பெண்?"

"இல்லை, அப்பா! கண்ணாடியினிடம்தான் விடைபெற்றுக் கொள்ள மனசு இல்லாமல் திண்டாடிண்டிருக்கா!"

# B·I



# S. S. ரஜுலா

சென்னையிலிருந்து

**1966 மார்ச் 7** | 1966 மார்ச் 31

* சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

C. M. குட்டி
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1

மெஸர்ஸ் கோனா டிராவல்ஸ்
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

நாகப்பட்டினத்திலிருந்து

1966 மார்ச் 8 | 1966 ஏப்ரல் 1

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்.

மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்
முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

**பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:**

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

**ஏஜெண்டுகள்:** பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

விவரங்கள் அடங்கிய ஓலை; பொருள்களைப் பொக்கிஷத்துக்கு அனுப்பச் செய்திருக்கிறேன்'' என்றார்.

சக்கரவர்த்தி அதைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. மற்றவர்களின் வணக்கங்களை ஏற்றுக் கொண்டு, அவர்களின் நலன்களைக் கேட்டறிவதில் ஆர்வம் காட்டினார்.

அவர் உடல் நலம் குன்றியிருந்த காலத்தில் அதிகப் பொறுப்போடு உழைத்தவர்களுக்குச் சக்கரவர்த்திகளின் பரிசுகள் கிடைத்தன. வழக்கம்போல் உழைத்தவர்களையும் பாராட்டிப் பேசினார். கடைசியாக அவர் கவனம் வேங்கட நாயக்கரின் பக்கம் திரும்பியது.

''சக்கரவர்த்தி இனி எங்கே உயிருடன் எழுந்து வரப் போகிறார் என்று முடிவு கட்டிவிட்டீர் போலும்!'' என்று கூறிக் கலகலவென்று நகைத்தார் கிருஷ்ண தேவராயர். ''சக்கரவர்த்தியே போனாலும் அவரோடு சாம்ராஜ்யமும் போய்விட வேண்டுமா?''

சிங்கத்தின் கர்ஜனை மீண்டும் அந்தச் சபையில் ஒலித்தது. ''ஆணை மீறுவோர் யாராக இருந்தாலும் அவருக்கு என்ன தண்டனை என்பது உமக்கு நினைவிருக்கிறதா? கோடானு கோடி மக்களைப் பாதுகாப்போடு வாழ வைக்க வேண்டிய பொறுப்பை நமது சாம்ராஜ்யம் ஏற்றுக் கொண்டிருக்கிறது! ஆணைமீறுவோர் நம்முடைய பகைவர்கள்!''

சக்கரவர்த்தி அருகிலிருந்த கூடத்தை வேங்கட நாயக்கருக்குச் சுட்டிக் காட்டினார். உச்சி முதல் உள்ளங்கால் வரை நடுங்கியது வேங்கட நாயக்கருக்கு. செருக்கனைத்தும் இழந்தவராக அவர் எழுந்து நடந்தார். சக்கரவர்த்தியும் மெல்லச் சிம்மாசனத்தை விட்டு எழுந்தார். அவரால் சரியாகக்கூட நடக்க முடியவில்லை. விசுவநாதனின் தோளைப் பற்றிக் கொண்டு அந்தக் கூடத்துக்குள் நுழைந்தார். பிறகு விசுவநாதனை அதன் வாயிலருகில் நிறுத்திவிட்டு, தனியாகச் சுவரைப் பற்றிக் கொண்டு புகுந்தார். வாயிலில் தொங்கிய பட்டுத் திரை அவரையும் வேங்கட நாயக்கரையும் ஒன்றாக மறைத்தது.

கூடத்துக்குள் தாமாக தமது மேலங்கிகளைக் கழற்றி வைத்தார் வேங்கட நாயக்கர். அங்கு சித்தமாக வைக்கப்பட்டிருந்த நீண்ட சவுக்கைக் கிருஷ்ண தேவராயரின் கரம் பற்றியது. தமக்குள் எண்ணிக்கொண்டே, பத்து முறை ஓங்கி ஓங்கிச் சவுக்கைச் சுண்டினார். வேங்கட நாயக்கரின் முதுகில் இரத்த வடுக்கள் பதிந்தன. வெளியில் அமர்ந்த அமர நாயக்கர்களின் முகங்களில் ஈயாடவில்லை. பளீர் பளீரென்ற சத்தம் அந்தச் சபையையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது.

வெளியே இருவரும் திரும்பி வந்தார்கள்.

வேங்கட நாயக்கர் ஒரு பட்டுத் துணியால் தமது முதுகை மறைத்துக் கொண்டு குனிந்த தலை நிமிராமல் சபைக்கு வந்தார். அவரை ஏறிட்டுப் பார்க்கும் துணிவுகூட அங்கு யாருக்கும் ஏற்படவில்லை.

''நீங்கள் உங்கள் மாளிகைக்குச் செல்லலாம்!'' என்றார் சக்கரவர்த்தி. வேங்கட நாயக்கரைச் சுமந்து கொண்டு அவருடைய சிவிகை அவர் மாளிகைக்குத் திரும்பியது.

விசுவநாதனுக்கு ஏனோ அப்போது அவன் தந்தை நாகம நாயக்கரைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியவில்லை. ஆணை மீறுதல் என்ற வகையில் மிகச் சிறிய குற்றம் செய்துள்ள வேங்கட நாயக்கருக்கு இந்தத் தண்டனை என்றால், நாகம நாயக்கருக்கு?

சாளுவ நரசிம்மரும் அப்போது சிந்தனையில் தான் ஆழ்ந்திருந்தார். ஆனால் அவர் சிந்தனை வேறு வகையில் சென்று கொண்டிருந்தது.

## அத்தியாயம் முப்பத்துநான்கு

# வீரனின் கண்ணீர்

தெற்கே குமரி முதல் வடக்கே கலிங்கம் வரையுள்ள நிலப் பரப்பைக் கிருஷ்ணதேவராயரால் ஒரு குடையின் கீழ் கட்டி ஆள முடிந்ததென்றால், அதற்கு அடிப்படைக் காரணம் மனித சுபாவத்தைப் பற்றி அவருக்கிருந்த நுண்ணறிவுதான். துறவியான புத்தர் எவ்வாறு ஆசைகளே மனித குலத்தின் துன்பங்களுக்கு மூலகாரணம் என்று கண்டுபிடித்தாரோ, அதேபோல் கிருஷ்ண தேவராயரும் ஆசைகளே மனிதர்களை இயக்கிச் செயல் புரிய வைக்கும் மூலசக்தி என்பதையும் கண்டு கொண்டிருந்தார். 'ஆசைகளின்றி மனிதர்களில்லை. ஆசைகளை அறிவின் வழியே செலுத்துகிறவர்கள் உயர்ந்த செயல்களைச் செய்கிறார்கள். ஆசைகளின் வழியே அறிவைச் செலுத்துகிறவர்கள் தவறுகள் செய்கிறார்கள்' என்பது அவர் கருத்து.

ஆகவே, அவருடைய சாம்ராஜ்யத்தை நிர்வகித்து வந்த பல்லாயிரக்கணக்கான அதிகாரிகளுக்கும் அவரவர் தகுதி, திறமை, நேர்மைக்கேற்றவாறு பரிசில்களும் பதவி உயர்வுகளும் ஒருபுறம் கிடைத்துக் கொண்டிருந்தன. மறுபுறம் தங்களுடைய அதிகாரங்களைக் கொண்டு தவறுகளும் குற்றங்களும் செய்கிறவர்களுக்குக் கடுமையான தண்டனைகளும் கிடைத்துக் கொண்டிருந்தன. செருக்கின் மிகுதியால் கொடுங்கோன்மை நடத்திய ஒரு சில சிற்றரசர்களான அமரநாயக்கர்கள் சிறையில் அடைக்கப்பட்டுப் பயங்கரமான தண்டனைகளை அநுபவித்து வந்தார்கள்.

விசுவநாதனின் மாளிகைக்கு அருகேதான் சிறைச்சாலை இருந்தது. அங்கு அவன் சென்று குற்றவாளிகள் உணவு உண்ணும் கோலத்தைக் கண்டிருக்கிறான். வரிசையாகக் கற்களில் குழியிட்டுச் செதுக்கப் பெற்ற உண்கலங்கள் ஒருபுறம் பதிக்கப் பெற்றிருந்தன. அவற்றை அடுத்து நீண்ட பள்ளங்கள் பறிக்கப்பட்டு, கற்களால் தளம் அமைத்திருந்தார்கள். அந்தப் பள்ளங்களில் வந்து

வரிசையாக நின்று கொண்டுதான் குற்ற வாளிகள் உணவு கொள்ள வேண்டும். ''மனிதத் தன்மையற்ற செயல்களைச் செய்யத் துணிபவர்களை நாம் மிருகங்களை நடத்துவது போல்தான் நடத்த வேண்டும்; இல்லாவிட்டால் மனிதனுக்குள்ளே உள்ள மிருகம் மனிதக் கூட்டத்தின் மீதே பாய்ந்துவிடும்!'' என்று அடிக்கடி கூறுவார் சக்கரவர்த்தி.

வேங்கட நாயக்கருக்கு அவர் சவுக்கடி கொடுத்து அனுப்பியது போன்ற நிகழ்ச்சிகள் அதற்கு முன்பும் அவ்வப்போது நடைபெற்றிருக்கின்றன. தவறுகளை மன்னித்து விடும் பெருந்தன்மை கிருஷ்ணதேவராயரிடம் இருந்தது. ஆனால் குற்றங்களை மட்டும் அவர் ஒரு போதும் பொறுத்துக் கொண்டதில்லை. அதிலும் அதிகாரத்தில் உள்ளவர்கள் செய்யக் கூடிய குற்றங்கள் சாம்ராஜ்யத்தின் ஆட்சியையே குலைத்துவிடக் கூடுமென்பதால், அவர்களிடம் அவர் சிறிதும் இரக்கம் காட்டுவதில்லை.

விசுவநாதனுக்குத் தன் தந்தையின் போக்கு அது வரையிலும் ஓர் அதிர்ச்சியை மட்டுமே கொடுத்திருந்தது. சாம்ராஜ்யத்துக்கே அவர் துரோகம் செய்யத் துணிந்து விட்டார் என்பதை அவன் நம்புவதற்கு மறுத்தாலும், அவனுடைய மனச் சான்று அவர் துரோகியாக மாறி விட்டார் என்றே மீண்டும் மீண்டும் வலியுறுத்தியது. நாகம நாயக்கர் பலமுறை சக்கரவர்த்தியின் பாராட்டுக்களைப் பெற்றுப் படிப்படியாக உயர்ந்தவர். அவருடைய ஆட்சிப் பொறுப்பிலிருந்த நாட்டுப் பகுதியும் வளத்தில் மிகுந்ததாகவும் பரப்பில் பெரியதாகவும் இருந்தது. அமரநாயக்கர்களில் ஒருவராகவே அவர் விளங்கினாலும், அவர்களிடையே தனிப்பட்ட செல்வாக்கும் அதிகாரமும் பெற்று அவர் கம்பீரமாக உலவி வந்தவர். பலர் பணிந்து போற்றும் அளவுக்கு அவர் விஜய நகரத்தில் செல்வாக்குப் பெற்று விளங்கினார். அத்தகைய உத்தம வீரரின் குமாரன் என்ற பூரிப்பும் விசுவநாதனுக்கு உண்டு.

சக்கரவர்த்தி, நாகமநாயக்கர் ஆகிய இருவரையுமே தனக்கு வாழ்வில் வழிகாட்டக் கூடிய லட்சிய மனிதர்களாக நம்பி வந்தவன் அவன். இரண்டு கண்களை, காதுகளை, கரங்களை, கால்களை இறைவன் மனிதர்களுக்கு அளித்திருப்பது போல் அவர்கள் இருவரையுமே வழிகாட்டிகளாக இறைவன் அனுப்பியிருப்பது போல் அவனுக்குத் தோன்றியது. ஆனால் இப்போதோ ?

ஆணை மீறிய வேங்கட நாயக்கருக்குக் கிடைத்த சவுக்கடிகள் ஏனோ விசுவநாதனுடைய நெஞ்சில் இரத்தம் கசிய வைத்தன. நாகமநாயக்கருக்கும் இதே போல் தண்டனை கிடைக்காமலா போய் விடும்? அதன் பிறகு அவர் உயிருடன் வெளியில் உலவத் துணிய மாட்டார் என்பது மட்டிலும் நிச்சயம். துங்கபத்திராவில் மூழ்கி உயிர் துறந்தாலும் துறப்பாரே தவிர, மீண்டும் சக்கரவர்த்தியின் முகத்தில் விழிக்கக் கூடியவரல்லர் அவர்.

விசுவநாதனுக்கு அன்றைக்கு உறக்கம் வரவில்லை. கனவுகள் வந்தன. அவனுடைய தந்தையார் சவுக்கடி படுவது போலவும், அவர் சிறையில் அடைக்கப்படுவது போலவும், அவர் குற்றவாளிகளின் வரிசையில் நின்று ஒரு வேளை உணவுக்குக் காத்து நிற்பதுபோலவும் பயங்கரமான கனவுகள் அவனைப் படையெடுத்தன.

அழுது பழக்கமில்லாத விசுவநாதனுக்கு ஏனோ வாய்விட்டு அழ வேண்டும் போல் தோன்றியது. மறு நாள் முற்பகலை எப்படியோ அரண்மனையில் கழித்துவிட்டு, அவசரம் அவசரமாக லட்சுமியைக் காணச் சென்றான். இருவரும் ஒருவரையொருவர் பார்த்து ஒரு கணம் திடுக்கிட்டார்கள். நோய்ப் படுக்கையில் விழுந்து எழுந்த தோற்றம் இருவரிடமுமே காணப்பட்டது.

''லட்சுமி! நான் ஆற்றங்கரைக்குச் செல்லலாமென்று நினைக்கிறேன்; ஓய்விருந்தால் நீயும் புறப்பட்டு வா'' என்று சொல்லிவிட்டு அவன் விரைந்தான்.

பாலத்தைச் சுற்றிக் கொண்டு அவன் குதிரையில் வந்து சேர்வதற்குள் லட்சுமி அங்கு அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டவுடன் தான் அது வரையில் அடக்கி வைத்திருந்த கண்ணீரைக் கொட்டிவிட்டாள் விசுவநாதன்.

''என்ன துன்பம் வந்துவிட்டது உங்களுக்கு? நீங்களே இப்படிக் கலங்கினால் என்னால் எப்படிப் பொறுக்க முடியும்?'' என்று துடித்தாள் லட்சுமி. (தொடரும்)

# டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் தரத்தில் சிறந்தவை



# பத்ரிநாத்ஜி!

எஸ். தேவகி.

'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்ற பழமொழி எப்படி நமது மந்திரிமார்களுக்குப் பொருந்தாதோ, அதே போலத் 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற பழமொழியும் நமது கதாநாயகனான பத்ரிநாத்துக்குத் துளிக்கூடப் பொருந்தாது. எப்படி எனில்:

குழந்தை பத்ரிக்குக் கைகால் முளைத்து அவன் ஓடி விளையாடத் தொடங்கிய அதே சமயத்தில் அவன் வீட்டுத் தோட்டத்துச் செடிகளுக்கும் சனி தசை தொடங்கியதென்று கூறலாம். தரையோடு படர்ந்து கொட்டக் கொட்ட விழிக்கும் சின்னஞ்சிறு டேபிள் ரோஸ் முதல், எட்டிக் குதித்தாலொழியக் கைப் பிடிக்கு அகப்படாத சூரிய காந்தி ஈறாக, பத்ரிநாத்தின் பிஞ்சுக் கரங்களிலே அகப்பட்டுச் சித்திரவதைப்பட்டுச் சின்னாபின்னமாயின. செடியென்றும், கொடியென்றும், இலையென்றும், பூவென்றும், பிஞ்சென்றும், காயென்றும் பாரபட்சம் காட்டாமல், கண்ணுக்குப் பகைமையாய்க் காட்சி தரும் தாவர வர்க்கம் எல்லாவற்றையுமே பறித்துப் பிய்த்துப் போட்டு மிதித்துத் துவம்சம் செய்து விட்டுப் பெருஞ்சாதனை புரிந்தது போலக் கைகொட்டிப் பேரானந்தம் கொள்வான் குழந்தை பத்ரி.

அதே பயல்தான் இன்று, வரிசை வரிசையாகப் பெரியதும் சிறியதுமாக ஆரோகணித்து நிற்கும் வெட்டுத் தொட்டிகளில் பச்சைப் பசேலென்று வளர்ந்து நிற்கும் ஏதேனும் ஒரு செடியின் ஓர் இலையை அந்நியர் யாரேனும் தொட்டுப் பார்த்தால் கூடப் பாய்ந்தோடி வந்து, ''ப்ளீஸ்! டோன்ட் டச் இட்!'' என்று எச்சரிக்கும் குரலில் முழங்குகிறானென்றால் ஆச்சரியமாகத் தானே இருக்கும்?....

பத்ரிநாத் இன்று கட்டான உடலும் குன்றாத குறுநகையும் கொண்ட குமரன் மட்டுமல்ல, பிரபல 'நாத் நர்சரி'யின் முதலாளியும்கூட என்ற உண்மையைப் புரிந்து கொண்டோமானால், அதைக் கண்டு ஆச்சரியப்பட வேண்டிய அவசியமே இல்லை.

பத்ரியின் தந்தை அந்தக் காலத்தில் சிறியதாக ஆரம்பித்த செடி வியாபாரம் தான் இன்று கொடி கட்டிப் பறக்குமளவுக்குச் செழித்தோங்கி வளர்ந்திருக்கிறது. 'நாம் வியாபாரம் செய்தது போதும், இனி மகன் பார்த்துக் கொள்ளட்டும்' என்று பிள்ளையின் கையில் வியாபாரத்தை ஒப்படைத்து விட்டுப் பெரியவர் வீட்டிலேயே தங்கி விட்டார்.

'ஹை! என்ன பிரமாத பிஸினஸ்! இங்கே இருக்கிற செடியைப் பிடுங்கி அங்கே வைத்தால் தன்னாலே வளர்ந்துவிட்டுப் போகிறது' என்று ஆரம்பத்தில் அலட்சியமாக நினைத்த பத்ரி, நாளடைவில் அந்தப் 'பிஸினஸு'க்கு மண் வளம், செடி கொடிகளின் தன்மை, பயிரிடும் பருவம், உரக் கலவை விகிதம் ஆகியவை பற்றிய நுண்ணறிவும் தேவை என்பதை உணர்ந்தவுடன்தான் 'கற்றது கைம்மண் அளவு; கல்லாதது தொட்டி மண் அளவு' என்று புரிந்து கொண்டான்.

சிறுகச் சிறுக ஒவ்வோர் அம்சமாக, ஊன்றிக் கவனித்துத் தன்னைத் தயார் செய்து கொண்ட பத்ரி, விரைவிலேயே தோட்டக் கலையில் ஒரு நிபுணனாக ஆகிவிட்டான். 'ஐந்தே நிமிஷங்கள்தான்; பொறுத்துக் கொள். இதோ ஆகி விட்டது. அதிகமாக வலிக்கவே வலிக்காது' என்று அவன் சொல்வதைச் சற்று ஒதுங்கியிருந்து கேட்போமானால், காயம் பட்ட யாரோ ஒருத்தருக்கு அவன் சிகிச்சை செய்வதாகவே நினைத்துக் கொள்வோம். ஆனால் உண்மையில் அவன் அப்போது ரோஜாச் செடிக்குப் பதியன் போட்டுக் கொண்டே அதனுடன் தான் அப்படிப் பேசிக் கொண்டிருப்பான்! ஒவ்வொரு செடியிடமும், கொடியிடமும் அவனுக்கு அத்தனை அன்பு, பற்றுதல், பாசம், எல்லா மண்ணும்!

சினிமாஸ்கோப் படம் போல நீளமான பெரிய கார் ஒன்று வந்து 'நர்ஸரி' வாசலில் நின்றதும், அது பக்கத்துக் கட்டடத்தில் இருக்கும் 'அப்பாவி புரொடக்ஷன்ஸு'க்கு வந்திருக்கும் காராகத்தான் இருக்கும் என்று ஊகித்துக் கொண்ட பத்ரிநாத், அந்தக் காரிலிருந்து பள்ளிச் சீருடை அணிந்த பத்து வயதுப் பையன் ஒருவன் இறங்கி நர்ஸரிக்குள் நுழைவதைக் கண்டதும் பிரமித்துப் போனான்.

''இந்த விதை உங்ககிட்டே இருந்தால் வாங்கிட்டு வரச் சொன்னா......'' என்று காகிதமொன்றைப் பத்ரியிடம் நீட்டினான் அந்தப் பையன்.

ஆங்கிலத்தில் குண்டு குண்டாக இங்கிலீஷ் பூச்செடி ஒன்றின் பெயர் எழுதப்பட்டிருந்தது.

''முருகப்பா! இதை எடுத்துக் கொடு!......'' என்று தன் உதவியாளனிடம் அந்தச் சீட்டைச் சேர்ப்பித்து விட்டு, ''ஆமாம், இந்தச் செடியை எப்படிப் பயிர் பண்ணுவதென்று தெரியுமா?.....'' என்று பையனைக் கேட்டான்.

'தெரியும்' என்பதற்கு அறிகுறியாகப் பையன் தலையசைத்தான்.

''தோட்டக்காரன் இருக்கிறானா?.....''

''இல்லே..... எங்க அக்காதான் தோட்டத்தைக் கவனிக்கப்பா...''

அவன் 'அக்கா' என்று குறிப்பிட்டது பன்னிரண்டு வயதுச் சிறுமியாக இருக்கும் என்று அப்போதைக்கு நினைத்துக் கொண்டவனாக, நாற்பது பைசாவை வாங்கிக் கொண்டு விதைப் பொட்டலத்தைக் கொடுத்தான் பத்ரி.

அவனுடைய ஊகம் தவறென்பது சரியாக ஏழு நாட்களுக்குப் பிறகு தான் தெரிய வந்தது.

''இதோ பார்... இப்படி நிமிர்ந்து நிற்க வேண்டும்...... சும்மா சும்மா தலையைக் கவிழ்த்துக் கொள்ளாதே!..... என்ன வெட்கம் உனக்கு?.......'' என்று முல்லைக் கொடியை மூங்கிலில் ஏற்றி விட்டவாறே நின்றிருந்த பத்ரி, முதுகுப்புறமிருந்து, ''ரொம்பத் தாங்க்ஸ் சார்!...!'' என்ற குரல் வந்ததும் சற்று முன் ஒட்டுப் போட்ட சபோட்டாதான் நன்றி தெரிவிக்கிறதாக்கும் என்று ஒரிரு விநாடிகள் சும்மா இருந்து விட்டான்.

அப்புறம்தான் ஏதோ நினைவு வந்தவனாகத் திரும்பவும், எதிரே முல்லை மலர் மேனியும் ரோஜா நிறமும் கொண்ட இளம் நங்கையொருத்தி நிற்பதைக் கண்டான்.

''தாங்க்ஸ்!....'' என்றாள் அந்தப் பெண் மீண்டும். நிலோத்பல மலரிலே எங்காவது நெருப்புப் பிடிக்குமோ? ஆனால் இங்கே பிடித்திருந்தது. அவளது மலர் விழிகளிலே நெருப்புப் பொறி பறக்க ஆரம்பித்திருப்பதை உணர்ந்தான் பத்ரி.

''எதற்குத் தாங்க்ஸ் சொல்கிறீர்கள்?...'' என்று கேட்டான்.

''இதற்குத்தான்!.....'' என்றவள் கையிலிருந்த காகிதப் பையைக் கவிழ்த்துக் கொட்டினாள். மண் தரையில் ஓசைப்படாமல் விழுந்த பொருளைக் கண்டதும் பத்ரிநாத் சட்டென்று எங்கே, எப்போது தவறு நேர்ந்திருக்கிறது என்று கண்டு கொண்டு விட்டான்.

''விதை கேட்டனுப்பினால் இதைக் கொடுத்தனுப்பி யிருக்கிறீர்களே?...'' என்று சினிமா வசனம் போல எதுகையுடன் கேள்வி அம்பு ஒன்றை வீசியது அந்தப் பெண்.

''மன்னிக்கவும்......இது உரம்.....அதாவது, புழு எச்சம்..... நீங்கள் கேட்ட விதையும் பார்வைக்கு இதே போலத்தான் இருக்



கும்.......எனவே, அந்த மடையன்—என் அஸிஸ்டெண்ட்—இதைத் தவறுதலாகக் கொடுத்து விட்டான் போலிருக்கிறது.....ஐயாம் வெரி ஸாரி......''

''ஸாரி சொல்வது அப்புறம் இருக்கட்டும். எனக்கு இதனால் எத்தனை பெரிய அவமானம் நேர்ந்திருக்கிறதென்று உங்களுக்குத் தெரியுமா?.......''

''அவமானமா?....உங்களுக்கா?.....நேர்ந்ததா?.....ஏன்....? எப்படி?....'' என்று பத்ரியும் கேள்விகளாகப் போட்டு அடுக்கினான்.

''ஷேமென்றால் அப்படிப்பட்ட 'ஷேம்'...என்னால் வெளியே தலை காட்டவே முடியவில்லை...அவமானம் பிடுங்கித் தின்கிறது.''

'உங்களிடமிருந்து எதைப் பிடுங்கித் தின்கிறது அந்தப் பொல்லாத அவமானம்?' என்று கேட்கப் பத்திரிக்குக் கொள்ளை ஆசை தான். இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டு ''விஷயம் என்னவென்றுதான் கொஞ்சம்புரியும்படியாகச் சொல்லுங்களேன். கேட்போம்!.....'' என்றுள் பணிவாக.

மீரா — அந்தப் பெண் — சொன்னதாவது:

**மீ**ராவின் தந்தை மார்க்கசகாயம் சென்னை நகரின் ஒரு மூலையிலே பல வருஷங்களுக்கு முன்பே கிரவுண்ட் பதினைந்து ரூபாய் என்று நிறைய நிலம் வாங்கி வளைத்துப் போட்டிருந்தார். இப்போது ஜுர வேகம் போலக் கிரவுண்டின் விலையும் மளமள வென்று ஏறிப் போகவே, சாமர்த்தியமாக நிலத்தைப் 'பிளாட்'டாக்கி, 'பிளாட்'டைப் பணமாக்கி விட்டார். அங்கே எழுந்ததுதான் 'சகாய நகர்' என்ற காலனி. அந்தக் காலனியிலேயே தாமும் ஒரு பெரிய பங்களாவாகக் கட்டிக் கொண்டு குடியேறி விட்டார் மார்க்கசகாயம்.

'சகாய நகர்' வாழ் 'ஸ்டைலிஷ்' பெண் மணிகள் 'ஷாப்பிங்' போனநேரமும், சங்கீதக் கச்சேரிகளை ரசித்த நேரமும், மாதர் சங்கத்தில் பல்லாங்குழி முதல் 'பிலியர்ட்ஸ்' வரையில் ஆடிய நேரமும், அக்கம்பக்கத்துச் சேரிகளில் புகுந்து, 'இன்னும்மா இது ரோதனையாப் போச்சு!' என்ற சேரிவாசிகளின் அலுப்பையும், சலிப்பையும் பொருட்படுத்தாமல் 'சோஷல் சர்வீஸ்' செய்த நேரமும் போக, அவரவர் வீட்டிலேயே தோட்டம் போட முனைந்த போதுதான் பிடித்தது சனியன், கிளம்பியது விபரீதம் !

என்னதான் கை வலிக்க மண்ணைத் தோண்டி, உயர்ந்த ரக விதைகளாகப் பொறுக்கிப்போட்டு, உரம்வைத்து, தண்ணீர் பாய்ச்சினாலும் ஒரு புல், பூண்டு தலையெடுக்க வேண்டுமே?.....ஊஹூம்! விதை, உரம், தண்ணீர் எல்லாவற்றையும் அகரப் பசியுடன் விழுங்கிவிட்டு 'அக்கடா' என்று இருந்தது அந்தப் பாழும் பூமி.

பெண்மணிகள் சோர்ந்து விட்டார்கள். ''இந்தப் பாழாய்ப் போன இடத்தில் ஒரு இழவும் முளைக்காது...... மண் ராசி அப்படி!' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். அது போதாதென்று, ''இந்தப் பொட்டல் காட்டில் வந்து வீடு கட்டிக் கொண்டோமே!..... என்ன மடத்தனம்!.... சே!'' என்று வேறு நொந்து கொண்டார்கள். அதுவும் போதாதென்று தோன்றியதால், இன்னும் ஒரு படி முன்னேறி, ''மண் விஷயத்திலேகூட மார்க்கசகாயம் மோசம் செய்து விட்டார்!.......'' என்று பகிரங்கமாகக் கூறிக் கொண்டார்கள்.

வீடுகளிலிருந்து புறப்பட்டு, 'மாதர்' சங்கத்தில் புகுந்து, வீதிகளிலும் தவழ ஆரம்பித்த இந்த அவதூறு மெள்ள மெள்ள மார்க்க சகாயத்தின் காதுகளுக்கும் எட்டியது. அவருக்குக் கோபம் பொத்துக் கொண்டுவந்தது. ஒரு விதத்தில் பார்க்கப் போனால் அது என்னவோ நியாயமான கோபம்தான்.

மார்க்கசகாயம் முன்பு வீடு கட்டும் 'கன்ட்ராக்ட் பிஸினெஸ்' செய்து கொண்டு இருந்த போது மரம் விஷயத்தில் ஏமாற்றியிருக்கிறார்; சிமிட்டி விஷயத்திலும் ஏமாற்றியிருக்கிறார். ஆனால் மண் விஷயத்தில் மட்டும் ஏமாற்றியதே கிடையாது.ஊஹூம்;மண் விஷயத்தில் ஏமாற்றி விட்டதாகச் சொல்வதை அவரால் ஒப்புக்கொள்ளவே முடியாது.....

எனவேதான், மனம் நொந்து போன மார்க்கசகாயம் மகளைக் கூப்பிட்டார், தம் சகாயத்துக்கு. தந்தைக்கு நேர்ந்த பழியைத் துடைத்தெறிய வேண்டியது மகளின் கடமையல்லவோ?..... ஆனால் அவரது புத்திரச் செல்வமான கோபியோ வீடு முழுவதும் வர்ணக் காகிதங்களைக் கிழித்து எறிவதிலேயே குறியாக இருந்தானாதலால் பழியைத் துடைத்தெறியப் பெண்ணைக் கூப்பிட்டார். ''எப்படியாவது இந்த மண்ணில் செடியை வரவழைத்துக் காட்ட வேண்டியது உன் பொறுப்பு. மகளே, உன் சமர்த்து!......'' என்று கூறிவிட்டார்.

பி. எஸ்ஸி. பட்டதாரியான அந்தப் பெண் அந்த நிமிடம் முதலே தோட்ட வேலையில் ஈடுபட்டாள். அத்துடன் நின்றிருந்தால்கூடப் பரவாயில்லை. மாதர் சங்க அங்கத்தினர்களிடம், ''எங்கள் வீட்டுத் தோட்டத்தில் செடிகள் பூத்துக் குலுங்க வைக்கிறேன், பாருங்கள்!'' என்று ஜம்பமாகச் சவால் வேறு விட்டு விட்டு வந்தாள்.

எந்தக் கட்டாந்தரையாலும் முளைத்துப் பூக்கக் கூடிய இங்கிலீஷ் பூச்செடி ஒன்றைப் பரீட்சார்த்தமாகப் பயிர் செய்து, 'சகாய நகர்' பெண்மணிகளின் மூக்கை உடைத்தெறிவது என்ற முயற்சியில் ஈடுபட்டுத்தான் — பாவம் — தன் மூக்கே உடைந்து விட்டது. எல்லாம் நாசமாய்ப் போன 'நாத் நர்ஸரி'க்காரர்களின் மோசடியால்!... விதையா கொடுத்தனுப்பினார்கள்?.....

''இப்போது சொல்லுங்கள்: நான் உங்கள் மீது மோசடி வழக்குப் போடலாமா கூடாதா?'' என்று தன் கதையைச் சொல்லி முடித்து விட்டுக் கேட்டாள் மீரா.

''வழக்குப் போடுவது அப்புறம் இருக்கட்டும்; நான் இப்போது தரும் விதைகளைக் கொண்டு போய்ப் போட்டுப் பாருங்கள்!... அப்புறம் சொல்வீர்கள்!......''

''நோ நோ!..... உங்களை என்றும் நம்பவே முடியாது!... யூ ஆர் எ சீட்!....''

''ஏதோ தவறு நேர்ந்து விட்டது. அதற்காக இப்படியெல்லாம் கோபித்துக் கொண்டு உங்கள் அழகு முகத்தை அலங்கோலப்படுத்திக் கொள்ளலாமா?....வேண்டுமானால் நானே ஸ்பெஷலாக உங்கள் தோட்டத்தைக் கவனித்துக் கொள்கிறேன்.... இன்னும் கொஞ்ச நாட்களில் உங்கள் தோட்டம் பூத்துக் குலுங்குகிறதா இல்லையா என்று பாருங்கள்!.....''

''உண்மையாகவா?.....''

''உரிமையோடு சொல்வதற்காக மன்னிக்கவும். உங்கள்பேரில் ஆணையாக.''

அது வரை வாடியிருந்த மீராவின் முகம் அப்போதுதான் மலர்ந்தது.

சொன்னபடியே தோட்டம் போட்டுக் கொடுக்கவென்று வந்து சேர்ந்து விட்டான் பத்ரி. அவன் மார்க்கசகாயத்தின் பங்களாவை அடைந்த பிறகுதான் அங்கே பெண்கள் பலர் வந்து கூடியிருப்பது தெரிய வந்தது. 'ஏதாவது பூஜை கீஜையாக இருக்குமோ என்னவோ?' என்றுதான் முதலில் நினைத்தான். அப்புறம்தான், அவன் அங்கு வந்து தோட்டம் போடவிருக்கும் செய்தியை மீராவின் மூலம் கேள்விப்பட்டு அதை வேடிக்கை பார்ப்பதற்கெனவே அவர்கள் வந்திருக்கிறார்கள் என்ற உண்மை தெரிய வந்தது. "இவர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பொறுமையாகப் பதில் சொல்லியாக வேண்டுமே" என்ற பயம் வேறு அவனைப் பற்றிக் கொண்டது.

உடன் அழைத்து வந்திருந்த ஆட்களை விட்டு, மண் தரை முழுதும் கொத்தச் சொன்னான். ஆங்காங்கு மரங்கள் வைப்பதற்கெனக் குழிகள் போடச் சொன்னான். தோட்டக்காரர்களின் ஒவ்வோர் அசைவையும் ஊன்றிக் கவனித்து வந்த பெண்களில் ஒருத்தி, 'இங்கே ஏன் கொத்துகிறீர்கள்', அங்கே ஏன் மண்ணைக் குவிக்கிறீர்கள்?', 'என்னத்தை வைத்துக் கொண்டு இப்படி மண்ணைப் புரட்டுகிறீர்கள்?' 'என்னென்ன செடிகள் போடப் போகிறீர்கள்?' 'குரோட்டன்ஸ் இந்த மண்ணில் நன்றாக வளருமா?' என்று நூற்றெட்டுக் கேள்விகளை வீசிவிட்டு, ''இங்கேயெல்லாம் எதற்காக இப்படிக் குழி வெட்டுகிறீர்கள்?'' என்று கேட்டபோது பத்ரிநாத்துக்கு உண்மையிலேயே ரொம்பக் கோபம் வந்து விட்டது. ''உங்களுக்காகத்தான்!'' என்று எரிச்சலுடன் சொன்னான். ''ஐயையே! இது எங்கள் வீடு இல்லையே!... எங்கள் வீட்டுக்கு வந்து எனக்குக் குழி வெட்டித் தாருங்கள்!'' என்று அவன் சொன்னதை யதார்த்தமாக எடுத்துக்கொண்டு அந்தப் பெண் கூறியபோது ''ஆண்டவா!'' என்று அவனால் அரற்றத்தான் முடிந்தது.

விதை போடுவதற்கென்று கையோடு கொண்டு வந்திருந்த விதைப் பொட்டலங்களை எடுத்ததும், பெண்மணிகள் எல்லோரும் ''எங்கே, இப்படிக் கொடுங்கள் பார்க்கலாம்'' என்று ஆளுக்கொன்றாகப் பறித்துக் கொண்டு விட்டார்கள்.

''ஹையா!... இப்படிக் கலர் கலராகப் பூக்குமா சார்!''

''உம்...''

''அவர் சும்மா சொல்கிறாரடி.... மஞ்சள் மஞ்சளாகத்தான் பூக்கும்... இவர் சும்மா வாணும் 'டிரைக் கலர் பிளாக்' பண்ணி இது மாதிரி பைமேலே அச்சடித்திருக்கிறார்!...'' என்று இடையில் வெட்டினாள் இன்னொரு பெண். பத்திரிகை உதவியாசிரியர் ஒருவரின் பெண் போலிருக்கிறது.

''டீ ... ஐ ... ஏ ... என் ... டி ... ஹெச் ... யூ ... எஸ் ...'' என்று எழுத்துக் கூட்டி வாசித்துவிட்டு ''ஏன் சார், இதை எப்படி உச்சரிப்பது? டயான்தஸ்ஸா, டியான்தஸ்ஸா?... இல்லே, டயான்துஸ் என்று சொல்ல வேண்டுமா?'' என்று சொல்லாராய்ச்சிக்கு வித்திட்டாள் ஒரு பெண்.

''உங்க வீட்டிலே 'மோர்னிங் ப்யூட்டி' இருக்கோ?'' என்றாள் ஒருத்தி.

''என்னடி?... என்ன கேட்டீர்கள்?''

''ஏய், பார்கவி! உன் மலையாள 'ஆக்ஸெண்ட்' நீயும்! அவள் 'மார்னிங் பியூட்டி'யைக் கேட்கிறாள் சார்!'' என்று ஒரு பெண் விளக்கிச் சொன்னதும் அவனுக்குச் சிரிப்புத்தான் பொத்துக் கொண்டு வந்தது.

ஒரு வழியாகச் செடிகளை வைத்து, விதைகளை ஊன்றி, உரம் வைத்துத் தண்ணீர் ஊற்றி, எந்தெந்தச் செடிக்கு எவ்வெப்போது தண்ணீர் விடவேண்டும் என்று மீராவிடம் சொல்லிவிட்டு வந்து சேர்ந்தபோது, 'அப்பாடா' என்று இருந்தது பத்ரிக்கு.

ஒரு வாரத்துக்குப் பின் மீண்டும் மார்க்கசகாயத்தின் பங்களாவுக்கு விஜயம் செய்தான் பத்ரிநாத். என்ன ஆச்சர்யம்!... அவன் பச்சைப் பசேலென்று வைத்துவிட்டுப் போன செடிகளெல்லாம் காய்ந்து கிடந்தன. விதைகள் ஊன்றிய இடங்களோ வெறும் தரையாகக் காட்சி தந்தன.

அவன் வருத்தத்தோடு முகத்தைத் தொங்கப் போடும்போது, ''என்னய்யா சத்ரிநாத்!'' என்ற கம்பீரமான குரல் எழுந்தது பின்னாலிருந்து. மார்க்கசகாயம்!

''இல்லையப்பா, இவர் பெயர் பத்ரிநாத்!'' என்றாள் அங்கு வந்த மீரா.

''அட இருக்கட்டுமே அம்மா, ஏதோ ஒரு நாத்... என்னய்யா, தோட்டம் எப்படிப் பச்சைப் பசேலென்று இருக்கிறது, பார்த்தீரா?...''

அப்போதுதான் பத்ரியின் மூளையிலும் பளிச்சென்று ஓர் 'ஐடியா' உதயமாகியது.

''உங்களுக்கு வேண்டியதெல்லாம் உங்கள் சவாலுக்குத் தகுந்தபடி தோட்டம் பச்சைப் பசேலென்று காட்சியளிக்க வேண்டியது தானே?'' என்று கேட்டான்.

''அது உம்மால் முடியாதய்யா... இது பூரா சுண்ணாம்பு மண்!''

''முடிகிறதா இல்லையா பாருங்கள்!.... ஆனால் ஒன்று. என் அனுமதியின்றி யாரும் தோட்டத்துக்குள் நுழையக் கூடாது.... என்ன சம்மதமா?...''

''என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்: என் சிநேகிதிகள் முன்பு நான் தலைகுனிகிறாற் போல மட்டும் எதுவும் செய்துவிடாதீர்கள்!'' என்றாள் மீரா.

அடுத்துச் சில நாட்களுக்குக் காலையும் மாலையும் மார்க்க சகாயத்தின் பங்களாவில் ஆஜர் கொடுத்தான் பத்ரிநாத். காலையில் வந்தது மீராவுடன் அரட்டையடிப்பதற்காக. மாலையில்தான் தோட்ட வேலை. அதுவும் இருட்டிய பிறகே ஆரம்பித்தான். காரணம் கேட்டதற்கு, ''இப்போது போடப் போகும் செடிகளுக்கு உஷ்ணம் என்பதே கூடாது. அதனால்தான் சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகு வேலையை ஆரம்பிக்கிறேன்'' என்று பதிலளித்தான்.

மீண்டும் ஒரு வாரத்துக்குப் பிறகு 'சகாய நகர்' வாழ் பெண்மணிகள் மீண்டும் மீராவின் பங்களாவில் வந்து கூடினார்கள். அவர்கள் எல்லோரையும் தோட்டத்தைச் சுற்றி அழைத்துக் கொண்டு போய்க் காண்

பித்தான் பத்ரி. 'ஆச்சரியம் ஆனால் உண்மை' என்ற தலைப்பின் கீழ் வருவதற்குச் சகல தகுதிகளும் உண்டு இந்தத் தோட்டத்துக்கு என்று சொல்லுமாப்போலே, புஷ்பராசிகள் பூத்துக் குலுங்கின தோட்டம் முழுவதும்.

''பியூட்டிஃபுல்!''

''லவ்லி!''

''ஆச்சரியம்!''

''எந்தா அதிசயமாணு!''

இப்படிப்பட்ட புகழுரைகளைப் பெண் மணிகள் வாரி வழங்கிக் கொண்டிருக்கும் போது ஒருத்தி மட்டும் ஒரு பூவைப் பறிக்கக் கை நீட்டினாள். ''நோ!'' என்று பத்ரி ஒரு அதட்டல் போட்டானே பார்க்க வேண்டும்! ''இம்மாதிரியெல்லாம் தொட்டால் பட்டுப் போய்விடும்... மேலும் இந்தப் பூவெல்லாம் தோட்டத்தில் இருந்தால்தான் அழகு... இதைப் போய்த் தலையில் வைத்துக்கொள்ள முடியுமா என்ன?'' என்றும் கூறினான். அதே மூச்சோடு, ''மீரா, இவர்களையெல்லாம் உன்னை அழைத்துக் கொண்டு போ...கண் பட்டுவிடப்போகிறது தோட்டத்துக்கு!...'' என்று வேறு எச்சரித்து வைத்தான்.

''மிஸ்டர் நாத்! நீங்கள்தான் எங்களுக்கும் தோட்டம் போட்டுத் தரவேண்டும்...''

''எங்களுக்கும்!...''

''எங்களை மறந்துவிடாதீர்கள்?...''

இத்தனை வேண்டுகோள்களுக்கிடையிலும் மிஸ். கேள்வி குமாரி, ''அது இருக்கட்டும். ஓர் அதிசயம் கவனித்தீர்களா நீங்கள் எல்லாம்?...'' என்று பொதுப்படையாகக் கேள்வி ஒன்றை வீசினாள்.

''என்ன?...'' கேள்வி கோரஸ் போல் ஒலித்தது.

''இத்தனை பூ பூத்திருந்தும் துளிக்கூட வாசனையே இல்லை பார்த்தீர்களா?''

வேறு யாரும் பதிலளிப்பதற்கு முன்பு பாய்ந்தான் பத்ரி:'' இங்கிலீஷ் பூச்செடிகளாயிற்றே எல்லாம்? வாசனை எங்கிருந்து வரும்?'' என்று திருப்பிக் கேட்டான். அபாரமான கேள்வி. எனவே யாரும் பதில் பேசவில்லை.

அன்று எல்லோரும் விடை பெற்றுப் போன பிறகு, கூடை நாற்காலியில் ஒய்வாகச் சாய்ந்துகொண்டு பத்ரியையும் தன்னையும் நாயக — நாயகி பாவத்தில் நினைத்து சுஸ்வர மான கற்பனைகளை மீரா மனத்தில் போட்டுப் புரட்டிக் கொண்டிருக்கும்போது, ''அக்கா! அக்கா!... இதைப் பார்த்தியா!'' என்று கூவிக்கொண்டே உள்ளே ஓடிவந்தான் கோபி.

''என்னடா, கொஞ்ச நேரம்கூட கம்மா இருக்க விடாமல்?'' என்று அன்பாகக் கடிந்து கொண்டே திரும்பியவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கோபியின் கையில் வகைக்கு ஒன்றாக, ஒரு கொத்துப் பூ!

''அடப் பாவி! எல்லாவற்றையும் பறித்து விட்டாயா?... உன்னை என்ன செய்கிறேன் பார்!'' என்று ஆக்ரோஷத்துடன் எழுந்தவ ளின் கைகளிலே, ''நீயே பார் அக்கா!'' என்று மலர்க் கொத்தைத் திணித்தான் கோபி.

கையில் வாங்கிய பிறகே — கண்ணருகில் வைத்துப் பார்த்த பிறகே — உண்மை புரிந்தது மீராவுக்கு. அத்தனையும் பிளாஸ்டிக் பூக்கள்!

மூச்சிரைக்கத் தோட்டத்துக்குப் போய் டார்ச் விளக்கைப் போட்டுக் கொண்டு பார்த்தால், பத்ரிநாத்தின் திருவிளையாடல் சோற்றுப் பூசணிக்காய் போலப் புரிந்தது. தோட்டத்தில் இருந்ததில் மண் ஒன்றைத் தவிர மற்றதெல்லாம் பிளாஸ்டிக்! 'ஓகோ! இதற்காகத்தானா யாரும் தொட்டுப் பார்க் கக்கூடாது, உத்தரவின்றித் தோட்டத்துக் குள் வரக்கூடாது என்றெல்லாம் நிபந்தனைகள் விதித்தார் அந்தப் பொல்லாதவர்?...'

நினைக்க நினைக்கப் பத்ரியின் மேல் கோபந் தான் வந்தது மீராவுக்கு. மற்றப் பெண் களை முட்டாளாக்கியது இருக்கட்டும்; அவளை யும் அல்லவா முட்டாளாக்கி விட்டான்!...

டெலிபோனை எடுத்தாள். பத்ரியின் எண் களைச் சுழற்றினாள். ''பத்ரி ஹியர்...'' என்று மறுமுனையிலிருந்து பதில் வந்தது.

''இன்று முதல் உங்கள் பெயரை 'பிராடு நாத்' என்றுமாற்றிக்கொள்ளுங்கள். மோசடி, பொய், தில்லு முல்லு இதெல்லாம் அப்ப டியே உங்களுடைய ரத்தத்தில் ஊறிப்போய்க் கிடக்கிறதே!...'' என்று படபடத்தாள்.

''ஓ மீராவா?... கோபித்துக் கொள்ளாதே மீரா... நானே நாளைக் காலையில் உன்னிடம் விஷயத்தை உடைத்துச் சொல்லிவிடலாம் என்றுதான் இருந்தேன்.... அதற்குள் நீ முந்திக்கொண்டு விட்டாய்...''

''ஓகோ!... உங்கள் குட்டு வெளிப்பட்ட பிறகு இப்படி ஒரு சமாதானமா? என்னை ஏமாற்றுவதற்காகத்தானே இந்த நாடக மெல்லாம்? எதற்காக இப்படிப் பொய் புளுகுகிறீர்கள்... இதெல்லாம் நம்ப நான் ஒன்றும் அத்தனை முட்டாள் இல்லை.... தெரிந்து கொள்ளுங்கள்...''

''கொஞ்சம் பொறு மீரா... உன்னை நான் ஏமாற்றுவதாவது? அந்த எண்ணமே எனக் குக் கிடையாது. நீ ஒரு 'சாலஞ்ச்' எடுத்துக் கொண்ட பிறகு அதை வெற்றிகரமாக நிறைவேற்றி வைப்பது என் கடமை அல் லவா?... உன் கௌரவத்தைக் காப்பாற்று வதற்காகத்தான் அப்படியொரு தந்திரம் செய்தேன். உண்மையைச் சொல்லப்போனால் உங்கள் பேட்டை மண்ணில் — அதுவும் குறிப் பாக உங்கள் வீட்டு மண்ணில் ஒன்றே ஒன் றைத் தவிர வேறு எதுவும் முளைக்காது என் பது எனக்கு நன்றாகத் தெரியுமாக்கும்!''

''என்னவாம் அது?...''

''அதைச் செடி என்று சொல்வார்கள் சிலர்; கொடியென்று சொல்வார்கள் சிலர்... ஆனால் அது செடியுமல்ல, கொடியுமல்ல... மூன்றே எழுத்துக் கொண்டது அது...இந்தக் கதாசிரியர்கள் அடிக்கடி உபயோகிப்பார்கள் அந்த வார்த்தையை... புரியவில்லை உனக்கு?''

மீரா நிறையப் பத்திரிகைகளையும் புத்தகங் களையும் படித்த புத்திசாலிப் பெண். அவன் குறிப்பிடுவது என்னவென்பதைப் புரிந்து கொண்டாள். அவள் முகம் பிளாஸ்டிக் செம்பருத்தியைவிட அதிகமாகச் சிவந்தது.

''ஜூனி!...'' என்றவள்...

மன்னிக்கவும்: அவர்கள் அப்புறம் பேசிய தெல்லாம் நம் கதைக்கு அப்பாற்பட்ட விஷயங்கள்!

## அத்தியாயம் 25

# நடுநிசிக் கூட்டம்

திட்டத்தின் இரண்டாவது கட்டத்தை நிறைவேற்றுவதென்பது இன்று தங்கப்பனுக்கு அத்தனை சுலபமாக இருக்கவில்லை. அவனை நிரம்பக் கவலையில் ஆழ்த்திய சில்லறைச் சோதனைகள் பல ஏற்பட்டன.

தீனதயாளுவின் வீட்டை அவன் அடைந்தபோது உஷா கச்சிதமாக அலங்காரம் செய்து கொண்டு மலருக்கு மலர் தாவும் வண்ணத்துப் பூச்சியின் சிங்காரத் தோற்றத்தை நினைவூட்டினாள். வெளியே கிளம்புவதற்குத் தயாராக வாசற்படிகளில் இறங்கப் போனவள் தங்கப்பனைக் கண்டதும்தான் சற்று நின்றாள்.

''நான் நாளை ஊர் திரும்பவிருக்கிறேன் உஷா! சொல்லிக் கொண்டு போகலாம் என்றுதான் வந்தேன். அப்பா உள்ளே இருக்கிறாரா?'' என்று கேட்டான் அவன்.

''நெம்பர் 8, டல்ஹவுஸி ஸ்டிரீட்!''— உஷா வெறுப்பை உமிழ்வது போன்ற கடுமையான குரலில் கூறினாள்.

''அங்கே போயிருக்கிறாரா?''

''ஆமாம், வேணுமானால் அங்கே போய்ப் பார்! அதாவது அவர் யாரையேனும் பார்த்துப் பேசக்கூடிய நிலையில் இருப்பாரேயானால்!''

''அப்படியென்றால்?'' என்றான் தங்கப்பன் புரிந்து கொள்ளாதவன் போல.

''ஒன்றுமில்லை, எனக்கு நேரமாகிறது; அசோகா ஹோட்டலுக்குப் போய்க்கொண்டிருக்கிறேன். போகிற வழியில் வேணுமானால் உன்னை உன் ஹோட்டலருகே 'டிராப்' பண்ணி விடுகிறேன்'' என்றாள் உஷா.

தங்கப்பன் திணறிப் போனான். 'என்ன பதில் சொல்வது? நீ போ; நான் இங்கே இருக்கிறேன் என்பதா? என்ன காரணத்துக்காகத் தான் இங்கே தாமதிக்க இயலும்? அன்று மாலை அசோகா ஹோட்டலில் அவளைச் சந்திப்பதாக நேற்றே அந்த பிரெஞ்சுக்காரன் கூறினானல்லவா? அதை அடியோடு மறந்துவிட்டுக் காலதாமதமாக வந்து சேர்ந்திருக்கிறேனே, எப்பேர்ப்பட்ட அசட்டுத்தனம்?' என்று தன்னைத் தானே நொந்து கொண்டான் தங்கப்பன். 'வெண்ணெய் திரளும் சமயமல்லவா இது? தாழியை உடைய விடலாமா?' சட்டென்று அவனுக்கு ஓர் உபாயம் தோன்றியது. ''வண்டியை எடு, உஷா! உன் அத்தையிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு வந்து விடுகிறேன்.'' விடையளித்தபடி அவள் பதிலுக்குக் காத்திராமலே வீட்டினுள் நுழைந்தான். வலப்புறம் திரும்பி, வரவேற்பு அறையின் ஜன்னல் திரைகளுக்கு மத்தியிலிருந்த ஒரு சிறு இடைவெளி வழியே கண்ணோட்டம் செலுத்திய போது உஷா வாசற்படிகளில் இறங்கி 'ஷெட்'டை நோக்கி நடப்பது தெரிந்தது. சற்றும் தாமதிக்காமல் விடுவிடு வென்று




அடுத்த அறைக்குள் சென்று மாடிப்படிகளில் ஏறிப் போனான் தங்கப்பன். தீனதயாளுவின் அறை எதிரே நின்றான். 'கதவு பூட்டப்பட்டிருந்தால்? அல்லது உள்ளே யாரேனும் இருந்தால்?'

கைப்பிடியைப் பற்றி அழுத்தினான். கதவு சுலபமாகத் திறந்து கொண்டது. உள்ளே யாரும் இருக்கவுமில்லை. மளமளவென்று வந்த காரியத்தை முடிக்க முற்பட்டவனுக்குப் 'பகீ'ரென்றிருந்தது. டிராயரை இழுத்துத் திறந்ததும் இரும்பு அலமாரியின் சாவியை அதில் காண முடியாதபோது. பரபரப்புடன் அவன் அதிலிருந்த காகிதங்களுக்கிடையில் துழாவிப் பார்த்தான். பயனில்லை!

நெற்றியில் வியர்வை முத்திட்டு நிற்க இருதயம் 'திக் திக்'கென்று பெரிதாக அடித்துக்கொள்ள அவன் டிராயரை மூடினான். அப்போதுதான் அவனுக்கு அவசரத்தில்

இரண்டாவது டிராயரை இழுத்துத் திறந்திருக்கிறோம் என்பது புரிந்தது. புறங்கையால் நெற்றிவியர்வையை வழித்துவிட்டுப் பெருமூச்சை வெளிப்படுத்தினான் தங்கப்பன். மேல் அறையைத் தன்பால் இழுத்துத் திறந்தான். சாவி நேற்று அவன் வைத்த இடத்தில் வைத்தபடி இருந்தது!

பிறகு மீண்டும் ஒரு முறை ஃபைல் கட்டுகளை மாறுட்டம் செய்கிற அவன் வேலை எளிதாக முடிந்தது. எதுவும் கலையாமல் இருக்கிறதா என்று ஒரு பார்வையில் ஆராய்ந்துவிட்டு நடந்தான். மாடிப் படிகளை அணுகி நாலைந்து படிகளில் இறங்கித் திருப்பமுனையை அடைவதற்கு முன்பாகவே அவன் கண்களில் கீழ்ப்படியில் நிற்கும் மகேசுவரி தென்பட்டுவிட்டாள். சட்டென்று தங்கப்பன் நின்று பதுங்கினான். 'இதென்ன தர்ம சங்கடம்?' மகேசுவரி தன் பருத்த சரீரத்தைத் தூக்கிக்கொண்டு ஒவ்வொரு படியாக மெல்ல ஏறினாள். 'என்ன காரணத்துக்காக மாடியேறி வந்ததாகத் தான் கூற முடியும்?' தங்கப்பன் ஒரு யோசனைக்காக மண்டையை உடைத்துக் கொண்டான். மகேசுவரியிடம் விடைபெற்றுக்கொள்வதென்றால் அவளைக் கீழேயே அவள் அறையில் அல்லவா முதலில் தேடியிருக்க வேண்டும்? தினதயாளு வீட்டில் இல்லை என்று உஷா கூறக் கேட்ட பிறகும் யாரிடமும் சொல்லாமல் ஒருவர் கண்ணிலும் படாமல் மாடிப் படி ஏறித் தான் வந்ததற்கு என்ன அர்த்தத்தைக் கற்பிப்பது?

படிக்கட்டில் கொஞ்ச தூரம் இறங்கியிருந்த தங்கப்பன் திரும்பவும் ஓசைப்படாமல் விரைவாக மேலேறி வந்தான். தினதயாளுவின் படுக்கை அறைக்கு முன்பாக ஒரு விநாடி தாமதித்தான். பிறகு வந்தது வரட்டும் என்று தீர்மானித்தவன் போலத் தலையை ஒருமுறை குலுக்கி விட்டுக் கொண்டு கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான். தன் கையிலிருந்த தோல் பையை அவரது கட்டில் மெத்தை மீது பார்வையாகத் தெரியும்படியே போட்டான். சயன அறையையடுத்து இருந்த குளியலறைக்குள் நுழைந்தான்; கதவைத் தாளிட்டுக் கொண்டான்.

இத்தனையையும் சத்தம் எழுப்பாமல் செய்துவிட்டு இப்போது வேண்டிய அளவுக்கு ஓசைப்படுத்தினான் தங்கப்பன். சுகாதாரத்துக்கான 'பிளஷ் டாங்கை' இழுத்துவிட்டு நீரைக் கொட கொடவென்று கொட்ட வைத்தான். பெரிதாகக் கனைத்தான். குழாய்களைத் திறந்து மூடினான். இதமான சூட்டில் வெந்நீரை அள்ளி முகத்தில் நட்டுவதுபோல் கழுவிக்கொண்டான். கிச்சக் கிச்சென்று ஒலி எழும்புகிற மாதிரி தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு கைக் குட்டையால் முகத்தையும் கரங்களையும் துடைத்தவாறே வெளியே வந்தான்.

அறையின் மையத்தில் நின்றுகொண்டிருந்த மகேசுவரியிடம் புன்முறுவலுடன், ''வணக்கம் அம்மா! நாளைக்கு ஊருக்குத் திரும்பறேன். உங்களிடமெல்லாம் சொல்லிக்கிட்டுக் கிளம்பணும்னுதான் வந்தேன். அண்ணன் வெளியே போயிருக்கிறார்போலிருக்கிறது. உஷா சொன்னாள். அவரிடம் நாளைக்கு நீங்க சொல்லிடுங்க!'' என்றான்.

கைக்குட்டையைக் கால்சராய்ப் பைக்குள் திணித்துக் கொண்டே அறை வாயிலை நோக்கி நடந்தான். '''பாத்ரூம் டவல்'களிலே ஒரு மூலையில் பூவேலையெல்லாம் செய்திருக்குதே உங்களுடைய கைவண்ணம் தானா அது?''

''ஏன் தம்பி? என்ன சந்தேகம் உனக்கு? பேனா பிடித்துச் செக்கிலே கையெழுத்துப் போடுகிற கை, ஊசி நூல் பிடித்துப் பூவேலைகள் செய்யுமான்னு யோசிக்கிறயா?'' என்றாள் மகேசுவரி பெருமிதம் முகத்தில் ததும்ப.

''ரொம்ப அழகாக இருந்தது பார்க்க. அம்மாவிடம் சொன்னால் அதிசயப்பட்டுப்



போவாங்க. நான் வரட்டுமா? உஷா காத்திருக்கு. போகிற வழியில் எங்கேயாவது இறக்கி விட்டு விடுகிறதாகச் சொன்னாள்.''

''தம்பி! பையை மறந்துவிட்டுப் போறியே; இந்த லட்சணத்தில் ஞாபகசக்தி இருந்தால் எப்படி முன்னேறுவே நீ?''

''பார்த்தீங்களா? என்ன அசட்டுத்தனம்?'' என்று கூறித் தங்கப்பன் பையை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

வாசலில் 'ஹாரன்' ஒலி கேட்டது. ''உஷா அவசரப்படுகிறாள். நான் வரேன்.'' ஓட்டமும் நடையுமாக வாசலுக்குச் சென்று காரில் ஏறிக்கொண்டான் தங்கப்பன்.

கைக் கடிகாரத்தை ஒரு முறை பார்த்து விட்டுக் காரை வேகமாகச் செலுத்திக் கொண்டு போனாள் உஷா.

''தாமரையைக் கேட்டதாகச் சொல்லு!'' -'ஐயோ அவள் இன்னும் வாழ்கிறாளே!' என்று அங்கலாய்த்து வேதனைப்படுவது போன்ற குரலில் மகேசுவரி கடைசியாகக் கூறியது அவன் செவிகளில் அலை அலையாக மீண்டும் மீண்டும் பொங்கி ஒலித்துக் கொண்டிருந்தது.

ஆட்சியைக் கவிழ்த்துச் சதிச் செயலால் அதிகாரத்தைக் கைப்பற்றும் ஒரு முயற்சி இத்தனை சுலபமாக நிறைவேறுவதற்கான



சாத்தியக் கூறுகள் இருப்பதை எண்ணித் தங்கப்பன் வியந்து போனான். அதே சமயத்தில் மந்திரி சபையைச் சேர்ந்த முக்கியஸ்தர்கள் தங்களுக்குள் இணங்கி இசைந்து ஒரு கூட்டாகச் சிந்தித்துச் செயல்படாமல் தங்களுக்குள் உட்பகையையும் பொறாமைப் பூசலையும் வளர்த்துக் கொண்டு தனித் தனியே தங்கள் தங்கள் போக்கில் இயங்குவதிலும் அல்லது பொறுப்புக்களைத் தட்டிக் கழிப்பதிலும் உள்ள ஆபத்துக்களையும் அவனால் உணர முடிந்தது.

இது பற்றிப் பேசிக் கொண்டே தங்கப்பனும் மிருணாளினியும் காரிலே சென்றார்கள்.

''இனைதயானு ஓரளவுக்குத் திறமைசாலியாகவும் துணிச்சல் உள்ளவராகவும் விளங்குவதே மந்திரிசபையில் மற்றவர்களுக்குப் பிடிக்கவில்லையோ என்று நினைக்கிறேன். அவர்கள் எல்லோருமே தங்களில் ஒவ்வொருவரையும் எதிர் நோக்கியுள்ள பிரச்னைகள் குறித்து அடிக்கடி கருத்துப் பரிவர்த்தனை செய்து கொண்டால் நம் காரியம் இத்தனை எளிதில் முடியக் கூடுமா?''

''அப்படியெல்லாம் அவர்கள் முறையான ஜனநாயக சம்பிரதாயங்களின்படி நடந்து கொண்டு வந்திருப்பார்களேயானால் நீங்கள் ஏன் மனம் மாறி என்னுடன் சேர்ந்து இந்தக் காரியத்தில் இறங்கியிருக்கப் போகிறீர்கள்?''

இப்படிக் கேட்ட மிருணாளினி காரைப் பழைய தில்லியின் சரித்திரப் பிரசித்திபெற்ற வீதிகளிலே ஓட்டிச் சென்று கொண்டிருந்தாள். நள்ளிரவு நேரமாதலால் ஜனநடமாட்டமே இல்லை சாலைகளில்.

காரைக் குறிப்பிட்ட ஓரிடத்தில் நிறுத்தி விட்டுக் கண்ணாடி ஜன்னல்களை உயர்த்திப் பூட்டினாள் அவள். ''ரகசியக் கூட்டத்துக்கு வருவோர் கார்களை ஒருசேர ஒரே இடத்தில் நிறுத்தக் கூடாது. சற்றுத் தொலைவில் பரவலாக ஆங்காங்கே நிறுத்திவிட்டு நடந்து வரவேண்டும் என்று ஏற்பாடு. கூட்டமாகக் கார்கள் நின்றாலே, 'இங்கு என்ன விசேஷம்? இத்தனை கார்கள் நிற்கின்றனவே' என்று யாருக்கேனும் கேட்கத் தோன்றுமல்லவா?''

''ஒவ்வொரு சிறு விஷயத்தையும் கூட முன்னெச்சரிக்கையுடன் திட்டமிட்டுத்தான் செய்கிறது உங்கள் புரட்சி முன்னணி'' என்று வியந்து பாராட்டினான் தங்கப்பன். சற்றுத் தூரம் அவர்கள் நடந்தே போனார்கள். ஒரு சந்து திரும்பிச் சென்றார்கள். ஒரு வீட்டினெதிரே நின்றாள் மிருணாளினி. வெளியேயிருந்து அந்த வீட்டைப் பார்க்கையில் வெளிச்சம் என்பதாக ஒரு சிறு கீற்றுக்கூடத் தென்படவில்லை. மிருணாளினி அவர்களுக்குள் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்த ஏதோ ஒரு சங்கேத முறையில் கதவைத் தட்டினாள். உடனடியாகக் கதவு திறந்தது. தான் கொண்டு வந்திருந்த டார்ச் லைட்டைப் பொருத்தி விட்டிருந்தனே மங்கலான வெளிச்சம் பரவச் செய்து தங்கப்பனை அழைத்துப் போனான் அவன்.

பிரகாசமான விளக்குகளுடன் கூடிய விசாலமான ஓர் உள் அறையில் புரட்சி முன்னணியின் முக்கியஸ்தர்கள் கூடியிருந்தார்கள். மிருணாளினியைக் கண்டு புன்னகை பூத்தார்கள். அவளுக்குப் பின்னால் வந்த தங்கப்பனைக் கண்டதும் ஓரளவு சந்தேகத்துடன் முகத்தைச் சுளித்தார்கள். கூரிய கடுமையான பார்வையால் அவனை ஊடுருவ முயன்றார்கள். தான் நின்ற இடத்திலிருந்தபடி அந்த அறையில் குழுமியிருந்த அனைவரையும் ஒரு முறை கண்களைச் சுழலவிட்டுப் பார்த்தான் தங்கப்பன். அவர்களில் ராணுவ உடை அணியாமல் சாதாரண ஆடைகள் அணிந்து வந்திருந்த தளபதிகள் நால்வர், அரசாங்கத்தின் உயர்தர உத்தியோகத்தில் உள்ள மூவர், ஆட்சிப் பொறுப்பில் உள்ள தலைவர்கள் இருவர் — இப்படியாகச் சிலரை அவனால் இன்னாரென்று இனம் கண்டுகொள்ள முடிந்தது. மற்றவர்களும் பெரும் புள்ளிகளாகத்தான் இருக்க வேண்டும். இவர்கள் எல்லாமா இப்படி ஒரு சதிகாரக் கும்பலாக இணைந்து நிற்கிறார்கள் !

தன் வாழ்க்கையில் கடந்த இரண்டொரு நாட்களில் ஏற்பட்டுவிட்ட பரபரப்பு மிகுந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் இப்போது இந்தப் புரட்சி முன்னணியினருடன் ஏற்படும் சந்திப்பு சிகரமாக அமையப் போகிறது என்று தங்கப்பனுக்குத் தோன்றியது. எப்பேர்ப்பட்ட பயங்கர ரகசியத்தின் மையத்தில் அவன் இந்தக் கணத்தில் நிற்கிறான்! மெய் சிலிர்ப்பு ஏற்பட்டது தங்கப்பனுக்கு. தன் வாழ்க்கையில் மட்டும்தானா, இந்தத் தேசம் முழுவதிலுமுள்ள எல்லா மக்களுடைய வாழ்க்கையையும் பாதித்துப் பெரும் பரபரப்பை உண்டாக்கப் போகிற ஒரு வரலாற்று நிகழ்ச்சி யல்லவா இது !

அவர்களில் ஓரிருவருக்குத் தங்கப்பனை அறிமுகம் செய்து வைத்தாள் மிருணாளினி. அதற்குள் கதவைத் திறந்து கொண்டு அறையினுள்ளே நுழைந்த ஒருவன், ''தலைவர் வந்து கொண்டிருக்கிறார்'' என்று அறிவித்தான்.

தங்கப்பன் அடக்க மாட்டாத ஆவலுடன் அறையின் நிலை வாசலை நோக்கினான். இத்தனை சாமர்த்தியமாக இந்த ரகசிய முன்னணியை அமைத்துச் சிறப்பாக இயக்கி வருகிறவரைக் காணவேண்டும் என்கிற ஆர்வத் துடிப்பு அவனுக்கு. இருளை விட்டு விலகி ஒளி வெள்ளம் பரவியிருக்கும் இந்த அறையினுள் அடியெடுத்து வைக்கப் போகின்ற அவர் யார்?

தங்கப்பனின் இதயத் துடிப்பே நின்றுவிட்டது சில கணங்களுக்கு; விழிகள் நிலைக் குத்தி நின்றன; மூச்சு விடவும் மறந்து போனான் அவன்.

அவனெதிரே புதிதாக வந்து நின்றவன் ஒரு சீனன்!

அறையில் பேச்சு ஓய்ந்து அவரவர்களும் கடமையே கண்ணாக மையத்தில் இருந்த ஒரு பெரிய மேஜையைச் சுற்றிலும் அமர்ந்து தலைமைப் பீடத்தில் உட்கார்ந்து கொண்ட அந்தச் சீனனின் முகத்தையே பார்த்தார்கள். அவனுடைய கட்டளைக்காகக் காத்திருப்பது போல் காணப்பட்டார்கள். தங்கப்பனும் மிருணாளினிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"தோழர்களே! நம்மிடையில் புதிதாக வந்திருக்கும் ஒருவரை நீங்கள் கவனித்திருப்பீர்கள்" இறுகப் பிடித்திருந்த கழுத்துப் பட்டையின் பித்தானைக் கழற்றித் தளர்த்தி விட்டுக் கொண்டான் தலைவன். மா-சே-துங், சூ-என்-லாய் போன்றோரது புகைப்படங்களைப் பத்திரிகைகளில் பார்த்துள்ள தங்கப்பனுக்கு இவனது உடைகளும் அதே எளிய, வசதியான பாணியில் அமைந்திருப்பது தெரிந்தது. நிறம் மட்டும் வேறுபட்டிருப்பதாய் எண்ணினான்.

"நேற்றே உங்களுக்கு நான் விவரித்த வகையில் நமக்குப் பேருதவி புரிந்திருப்பவன் தங்கப்பன்" என்றான் அந்தச் சீனன். "நம்முடைய திட்டத்தின் முதற் படி நன்கு வெற்றி பெறுமொ மாதிரியாகத் தங்கப்பன் தன் பங்குக்குக் காரியத்தைச் செவ்வனே செய்து முடித்து விட்டான். இந்நாட்டின் மகோன்னதமான எதிர்காலத்தில் பெரு நம்பிக்கை கொண்டு நேசக் கரம் நீட்டும் சீனப் பெருந் தலைவர்களின் பாராட்டுதல்களைத் தங்கப்பனுக்கு அவர்கள் சார்பில் நான் தெரிவித்துக் கொள்கிறேன். இங்கு உதயமாகப் போகும் புதிய ஆட்சி முறையின்கீழ் தங்கப்பனுக்குப் பெரும் பொறுப்புக்கள், பதவிகள் காத்திருக்கின்றன. நமது நல்வாழ்த்துக்களையும் அவனுக்குத் தெரிவித்துக் கொள்வோம்......"

கைதட்டுவதைச் சீனன் ஆரம்பித்து வைக்க அனைவருமே அவனுடன் சேர்ந்து கொண்டார்கள். மிருணாளினி சந்தோஷ மிகுதியில் தங்கப்பனின் கரங்களை இறுகப் பற்றிக் கொண்டாள்.

தங்கப்பனுக்குச் சுற்றிலும் நடப்பவை எதிலுமே எந்தக் கவனமும் இருக்கவில்லை. ஒரே ஒரு நினைவுதான் அவன் மூளையை இப்போது குடைந்து கொண்டிருந்தது. 'தன் எதிரே இருப்பவன் ஒரு சீனன்' என்ற எண்ணம்தான் அது!

தலைவன் தொடர்ந்து பேசினான்: "தங்கப்பனுக்கு நாம் நமது நன்றியைத் தெரிவிக்க வேண்டும். அதை எப்படிக் காண்பித்துக்கொள்வது? நாம் ஒவ்வொருவரும் நமது கடமையைத் தங்கப்பனைப் போலவே சிறப்பாகச் செய்து முடிப்பதுதான் அவனுக்கு நாம் செலுத்தும் நன்றிக் கடனாகும். அவன் மேற்கொண்ட ஆபத்தான முயற்சி வீணாகாமல் அதனால் நல்ல பலன் விளைந்தது என்ற திருப்தி அவனுக்கு ஏற்பட வேண்டும். நம் ஒவ்வொருவருடைய கடமையும் என்னென்ன என்பது நமக்கு நன்கு தெரியும். பல தடவைகளில் பேசி முடிவு செய்த விஷயங்கள்தான். திட்டப்படி அவற்றை நிறைவேற்றி வைப்போம்."

தலைவன் பேசி முடித்ததும் கூட்டம் கலைந்தது. ஒருவரிடம் ஒருவர் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள். தங்கப்பனும் மிருணாளினியுடன் வெளிவந்தான். அவ்வீட்டின் வாசலருகே அவர்கள் வந்ததும் மிருணாளினியிடம் யாரோ ஒருவர் வந்து ஏதோ கூற அவள், "ஒரு நிமிஷம் இங்கேயே இருங்கள், தலைவர் அழைக்கிறாராம்; கேட்டுவிட்டு, இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லித் திரும்பிப் போனாள். மீண்டும் அவள் வந்தபோது அவள் முகத்தை உற்று நோக்கினான் தங்கப்பன். அதில் அவளுடைய உள்ளத்து உணர்ச்சிகளைப் படித்துவிட முயன்றும் இருள் அதற்கு அவனை அனுமதிக்கவில்லை.

"இப்போது உங்களை எங்கே அழைத்துப் போகப் போகிறேன், தெரியுமா?" என்று கேட்டாள் மிருணாளினி.

"என் ஹோட்டலுக்குத்தானே?"

"இல்லை! என் வீட்டுக்கு! இந்நாள்வரை என் இருப்பிடத்தை நான் உங்களுக்கேகூடக் கூறவில்லை. மறைந்து வாழ வேண்டியிருக்கும் என் நிலைதான் உங்களுக்குத் தெரியுமே. ஆனால் இனி அதற்கு அவசியமில்லை."

"போவோம், மிருணாளினி. எனக்கும் உன்னிடம் அமைதியான சூழலில் சில முக்கிய விஷயங்களை இன்று இரவோடு இரவாகவே விவாதிக்க வேண்டும்" என்றான் தங்கப்பன்.

## அத்தியாயம் 26

# குண்டு பாய்ந்தது!

புதுடில்லி நகர எல்லைக்குள்ளேயே, சுற்று வட்டாரப் பகுதியில் விசாலமான தோட்டத்துடன் கூடிய மாளிகை போன்ற பெரியதொரு வீட்டின்எதிரே கார் நின்றது. பணக்காரக் குடும்பம் ஒன்றில் பிறந்த மிருணாளினிக்கு அந்த வீடு சொந்தமாக இருந்ததில் அதிசயமொன்றுமில்லைதான். ஆனால் அந்தப் பெரிய கட்டடத்தில் ஓரிரு அறைகளை மட்டுமே அவள் பயன்படுத்தி வந்தாள் என்பதும் தெரிந்தது. தோட்டம், வீடு இரண்டுமே கவனிப்பாரற்றுக் கிடந்தன. வீடு முழுவதையும் பயன்படுத்திக் கொண்டு அளவுக்கு அதிகமான வசதிகளுடன் வாழ அவளுக்குப் பிடிக்காமல் இருந்திருக்கலாம்; அவள் மேற்கொண்ட அரசியல் சித்தாந்தங்கள் அதற்கு அவளை அனுமதிக்காமல் தடுத்திருக்கலாம். அல்லது வேறு ஏதேனும் அந்தரங்கக் காரணத்துக்காக அவள் அந்த வீட்டையே வெறுத்தும் இருக்கலாம். அதைப் பராமரிக்கச் செலவு செய்வதெல்லாம் வீண் என்ற கருத்தில், தன் சொத்துக்களின் பெரும் பகுதியைப் பயன்படுத்தியது போல் அத்தொகையையும் தனது லட்சிய நோக்கங்கள் நிறைவேறுவதற்காகவே அவள் உபயோகித்தும் இருக்கலாம்.

இவற்றில் எந்தக் காரணம் சரியானது என்று தங்கப்பன் யோசித்துக் கொண்டிருக்கவில்லை. அவளையும் கேட்கவில்லை. அவன் உள்ளம் வேறுவித அவசரச் சிந்தனைகளால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

தோட்டத்தைக் கடந்து வீட்டு வாசல் முன்னால் கார் வந்து நிற்கும் வரையில்

அவர்கள் இருவருமே பேசவில்லை. ஒருவர் மனத்தை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு விடவே வருத்தத்துடன் வாளாவிருந்தார்கள். தங்களிடையே இன்று வரையில் நிலவிய நெருக்கமான நட்பு இப்போது பிளவுபட்டுவிடப் போவதை இருவரும் உணர்ந்து துக்கித்தார்கள். தர்க்கத்தினுல், வாதத் திறனினுல் ஒருவர் மற்றொருவரை வென்றுவிட முடியும் என்ற நம்பிக்கை இருவருக்குமே இருக்கவில்லை. எனினும், முயன்று பார்க்காமலும் இருக்க அவர்களால் முடியாது. ஆகவே, தங்களுக்கிடையில் விவாதம் ஆரம்பமாகப் போகிற அந்த விநாடியைக் கூடுமானவரையில் ஒத்திப் போடவே இருவரும் ஆசைப்பட்டார்கள்.

வீட்டினுள்ளே அடியெடுத்து வைக்கும் போது விடியும் சமயம் நெருங்கிவிட்டதை உணர்ந்தான் தங்கப்பன். மணி நாலு நாற்பத்தைந்து. இந்நேரம் தினதயாளு தமது அன்றைய அலுவல்களில் தீவிரமாக இறங்கியிருப்பார். ஆட்சியைக் கவிழ்க்க முயலும் கம்யூனிஸச் சார்புள்ள ராணுவத் தளபதிகள் பலரைக் கைதாக்கத் திட்டங்களை வகுத்து அவற்றை நிறைவேற்ற வேண்டியவர்கள் யார் யார் என்றும் உத்தரவுகள் எழுதிக் கொண்டிருப்பார். இனியும் காலதாமதம் செய்ய நினைக்க மாட்டார். உத்தரவுகள் பிறப்பித்த பிறகு விநாடிப் போதுகூட விணுக்காது அவை நிறைவேற்றப்படுகின்றனவா என்று கண்காணித்து வருவார். அநாவசியமாக நேரம் கடத்தினுல் வதந்திகள் பரவ ஏதுவாகும். பட்டியலில் இடம் பெற்றவர்கள் விஷயமறிந்து தப்பித் தலைமறைவாகச் சென்றுவிட வசதி செய்து கொடுத்ததாகிவிடும்! — இப்படியாகத்தான் தினதயாளுவின் சிந்தனை செயல்படும்.

தங்கப்பன் தானும் வேகமாக இயங்க வேண்டியிருப்பதன் அவசியத்தை நன்கு உணர்ந்தான்.

''மிருணளினி! உனக்கு நான் மிகுந்த ஏமாற்றத்தை அளிக்கப் போகிறேன். உங்களுடைய தலைவன் ஒரு சீனன் என்பதைக் கண்டதிலிருந்து என் மனம் அடியோடு மாறிப்போய் விட்டது. பேராபத்தான ஒரு காரியத்தில் நாம் இறங்க விருந்தோம் என்பது எனக்குத் தெரியும். அதற்கு நான் அஞ்சவில்லை. ஆனல் நான் ஈடுபட்டிருந்தது தேசத் துரோகமான காரியம் என்பதை இப்போது நான் புரிந்து கொண்டிருக்கிறேன்.''

''உட்காருங்கள்'' என்று உபசரித்தாள் மிருணளினி. தானும் அவன் எதிரே ஒரு சோபாவில் அமர்ந்தாள்.

தங்கப்பன் தினதயாளுவின் வீட்டிலிருந்து கடத்திக் கொண்டு வந்திருந்த ஃபைல் கட்டும் அலங்காரமான ஒரு பிளாஸ்டிக் கைப் பையும் அவனிடம் இருந்தன. ஃபைல் கட்டை அவன் அருகிலிருந்த மேஜைமீது வைத்தான். அதையும் அறையின் ஒரு பக்கத்திலிருந்த டெலிபோனையும் கவனித்து வைத்துக் கொண்டான் தங்கப்பன். மடி மீது கிடந்த அலங்காரப் பையைத் திறந்து ஒரு கைக்குட்டையை எடுத்தாள் மிருணளினி. அதனுல் முகத்தை ஒற்றிக் கொண்டாள். திரும்பவும் அதைப் பையின் ஒரு மூலையில் திணித்தாள். ஆயினும் பையை அவள் மூடவில்லை.

''அந்தச் சீனனை நீங்கள் பொருட்படுத்தக் கூடாது'' என்றுள் மிருணளினி. ''அவர் வெறுமனே நமக்கு யோசனைகள் கூறவும் உற்சாகப்படுத்தவும்தான் இருக்கிறுர். வேறு நோக்கம் எதுவும் கிடையாது அவருக்கு. நான்தான் உங்களுக்கு முன்னமேயே சொல்லி யிருக்கிறேனே. சீனத் தலைவர்கள் புதுதில்லிக்கு வந்து இந்த நாட்டை ஆள நினைக்கவில்லை. இங்கே கம்யூனிஸ ஆட்சி உருவாக வேண்டும் என்பதொன்றுதான் அவர்கள் லட்சியம்.''

''அப்படி எண்ணி உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு வந்திருக்கிறுய், மிருணளினி. ஆனல் இன்று உங்கள் தலைவனைப் பார்த்த மறுகணம் எனக்குச் சிந்தனைத் தெளிவு உண்டாகி விட்டது. சீனத் தலைவர்கள் புதுதில்லிக்கு வரவே வேண்டாம். பீகிங்கிலிருந்தபடியே டில்லியில் அதிகாரத்தில் உள்ளோரை ஆட்டி வைப்பார்கள்! இவர்களும் பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள் சொல்கிறபடியெல்லாம் ஆடுவார்கள். மிருணளினி! நான் பெரிய தவறு செய்யவிருந்தேன்; ஆனல் தக்க சமயத்தில் விழித்துக் கொண்டு விட்டேன். இன்னும்

## இரும்புத் திரைக்குப் பின்னுல்!




ஜோஜோடோஸ் ஹங்கேரிய கம்யூனிஸ்டுகளின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி வெளி தேசங்களில் சாமான் வாங்க அனுப்பப்பட்டான்.

சில நாட்களில் புகாரஸ்டிலிருந்து தந்தி ஒன்று வந்தது. 'சாமான்கள் வாங்கியாகிவிட்டன. வாழ்க ருமேனியா.'

இன்னும் சில நாட்களில் ஸோபியாவிலிருந்து மற்றொரு தந்தி வந்தது. 'சாமான்களுக்கு ஏற்பாடு செய்து விட்டேன். வாழ்க பல்கேரியா.'

பெல்கிரேடிலிருந்து ஒரு தந்தி: 'சாமான் வாங்கி விட்டேன். வாழ்க யூகோஸ்லாவியா.'

சில வாரங்கள் வரை அவனிடமிருந்து தகவலே வரவில்லை. கடைசியில் ஒரு தந்தி வந்தது. 'நியூயார்க்கில் இருக்கிறேன். எனக்குச் சுதந்திரம் அளித்த நீங்கள் வாழ்க!'

- ராஜப்பா

## சூடான பதில்......



அமெரிக்க ராணுவ அதிகாரி ஒருவரைப் பத்திரிகை நிருபர் ஒருவர் பேட்டி கண்டார்.

''ஸ்விட்ஜர்லாந்தை அழிக்க வேண்டுமானால் எத்தனை அணுகுண்டுகளைப் போட வேண்டியிருக்கும்?'' என்று கேட்டார் நிருபர்.

''அதெப்படி கணக்காகச் சொல்ல முடியும்?...ஸ்விட்ஜர்லாந்து என்னவோ சின்னஞ் சிறு நாடுதான்... நான்கு அல்லது ஐந்து குண்டுகள் போட்டால் போதுமென்று நினைக்கிறேன்...ஆனால் குறிப்பாக 'இவ்வளவு போட்டால் போதும்' என்று சொல்வது கஷ்டம்.'' என்று பதிலளித்தார் அந்த அதிகாரி.

''பிரான்ஸ்?''

''ஓ! அது கொஞ்சம் பெரிய தேசமாயிற்றே! ஐம்பது குண்டுகள் தேவைப்படலாம்; இல்லை, நூறு குண்டுகள் போட வேண்டியிருக்கும். எதையும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.''

''ரஷ்யாவை நாசமாக்க வேண்டுமானால்?''

''கணக்காக ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து மூன்று குண்டுகள்தான் தேவை!'' என்று அவரிடமிருந்து பளிரெனப் பதில் வந்தது!

எஸ். வி.

காலம் கடந்து விடவில்லை. நம்முடைய தாய் நாடு இல்லையா இது? இதை அந்நியருக்கு அடிமைப்படுத்தும் இழி செயலில் நாம் இறங்கலாமா? என்னுடன் நீங்களும் ஒத்துழையுங்கள். இந்தச் சதிகாரக் கும்பலை வளைத்துப் பிடிக்க உதவுங்கள்.''

மிருணாளினி கேலியாகச் சிரித்தாள். ''உங்களை நீங்கள் தங்கியிருக்கும் ஹோட்டலிலேயே இறக்கி விட்டிருந்தால் என் தலை மறைந்ததும் நேராகத் தீனதயாளுவிடம் ஓடிப் போய்க் காலில் விழுந்து கண்ணீர் வடித்து, 'நான் பண்ணியதெல்லாம் தப்பு. மன்னித்துவிடுங்கள்' என்று பச்சைக் குழந்தை போலத் தேம்பி அழுதிருப்பீர்கள் இல்லையா?''

''அழுதிருக்க மாட்டேன், மிருணாளினி! நான் இந்தக் காரியத்தில் ஈடுபட்டது, இங்கே நேர்மைக்கும் உழைப்புக்கும் முதலிடம் தருகிற நல்லாட்சி உருவாக வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காகத்தான். அதற்காக நான் மன்னிப்புக் கோரவோ, வருத்தப்படவோ வேண்டியதில்லை. ஆனால் இதை அடைய நான் மேற்கொண்ட வழிமுறைகளில்தான் தவறு நேர்ந்து விட்டது. தவறை ஒப்புக் கொள்ளவும் திருத்திக் கொள்ளவும் தைரியம் வேண்டியதுதான். அதற்கும் துணிந்தவன்தான் நான். இது வரை நீங்கள் போட்ட திட்டங்களெல்லாம் கச்சிதமாக நிறைவேறி வந்து விட்டன. ஆனால் என் ஒருவன் விஷயத்தில் உங்களுக்கு ஏமாற்றம்தான் நேரப் போகிறது. என் மனமாற்றத்தை நீங்கள் எதிர்பார்த்தே இருக்க மாட்டீர்கள், பாவம்!'' அந்த இக்கட்டான நிலையிலும் தங்கப்பன் அவளுக்காக அனுதாபப்பட்டான்.

''இல்லை, அங்கேயும் வெற்றி எங்களுக்குத்தான்'' என்றாள் மிருணாளினி. ''தீனதயாளுவை நீங்கள் போய்ப் பார்த்து அசட்டுத்தனமாக எதையாவது உளறி விடாமல் இருக்க வேண்டுமே என்றுதான் நான் இங்கே உங்களை அழைத்துக் கொண்டு வந்தேன். தலைவர் சொன்னது சரியாகி விட்டது. உங்களைப் பார்த்தாலே ஏதோ சந்தேகமாக இருக்கிறதென்றும் உங்களை நன்றாக நான் கண்காணிக்க வேண்டும் என்றும் கூட்டம் முடிந்ததும் என்னை மட்டும் தனியே அழைத்துச் சொன்னார் அவர்.''

பேசியபடியே மிருணாளினி தன் வலக் கரத்தைத் தன் மடியில் திறந்து கிடந்த அலங்காரப் பைக்குள் நுழைத்தாள்.

''இன்று காலையே தீனதயாளுவின் உயிர் பறிக்கப்படும்; அதன் பிறகு வெகு சீக்கிரமே பாரத நாட்டில் ராணுவ ஆட்சியும் உருவாகி விடும்.''

''இப்போதே தீனதயாளுவுக்கு டெலிபோன் செய்து அவரை எச்சரித்து விடுகிறேன். தற்காப்புக்கும் நாட்டின் பாதுகாப்புக்கும் அவர் தகுந்த நடவடிக்கைகளையெல்லாம் எடுத்துக் கொள்வார்'' என்று பாய்ந்தான் தங்கப்பன், டெலிபோன் இருந்த திசையை நோக்கி.

மிருணாளினியும் 'சரே'லென்று எழுந்து அவனைத் தடுப்பது போல் வந்து நின்றாள். இடைமறித்த அவளை இழுத்துத் தள்ளினான் தங்கப்பன். விழுந்து புரண்ட அவள் எழுந்து நின்றாள் விறுவிறுப் போதில். அவள் வலக் கரத்தில் இப்போது ஒரு துப்பாக்கி இருந்தது. பிளாஸ்டிக் அலங்காரப் பைக்குள் நுழைந்த கரம் அதிலிருந்து அதைத்தான் வெளியே எடுத்திருக்க வேண்டும். தரையில் திறந்தபடி விழுந்து கிடந்த பையிலிருந்து பவுடர் டப்பா, கண்ணாடி, சீப்பு போன்ற அழகுச் சாதனங்கள் வெளியே சிதறி யிருந்தன. ''தங்கப்பன்!'' என்றாள் மிருணாளினி, அதட்டுகிற குரலில். துப்பாக்கி அவன் நெஞ்சைக் குறி பார்த்தது. அவன் கரம் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது.

தங்கப்பன் தன் உயிருக்காகப் பயப்பட வில்லை. ஆனால் இந்த விநாடியில் தன் உயிர் தன் தாய்நாட்டுக்கு மிக அத்தியாவசிய மாகத் தேவைப்படுவதையும் அவன் மறக்க வில்லை. சர்வ ஜாக்கிரதையாகக் காப்பாற்றப் பட வேண்டியதுதான் தன் உயிர் இந்தத் தருணத்தில்.

மெல்ல டெலிபோன் இருந்த பக்கத்தி லிருந்து நழுவி இப்பால் வந்தான். ''மிருணாளினி!'' என்று அன்புடன் அழைத்து நயமாக அவளிடம் பேச்சுக் கொடுத்தான். ''நாட்டின் எதிர்காலம் பற்றிய உன் னுடைய வர்ணனைகளைக் கேட்டு மயங்கிய வன்தான் நான். நம் இருவரது லட்சியங் களும் ஒன்றேதான்; உயர்ந்தவைதான்; ஆனால் வன்முறைச் செயல்களை விட்டு ஜன நாயகத்தைக் காத்து நியாயமான விதங் களில் அவற்றுக்காகப் பாடுபடுவோம்.''

''நீங்கள் சொல்கிற வழிகளெல்லாம் ஏட்டுச் சுரைக்காய்தான் என்ற முடிவுக்கு நான் வந்து நீண்ட நாட்களாகி விட்டன. பல வருஷங்களாக நான் பாடுபட்டு வந்த தற்கெல்லாம் இப்போதுதான் பலன் காணப் போகிறேன். என் லட்சியக் கனவுகள் நிறை வேறப் போகிற இந்தச் சமயத்தில், இந்தக் கடைசி நேரத்தில் அதற்கு இடையூறாக வந்து சேருகிற யாரையும் அல்லது எதை யும் நான் அழிக்கத் தயங்க மாட்டேன்!'' உணர்ச்சிவசப்பட்டதால் மிருணாளினிக்குத் தொண்டையை அடைத்தது. ''தடையாக நிற்பது நீங்கள் என்றால் உங்களை மாய்ப் பேனே தவிர என் லட்சியம் சிதைந்து போக அனுமதிக்க மாட்டேன். என்னை நம்பி எத்தனையோ பேர்கள் இந்தக் காரியத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களைக் காட்டிக் கொடுக்க மாட்டேன்.'' மனத்தைக் கல்லாக் கிக் கொண்டு அவள் இப்படிப் பேசியபோதி லும் தன் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகுவதை அவளால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

'''சிநேகத் துரோகமா? தேசத் துரோ கமா?' என்பதுதான் நம் இருவர் முன்னேயும் இப்போது நிற்கும் பிரச்னை, மிருணாளினி! நீ தயவுசெய்து இன்னும் சற்று யோசிக்க வேண்டும். பலாத்காரத்தின் அடிப்படையில் உருவாகிற ஆட்சியில், பல தலைவர்களைக் கொன்றும் மக்களை மிரட்டிப் பணிய வைத்தும் ஏற்படுகிற அரசாங்கத்தில் நீதி எப்படி நிலைக்கும்? மக்களை ஆள்வது சட்ட மும் நீதியுமாயிராது; பயத்தினால்தான் அவர்கள் ஆளப்படுவார்கள். ஒழுக்கத் துடன் அவர்கள் வாழ்ந்தாலும் அது பீதி காரணமாயிருக்குமே யொழிய, மனச்சாட்சி யின் உந்துதலினால் இருக்காது. இத்தகைய ஒரு சமூகத்தை உருவாக்கவா நான் உதவு வேன் என்று நினைக்கிறாய்? அதைவிட என்னை நீ சுட்டுக் கொன்று விடுவதையே நான் வரவேற்பேன்!''

''இன்னும் சில மணி நேரத்துக்கு உங்களை இந்தத் துப்பாக்கி முனையில் நான் பாது காவலில் வைத்திருந்து விட்டால் போதும். அப்புறம் உங்களைச் சுட வேண்டிய அவ சியமே இருக்காது. ஆனால் டெலிபோன் பக்கமோ வாசல் பக்கமோ நீங்கள் நகர்ந் தால் இதைப் பயன்படுத்தவும் நான் தயங்க மாட்டேன்! இந்த வீட்டில் நம்மிருவரையும் தவிர வேறு யாரும் கிடையாது. துப்பாக்கி வெடிக்கும் ஓசைகூட இரண்டு ஏக்கர் பரப் பளவுள்ள இந்தத் தோட்டத்தையெல்லாம் தாண்டி அப்பால் சென்று ஒருவர் காதிலும் விழப் போவதில்லை!'' மிருணாளினி விம்மி அழுதபடியே சேலைத் தலைப்பால் தன் கன் னங்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். ''உங்களால் எனக்கு ஆக வேண்டிய காரியம் முடிந்து விட்டது. இனிமேல் நீங்கள் உயிருடன் இருந்துதான் எங்களுக்கு என்ன பயன்?''

''உலகுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இங்கே ஓர் உன்னதமான அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்ற கருத்தில் அதற்கு ஆரம்பக் கட்டமாகச் சர்வாதிகாரத்தை ஏற்றுக் கொள்ளவும் நான் தயாராக இருந்தேன், மிருணாளினி! ஆனால் அதுவும் தவறு என்று இப்போது எனக்குப் புரிகிறது. நல்ல லட்சியங்களை அடைய நாம் செல்லும் மார்க் கங்களும் சரியானவையாக இருக்க வேண் டும். மோசமான வழிகளைக் கையாண்டால் அவை நம்மைப் பயங்கரப் படுகுழியில் தள்ளி விடும். இப்போதைக்கு மக்களைத் திருப்திப்படுத்த, 'சீக்கிரமே தேர்தல் நடக் கும்' என்று ஆட்சியைக் கைப்பற்றுபவர்கள் கூறுவார்கள். ஆனால் அதிகார வெறி அவர் களையும் ஆட்கொள்ள அதிக நேரம் பிடிக் காது. அப்புறம் தேர்தல் என்ற பேச் சையே யாரும் எடுக்க முடியாது. அப் படியே ஒன்று நடந்தாலும் அது எகிப்தில் நடப்பது போல் ஒரே நபர் ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகராக நிற்கும் தேர்தலா யிருக்கும். தொண்ணூற்றொன்பது சதவீதம் வோட்டுக்கள் பெற்று அவர் தேர்ந்தெடுக் கப்படும் கேலிக்கூத்தாகத்தான் அமையும்!''

''அனாவசியமாக எதைஎதையோ சொல்லி அலட்டிக் கொள்ளாதீர்கள்! உண்மையில் உங்களுக்கு எங்களுடைய சதித் திட்டம் வெற்றி பெறுமோ பெறாதோ என்ற பயம்! நாங்கள் தோல்வியுற்றால் எங்களுடன் நீங்களும் தூக்குமேடை ஏற வேண்டியிருக் குமே? ஆனாலும் இப்படிப்பட்ட கோழை யாக நீங்கள் இருக்க வேண்டாம்!''



அடுத்த இதழில்

கருணைக்கு எங்கும் வழி உண்டு

நவீன ஓவியங்கள்

-திரு மணியம் பேட்டி

மிருணாளினி ரொம்பவும் சிரமப்பட்டுத்தான் கொஞ்சம்கூட நம்பாத இவ்வார்த்தைகளைக் கூறி வருகிறாள் என்று தங்கப்பன் எளிதில் ஊகித்தான். அவளுடைய தோற்றம், குரல் எல்லாம் அவளைக் காட்டிக் கொடுத்தன.

''பாரதத்தின் வடக்கும் தெற்கும் நாளைக்கு மோதிக் கொள்வதை நினைத்துப் பார், மிருணாளினி! மராட்டியரும் கன்னடியரும் தங்களுக்குள் கொரில்லா யுத்தத்தில் ஈடுபடுவார்கள். தமிழரும் ஆந்திரரும் நாளை ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொள்ளுமாறு ஏவிவிடப்படுவார்கள்! வியட்நாம் கதைதான் இங்கும் நடக்கும். இந்த அவல நிலையைத்தானா நீ காண ஆசைப்படுகிறாய்...?''

''பேசுங்கள்! பேசுங்கள்! என் மனத்தை மட்டும் உங்களால் அசைக்க முடியாது!''

''நான் பேசியது உனக்காக மட்டுமில்லை, மிருணாளினி! நான் செய்யவிருந்த பாபத்தை எனக்கு நானே நன்கு உணர்த்திக் கொள்ளவும்தான்.''

''ஒரு சிறு திருத்தம். 'செய்துவிட்ட' என்று சொல்லுங்கள்!''

தங்கப்பன் துடியாய்த் துடித்தான். ஆனால் என்ன செய்வதென்று அவனுக்குப் புரியவில்லை. துப்பாக்கி முனை சதா அவனைக் குறி பார்த்துக் கொண்டேதான் இருந்தது. ''விடிந்து வெகுநேரமாகி விட்டதே, முகம் கழுவிக் கொண்டு வருகிறேன்'' என்று கூறிப் பக்கத்திலிருந்த குளியலறைக்குள் போனவனை அவள் தடுக்கவில்லை. அங்கிருந்தபடி தப்பவும் வழியில்லை என்று கண்டான் அவன். ஒரே ஒரு சிறிய ஜன்னல் எட்டடி உயரத்தில் இருந்தது. தலைகூட நுழையாது அதற்குள்!.....

நேரம் சென்று கொண்டேயிருந்தது: பொங்கும் கடல், வெடிக்கும் எரிமலை, பூகம்பம், சூறாவளி போன்ற பயங்கரமான இயற்கை உற்பாதங்களைவிட மோசமான ஒரு பேராபத்து தன் தாய்நாட்டினை, அதில் வாழும் கோடிக்கணக்கானோரை அணுகி வந்து கொண்டிருப்பதை உணர்ந்தான் தங்கப்பன். தான் தாமதிக்கிற ஒவ்வொரு விநாடியும் அந்த அபாயம் மேலும் கிட்டத்தில் நெருங்க இடமளித்ததாகவே ஆகும். ஆயினும் அவனால் என்ன செய்ய முடியும்? அவர்கள் ஒருவரையொருவர் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டார்கள். இருவரும் மற்றொருவரை, 'தயவுசெய்து விட்டுக் கொடுக்க மாட்டீர்களா?' என்று கெஞ்சிக் கேட்பது போல் உற்று நோக்கினார்கள்.

இந்த நிச்சயமற்ற தன்மையை இனி மேலும் தாங்க முடியாது என்று கண்டான் தங்கப்பன். ஒரு பெருமூச்சுடன் எழுந்தான். ''அங்கே பல தேசத் தலைவர்கள் கொலை செய்யப்படவிருப்பதை அறிந்தும் பேசாமல் இங்கே உங்கள் கரத்தில் இருக்கும் துப்பாக்கியைப் பார்த்தபடி உட்கார்ந்துகொண்டிருக்க என்னால் முடியாது. அதைக் காட்டிலும் அவர்களைக் காப்பாற்றும் முயற்சியில் சாவதே மேல்'' என்றான்.

ஒருவிதத் தீர்மானத்துடன் நிதானமாக மிருணாளினியை நோக்கி அடி மேல் அடி எடுத்து வைத்து நடந்தான். ''துப்பாக்கியை உங்கள் கரத்திலிருந்து விடுவிக்கத்தான் நான் முயலப் போகிறேன்!''

''நில்லுங்கள்!'' என்று கத்தினாள் அவள்.

''என்னைக் கொன்றுவிடுங்கள், மிருணாளினி! புதிதாக அமையவிருக்கும் சர்க்காரில் உங்கள் மீது யார் கொலைக் குற்றம் சுமத்தப் போகிறார்கள்? பலியாகப் போகும் எத்தனையோ உயிர்களில் இதுவும் ஒன்றாக இருந்து விட்டுப் போகட்டும்.'' தங்கப்பன் தன் நெஞ்சைத் தட்டிக் காண்பித்துக் கொண்டே முன்னேறினான். ''நெருங்கிய தோழன் ஒருவனைக் கொன்ற நினைவுடன் சுகமாக வாழுங்கள்!''

மிருணாளினியின் விரல்கள் துப்பாக்கியின் மீது இறுகின. கரத்தில் ஓடிய ரத்த நாளங்கள் விம்மிப் புடைத்துத் தெளிவாகத் தெரிந்தன. அவள் கண்கள் அகல விரிந்தன. விழிகள் பீதியுடன் அவனை நோக்கின. உடலே நடுங்கியது. அவன் அவளை மேலும் கொஞ்சம் அணுகினான்.

''உங்களைக் கொல்ல வேண்டிய துர்ப்பாக்கியத்தை எனக்கு ஏற்படுத்திவிடாதீர்கள்! உங்களைச் சுட நான் விரும்பவில்லை. நான் சொல்வது புரியவில்லையா உங்களுக்கு? தயவு காட்டுங்கள்! அந்தக் காரியத்தை நான் செய்யத் தூண்டுதலாயிருக்காதீர்கள்! ஐயோ, வேண்டாம்!''

அவள் புலம்புவதைப் பொருட்படுத்தாமல் ஓரளவு அவளுக்குக் கிட்டத்தில் வந்துவிட்ட தங்கப்பன், ஒரே பாய்ச்சலாகத் தாவினான். அவனது இடக் கரம் அவள் மேனியை முன்புறத்திலிருந்து சுற்றி வளைத்துத் தன்பால் இழுக்க, வலக்கரம் துப்பாக்கி பிடித்திருந்த அவள் விரல்களைப் பற்றப் போயிற்று. அந்த ஸ்பரிசத்தில் ஒரு கணம் அவள் மெய் சிலிர்த்ததை அவன் உணர்ந்தான். அடுத்த விநாடி அவள் ஆள்காட்டிவிரல் துப்பாக்கி விசையில் அழுந்தியது. 'டுமீல்' என்ற பேரோசையுடன் குண்டு பாய்ந்தது!

மிருணாளினி அவன் மீது சாய்ந்தாள். அவள் மார்பிலிருந்து உஷ்ணமான ரத்தம் 'குபு குபு'வென்று பொங்கி அவன் நெஞ்சை நனைத்தது. அவள் சிரம் அவன் தோள் மீது துவண்டது.

''மிருணாளினி! ஏன்? ஏன்?'' ஒன்றும் புரியாமல் பதறினான் தங்கப்பன்.

''செல்லத்தைக் கேளுங்கள்; அவளுக்குத் தெரியும்!'' என்று அவன் காதருகே ரகசியம் பேசினாள் மிருணாளினி. அவள் தலை தொய்ந்தது. அவள் மேனி கனப்பதை உணர்ந்தான் தங்கப்பன்.

(தொடரும்)

# சிரஞ்சீவிக் கதைகள்...

## 10. பக்த துருவன்



பல ஆண்டுகளுக்குப் பின், அரசன் உத்தானபாதன் தன் மைந்தன் துருவனைச் சந்திக்கிறான். துருவன் தாய் சுநீதியுடன் வசித்து வந்தான். இளைய மனைவி சுருசியை மகிழ்விப்பதற்காக உத்தானபாதன் அவர்களை நாடு கடத்தி இருந்தான்.



இப்பொழுது ஏழு வயது மைந்தன் துருவனைக் கண்டு அரசன் ஆனந்தமடைந்தான். அதைப் பார்த்த சுருசிக்கு ஆத்திரம் வருகிறது. துருவனை அரண்மனையை விட்டு வெளியேற்றுகிறாள்.



துருவன் மீண்டும் கானகம் அடைகிறான். மண்ணுலக அரசனைவிட சக்திவாய்ந்த நாராயணனைப்பற்றி சுநீதி துருவனுக்குக் கூறுகிறாள். இரவில் துருவன் தன் தாயைக் காக்கும்படி ஆண்டவனைத் துதித்துவிட்டு நாராயணனைத் தேடிப் போகிறான்.



அடர்ந்த கானகத்தில் சப்தரிஷிகளைத் துருவன் சந்திக்கிறான். நாராயணன் இருக்கும் இடம் வெகுதூரம், வழி அபாயம் நிறைந்தது என்று அவர்கள் துருவனை எச்சரிக்கிறார்கள். மனம் தளராமல் துருவன் முன்னேறுகிறான்.



எதிரே ஒரு புலி வருகிறது. ''நீதான் நாராயணனா?'' என்கிறான் துருவன். புலி ஓடி விடுகிறது. துருவன் ஒரு கரடியைப் பார்க்கிறான். அதே கேள்வியைக் கேட்கிறான். கரடியும் ஓடி விடுகிறது.



கடைசியாக, மகரிஷி நாரதர், ''நீ நிற்கும் இடமே நாராயணன் இருக்கும் இடம்,'' எனத் துருவனுக்கு உபதேசிக்கிறார். துருவன் தவம் செய்கிறான். நாராயணன் தோன்றி, அவன் துருவ நட்சத்திரமாக மாறி மங்காது பிரகாசிக்க வரம் அருள்கிறார்.



# அன்றும் இன்றும்

சுரசன்

சில நாட்களாக எதிர்பார்த்த நெருக்கடி நிலை நெருங்கி விட்டதை உணர்ந்தவனாக, பகபதியை ஏக்கத்துடன் நோக்கினேன்.

''ஆமாம், இப்போது என்ன செய்யத் தீர்மானித்திருக்கிறாய் பகபதி, சொல்லிவிடு!'' என்று கேட்டேன் அவனை.

பகபதி ஒன்றும் பதில் பேசவில்லை. அவனது பார்வை மூலையிலே சாத்தப்பட்டிருக்கும் தம்புராவிலே லயித்திருந்தது.

இன்னும் ஒரு மணி நேரத்தில் கச்சேரி மேடையிலே அமர்ந்தாக வேண்டியவன் பகபதி. கச்சேரிக்குப் புறப்படத் தன்னை ஆயத்தம் செய்து கொள்ள வேண்டியவன், இம்மாதிரி சத்தியாக்கிரகம் செய்பவனைப் போல அலங்கோலப்படுத்தி விருந்தால்?

வெறி கொண்டவனைப் போலக் கத்தினான் பகபதி. ''என்னைத் தொந்தரவு செய்யாதே, சீனு! இன்று கச்சேரி நடக்கப் போவதில்லை...!''

''என்ன ? என்ன?''

''ஆம். நான் வரப் போவதில்லை. நீ போய் அவர்களிடம் தெரிவித்துவிடு!''

''பகபதி! இந்தத் தடவை மட்டும்தான்... இனி........'' பார்த்தசாரதி பகபதியின் கையைப் பற்றினான்.

''ஆமாம். ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் கூறி வந்திருக்கிறீர்கள். ஐயோ ! நினைத்தாலே எரிச்சலும் ஆத்திரமும் வருகிறது. மேடையிலே அமர வேண்டியது தான் தாமதம்! எனக்குச் சுதந்திரம் ஏது ? நான் நினைத்தபடி எனக்கு ஆத்ம திருப்தியை அளிக்கும் வண்ணம் பாட எங்கே என்னை விடுகிறார்கள் ரசிகர்கள்? 'அதைப் பாடு, இதைப் பாடு!' என்று கூப்பாடு போடுவதும் சீட்டு அனுப்புவதும்தானே வழக்கமாய்ப் போய் விட்டன ! இந்தக் கன்றாவிப் பாட்டுக்களைப் பாடவா நான் முறைப்படி எட்டு ஆண்டுகள் சங்கீதம் பயின்றேன்? நான் நினைத்தது ஒன்று, நடப்பது ஒன்று! சே! என்ன உலகம் ஐயா!'' அலுப்புடன் கூறினான் பகபதி.

நானும் பார்த்தசாரதியும் மௌனமாக இருந்தோம். சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த விஷயம். பகபதி ஒரு தொழில் அதிபர் வீட்டுக் கல்யாணத்தில் கச்சேரி செய்தான். அவனுடைய இனிமையுடன் கூடிய கன சாரீரத்தைக் கேட்ட ஒரு சினிமா டைரக்டர் அவன் மீது ஒரு கண் வைத்தார்.

மனிதனுக்கு யோகம் எப்படி யெல்லாம் வரும் என்று யார் முன்கூட்டிக் கூற முடியும் ? பகபதி சினிமாவில் பின்னணி இசை பாடிய முதல் படம் பிரமாதமான வெற்றியை அளித்தது. மளமள வென்று ஒப்பந்தங்கள் வந்து குவிந்தவண்ணம் இருந்தன. புகழுக்கும் பணத்துக்கும் பெருமைக்கும் அடிமையாகாதவனும் இருக்க முடியுமா ? ஒரு பாட்டுக்கு ஆயிரம் ரூபாய் வரையில் வாங்கினான் பகபதி.

ஒற்றை நாடியாய்க் காட்சி தந்த பகபதி, புகழும் பணமும் ஈட்டிய ஆறே மாதங்களில் உருவமே தெரியாவண்ணம் பருத்து விட்டான். கச்சேரிகளில் பகபதி மக்கள் விரும்பிய தான் பாடிப் புகழ் எய்திய—சினிமாப் பாடல்களையே பாடினான். மக்கள் தரும் கரகோஷம் அவனுடைய உள்ளத்திலே இன்ப போதையை உண்டாக்கிற்று.

முன்பெல்லாம் கர்நாடக சங்கீதத்தில் ஏற்பட்டிருந்த ஈடுபாடும் மோகமும் வர வரக் குன்றி வருவதை உணர்ந்தான் அவன். பணமும் புகழும் பாமர மக்கள் தந்த அபரிமிதமான உற்சாகமும், பகபதியின் பழைய போக்கையும் விருப்பத்தையும் வெகுவாய் மாற்றி விட்டன என்பது மிகையில்லை.

சில கச்சேரிகளில் அவன் ஏதாவது கர்நாடக இசை பாடினால்கூட, ரசிகர்கள் முகத்தைச் சுளிப்பதைக் கண்டிருக்கிறான். ஒரு சமயம் ஒரு கச்சேரியில் முன் வரிசையில் ஒரு பிரபல சங்கீத வித்துவான் அமர்ந்திருப்பது கண்டு, அவருக்காக ஒரு தீட்சிதர் உருப்படியைப் பாடினான். உடனே கூட்டத்திலிருந்து, ''நிறுத்து!'' ''சினிமாப் பாட்டு வேண்டும்'', ''இது சங்கீத சபை அல்ல'' என்ற குரல்கள் எழுந்தன. முடிவு? தீட்சிதர் உருப்படி அரைகுறையாய் நிறுத்தப்பட்டு, ரசிகர்கள் விரும்பிய சினிமாப் பாடல்கள் தொடங்கின. மக்களின் கைத்தட்டலுடன் கூடிய ஆரவாரம் வானை முட்டியது. சங்கீத வித்துவான் முகத்தைச் சுளித்துக் கொண்டு எழுந்து போய் விட்டார். ரசிகர்கள் தந்த கரகோஷத்தினால் மெய்ம்மறந்து போன பகபதி, அதைப் பொருட்படுத்தவில்லை!

சினிமா உலகிலே பகபதி நுழைவதற்கு முன்பு, அவனுக்குச் சங்கீத சபைகளிலேயிருந்து ஏராளமான அழைப்பும் ஆதரவும் கிடைத்துவிட வில்லைதான். ஆனால் அவனுடைய கர்நாடக சுத்தமான சங்கீதம், அதன் நயமும் பெருமையும் உணர்ந்த ஒரு ரசிக வட்டாரத்தில் பெரிதும் பாராட்டப்பட்டது. பாராட்டு மட்டும் போதுமா ?.... பணம் மட்டும் தேவைக்குத் தக்கபடி பெற்றான் இல்லை.

குடும்பம் வறுமையிலே உழன்று கொண்டிருந்தது. ரசிகர்கள் அளித்த பாராட்டும் உற்சாகமும் பகபதிக்கு இன்பம் ஊட்டின.

'' சபாவில் பைரவி ராகம் பல்லவி பாடினீர்களே! பிரமாதம்! பிரமாதம் !'' என்பார் ஓர் அன்பர். ''பகபதி ! உன் போன்ற இளம் வித்துவான்கள் உள்ளவரை நம் கர்நாடக சங்கீதம் நிச்சயம் தழைக்கும்.

சந்தேகமில்லை!'' என்பார் ஒரு பெரியவர். பூரித்துப் பெருமிதம் அடைவான் பகபதி. குடும்பத்தில் அடிக்கடி ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி ஆரம்பத்திலே அவனுக்கு அத்தனை பொருட்டாய்த் தோன்றவில்லை. நாளடைவில் சரியாகிவிடும் என்று நம்பிக்கையுடன் இருந்தான்.

திடீரென்று வாழ்விலே ஒரு திருப்பம்! கையிலே ஐந்நூறு ரூபாய் திடுதிப்பென்று வந்து விழுந்தால்? வலிய வரும் ஸ்ரீதேவியை உதறித் தள்ளுவார் உண்டோ? அன்று காலை பகபதி படுக்கையிலிருந்து எழுந்ததும் அவனுக்காக ஒரு நண்பர் இன்னொர் அன்பருடன் காத்திருப்பதைக் கண்டான்.

''பகபதி! ஒரு மகிழ்ச்சிச் செய்தி. நேற்று பாங்கர் கோவிந்தராஜ முதலியார் வீட்டில் உன் கச்சேரியைக் கேட்டவர் இவர். இவர் பிரபல சினிமா டைரக்டர் அர்ஜுன்சிங். உன் குரல் இனிமையிலே மயங்கி, உன்னைச் சினிமாவில் பாடுவதற்கு ஒப்பந்தம் செய்து கொள்ள வந்துள்ளார். இதோ, முன் பணம் ஐந்நூறு!'' என்று கூறினார் நண்பர்.

குடும்ப நிலையை ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தான் பகபதி. மறுகணம் டைரக்டர் நீட்டிய தாளில் கையெழுத்திட்டான்!

படங்கள் பகபதியின் பாடல்களுடன் வெளிவந்துகொண்டிருந்தன. மளமளவென்று அதே போலப் புதுப் புது மெட்டுக்களுடன் பகபதி பாடிய சினிமாப் பாடல்களும் மூலை முடுக்குகளெல்லாம் ஒலித்தன. குழந்தை முதல் வயோதிகர் வரை — பூக்காரி பங்காரு முதல் பள்ளி ஆசிரியை பங்கஜம் வரை— நாகரிக நங்கை முதல் நலங்கு பாடும் பெண் வரை — எல்லோரும் பகபதி பாடிய சினிமாப் பாடல்களை முணுமுணுத்தவண்ணம் இருந்தனர். அதிகம் சொல்லப் போனால், பெண் பார்க்க வரும் இளைஞர்கள், பெண்ணுக்குப் பகபதியின் சினிமாப் பாடல்கள் ஏதாவது பாடத் தெரியுமா என்று கேட்டார்கள்! தவிர, பகபதியின் சினிமா மெட்டுக்களை வாசிக்காத நாதசுர வித்துவான்களே இல்லை.

லட்சுமி கடாட்சம் நிறைந்து விட்டது பகபதியின் குடும்பத்திலே. படங்கள் சம்பந்தமாய் ரிக்கார்டிங்குகளுக்குச் செல்வதும், கச்சேரிகளுக்குச் செல்வதுமாக அவன் மூச்சு விடாமல் உழைத்துக் கொண்டிருந்தான். எப்போதாவது தப்பித் தவறி அவன் வீட்டில் கர்நாடக சங்கீத ராகங்களை முணுமுணுக்க நேர்ந்தால், அவனுடைய மனைவி மக்கள் கூட முகம் சுளித்தார்கள்.

திருமணங்கள், கோயில்கள், பொருட்காட்சிகள் மற்றும் பலதரப்பட்ட நிகழ்ச்சிகளில் பகபதியின் கச்சேரிகள் நடந்தன. அவனுடைய கச்சேரிகளில் ஒரு முக்கிய விசேஷம் என்னவெனில், முழுக்க முழுக்க சினிமாப் பாடல்களைத்தான் பாடினான்.

ஆரம்ப காலம் முதல் பகபதிக்குப் பக்க வாத்தியங்கள் வாசித்து வந்திருப்பவர்கள் நானும் பார்த்தசாரதியும்தான். நான் மிருதங்கம் வாசிப்பேன். பார்த்தசாரதி வயலின் வாசிப்பான். சுருக்கமாய்க் கூற வேண்டுமானால், நாங்கள் மூவரும் இளம் வயது முதல் ஒன்றாய் விளையாடியவர்கள். ஒருவருக்கொருவர் 'அடா புடா' போட்டுப் பேசிக் கொள்வது வழக்கம்.

பகபதி சினிமா உலகில் பிரகாசிக்கத் தொடங்கிய பின்பும்கூட, தன் பழைய பக்கமேளக்காரர்களையே தொடர்ந்து ஆதரித்தான். நட்புரிமையைக் காக்கும் உயர்ந்த பண்புக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

ஒரு சமயம் நாங்கள் சேலத்தில் கச்சேரி செய்து விட்டுத் திரும்பினோம். மூவரும் முதல் வகுப்பில் பிரயாணம் செய்தோம். பகபதியும் பார்த்தசாரதியும் படுத்ததும் தூங்கி விட்டார்கள். எனக்குத் தூக்கம் வரவில்லை. ஏதோ ஒரு பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன்.

''சார்!''

எதிர்ப்புறம் அமர்ந்திருக்கும் ஓர் அம்மாள் என்னை அழைத்தாள் என்பது தெரிந்தது.

''நீங்களா அழைத்தீர்கள்?'' என்றேன்.

''ஆமாம். நீங்கள் பகபதியின் கச்சேரியிலே.........''

''மிருதங்கம் வாசிப்பவன்!'' என்றேன்.

''பார்த்திருக்கிறேன். ஆமாம். இப்போது பகபதிக்குத் தொழில் நன்றாய் நடக்கிறது என்று தெரிகிறது!''

''என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? கடந்த இருபது தினங்களாய் ஒரு நாள் விடாமல் கச்சேரி! போங்கள்!'' என்று பெருமையுடன் கூறினேன்.

''உண்மைதான். ஆனால்......''

''என்ன? ஆனால் போடுகிறீர்கள்?'' புரியாமல் கேட்டேன் நான்.

''பகபதியைப் பற்றி ஒரு காலத்திலே கர்நாடக சங்கீத உலகம் பிரமாதமாய் எண்ணிக் கொண்டிருந்தது. ஹூம்!''

''என்ன அம்மா, நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள்? இப்போது மட்டும் என்ன? அவர் கர்நாடக சங்கீதத்தின் எதிரியாகி விட்டாரா? காசு இல்லாத வெறும் கலையினால் என்னம்மா சுகம்?'' என்று கேட்டேன்.

''காசு சம்பாதிக்க வேண்டாம் என்று யாரும் தடுக்கவில்லையே, சார்! இடை இடையே கர்நாடக சங்கீதத்தையும் கையாளக் கூடாதா என்ற தாபத்தினால் இதைக் கூறுகிறேன். இவர் இன்று இந்தப் புகழ் அடைந்ததற்கு அஸ்திவாரமாய் அமைந்ததே கர்நாடக சங்கீதப் பயிற்சி தானே? மறக்கலாமா அதை?''

''நீங்கள் கூறுவது ஒரு வகையில் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். ஆனால் மக்கள் எதை விரும்புகிறார்களோ, அதைத்தானே அவர்களுக்கு அளிக்க வேண்டும்?''

''மேடையிலே தன் கலைச் சுதந்திரத்தைக் காத்துக் கொள்ளத் தவறியவன் ஒரு கலைஞனா? எப்படி இவருடைய கலை உள்ளம் இதைச் சகிக்கிறது? கலைஞனுக்கு ஆத்மானுபவம் என்று ஒரு நிலை கிடையாதா? சரி, சரி நமக்கேன் இந்தத் தொல்லை? ஏதோ பகபதி தூங்குகிறார் என்பதால் உங்களிடம் கூறினேன். இதோ நான் இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது'' என்று கூறி, ஜோலார்ப் பேட்டையில் இறங்கிப் போய் விட்டாள் அந்த மாது.

என் மனம் ஏதோ வேதனையைச் சுமக்கத் தொடங்கியது. குடும்பத்திலே வறுமை நீங்கி விட்டது. ஆனால் கலையுள்ளத்திலே?

இதற்குப் பிறகு மூன்று கச்சேரிகள் ரத்து செய்யப்பட்டு விட்டன. ஏன்? சினிமா

ரிக்கார்டிங்குகளுக்கும் செல்ல மறுத்துவிட்டான் பகபதி. துணுக்குற்றோம் நானும் பார்த்தசாரதியும்; பதறினோம்.

''இதோ பாருங்கள். நான் என் மதியை இழந்தேன்.''

''என்னடா கூறுகிறாய் பகபதி?'' என்று கேட்டான் பார்த்தசாரதி.

''சீனு! அன்று ரயிலில் ஓர் அம்மாள் கூறியது முற்றிலும் நியாயமே! நான் மோசம் போய் விட்டேன்.''

''அட! நீ தூங்கவில்லையா? கேட்டுக் கொண்டிருந்தாயா?''

''ஆம். என் கலைச்சுதந்திரத்தை மேடையிலே இழந்துவிட்ட நானும் ஒரு கலைஞனா? சே! வெட்கம்!''

''இதோ பாருங்கள்! இதுதான் கடைசி முறை!'' என்று பகபதி கச்சேரிகளை எச்சரிக்கையுடன் ஒப்பேற்றினேன்.

நானும் பார்த்தசாரதியும் கெஞ்சிக் கூத்தாடி, அவனைத் தாஜா செய்து கைவசமுள்ள கச்சேரிகளை ஒருவாறு முடித்தோம்.

பணம், புகழ், பெருமை இவற்றால் அமுக்கப்பட்டு அதள பாதாளத்திலே கிடந்த கர்நாடக சங்கீதக் கலையார்வம் அந்தப் பெண்மணியின் ஒரு சொல்லால் தட்டி எழுப்பப்பட்டு வீறு கொண்டு எழுந்து விட்டதோ?

''பகபதி! நாளை திருத்தணி செட்டியார் வீட்டில் கச்சேரியல்லவா?'' என்றேன்.

''டேய்! என் உயிரை எடுக்காதே! எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும்'' என்று எரிந்து விழுந்தான் பகபதி.

''இதோ பார் பகபதி! உன் விருப்பத்தின்படியே பாட நான் செட்டியாரிடம் அனுமதி வாங்கித் தருகிறேன். உன் சுதந்திரம் பறி போகாமல்...''

''எனக்குக் கெட்ட கோபம் வரும். செட்டியார் என்னடா செய்வார்? ஜனங்களுக்குப் பிடித்த பாட்டைப் பாடுங்க ஐயா! எனக்கு என்ன தெரியும்? நான் எந்தச் சினிமாவுக்கும் போனவன் இல்லே என்பார். வேண்டாம் அப்பா! எனக்குக் கிடைத்த பணம் புகழ் எல்லாம் போதும். இனி நான் சினிமா உலகுக்கு ஒரு பெரிய முழுக்குப் போட்டுவிட்டு, பழையபடி...''

''...பழையபடி?''

''கர்நாடக சங்கீதத்துக்காக உழைப்போம். வருவாய் குறைந்தாலும் பரவாயில்லை. உண்மைக் கலையை வளர்ப்போம். பல சபாக்காரர்களுக்கு என் மீது கோபம் இப்போது. அவர்களுடைய கோபத்தைத் தணிப்பேன்!''

பகபதி பட உலகிலிருந்து விலகினான் என்ற செய்தி பெரும் பரபரப்பை உண்டாக்கியது.

பகபதிக்கு உள்ள கலையார்வம் எங்களுக்கு மட்டும் இல்லையா? அவன் முடிவு எங்கள் ஆதரவையும் பெற்றது என்பதைக் கூறத் தேவையில்லை.

ஒன்று நினைவுக்கு வந்தது எனக்கு. பகபதி சினிமா உலகிலே கொடி கட்டிப் பிரகாசித்த போது, சென்னையில் ஒரு பிரபல சங்கீத சபாவின் செயலாளர் நடராஜன் என்பவர் ஒரு சமயம் பகபதியைச் சந்தித்துத் தம் சபாவிலே ஒரு கச்சேரி செய்ய வேண்டும் என்று கேட்டார் ஒரு நிபந்தனையுடன்;









அதாவது சினிமாப் பாடல்கள் பாடக் கூடாது என்று. நடராஜனும் பசுபதிக்கு மிகவும் வேண்டியவர். ஆயினும் பசுபதி யினால் அவருடைய வேண்டுகோளை அப்போது நிறைவேற்ற முடியவில்லை. காரணம் சினிமா ரிக்கார்டிங்குகளும் வெளியூர்க் கச்சேரிகளும் தான். இப்போது அவருடைய வேண்டு கோளை நிறைவேற்றலாம் அல்லவா? என் கருத்தைப் பசுபதியிடம் வெளியிட்டபோது அவன் துள்ளிக் குதித்தான்.

"வா! இப்போதே அவரைச் சந்திப் போம்!" என்று அவன் தெரிவிக்க, இருவரும் கிளம்பினோம். செயலாளர் நடராஜன் எங்களை இன்முகம் காட்டி வரவேற்றார்.

"சார்! ஒரு மகிழ்ச்சிகரமான செய்தி!" என்று ஆரம்பித்தான் பசுபதி.

"அப்படியா? என்ன?" என்று கேட்டார் நடராஜன்.

"நமது சபாவில் கச்சேரி செய்யச் சம்மதம் தெரிவிக்க வந்திருக்கிறேன்! அடுத்த ஞாயிறே கச்சேரி வைத்துக் கொள்ளலாம். என்ன சொல்கிறீர்கள்?" என்று உற்சாகத்துடன் கூறினான் பசுபதி.

"அப்படியா? இப்போதுதான் உங்களுக்கு நேரம் கிடைத்தது போலிருக்கிறது. இருக் கட்டும், யோசித்துச் சொல்கிறேன்."

"என்ன ஸார்! என்னமோ இழுத்தாற் போல் பேசுகிறீர்கள்?"

"ஹி...ஹி... நான் சொல்கிறேனென்று தப்பா எடுத்துக் கொள்ளக் கூடாது. சினிமா உலகில் நீங்கள் ரொம்பப் பிரபலமா யிருந்த நாட்களில் நான் உங்களிடம் எங்கள் சபாவில் கர்நாடக சுத்தமான கச்சேரியை செய்யு மாறு ரொம்பவும் கேட்டுக் கொண்டேன். நீங்கள் ஓய்வில்லை என்று கூறி மறுத்துவிட் டீர்கள். இப்போது செய்கிறேன் என்கிறீர்கள். ஆனால் நாங்கள் கலெக்ஷனையும் யோசிக்க வேணுமல்லவா? நீங்கள் திரை உலகிலிருந்து ரிடையரான பிறகு உங்கள் மவுஸு குறைந்து போச்சே சார். முன்னைப் போல் வசூல் எதிர் பார்க்க முடியுமா? அதனால்தான் யோசிக்க வேண்டியிருக்கிறது" என்றார் செயலாளர்.

## நேசக் கரம்



## எங்கிருந்தோ வந்தார்?

எனக்குச் சற்றேறக்குறைய வயது பதினாறு இருக்கும். நான் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். வீடு அம்பத்தூர். பள்ளி சென்னை பிராட்வேயில். தினமும் இரயிலில் சென்று வருவது வழக்கம். என்னுடைய உபாத்தியாயர் களில் ஒருவரும் அம்பத்தூரில் சொந்த வீட்டில் இருந்தார். அவர் பள்ளி அருகில் ஒருவரிடம் பசு ஒன்று வாங்கினார். அதைக் குறைந்த செலவில் நம் பிக்கையானவர் மூலம் அம்பத்தூருக்கு அனுப்ப வேண்டும் என்ற எண்ணம். ஆதலால் என்னை அழைத்துப் பசுவை வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு போக வேண்டும், நீ இப்போதே வகுப்பை விட்டுப் போ என்று சொல்லி மாட்டையும் என்னோடு ஓட்டி அனுப்பிவிட்டார்.

என்னோடு துணை யாருமில்லை. அம்பத்தூரோ சென்னையிலிருந்து பத்து மைல். ஆதலால் சீக்கிரம் ஊர் போய்ச் சேர வேண்டுமே என்று இரயில்வே பாதை ஓரமாகவே ஓட்டிச் சென்றேன். மாலை சுமார் மணி 6-30 இருக்கும். கொரட்டூரைக் கடந்து வந்தேன். அப்போது மனம் பகீரென்றது. ஏரி நிறைந்த தண்ணீர். அதைக் கடக்க வாராவதியின் மேலுள்ள இரயில் பாதை மூலமாகத் தான் போக வேண்டும். பசு நீரிலும் இறங்காமல் வாராவதியின் மேலும் வராமல் முரண் செய்ய ஆரம்பித்தது. மாட்டை நன்றாக அடித்து இழுத்துக் கொண்டு வாராவதியின் மேல் போகும்போது நான்கு கால்களும் துவாரங் களில் இறங்கி மாடு மேலே எழுந்துகொள்ள முடியாமல் போய்விட்டது. நான் சிறுவன். என்னால் அதைத் தூக்க முடியவில்லை. அந்த வேளையில் சென்னையி லிருந்து கொச்சின் எக்ஸ்பிரஸுக்கு சிக்னல் கொடுத்தாகி விட்டது. இதைப் பார்த்தவுடன் என் கைகால்கள் நடுங்க ஆரம்பித்து விட்டன. பாவம், மாட்டை அப்படியே விட்டுவிட்டால் - நினைக்கவே குலைநடுங்கும். 'கடவுளே! கண்ணா எனக்கு ஏன் இந்தச் சோதனை? என்னைக் காப்பாற்ற மாட்டாயா?' என்று ஏங்கினேன். வில்லிவாக்கத்தை எக்ஸ்பிரஸ் தாண்டி விட்டது. அப்போது கடவுளே வந்த மாதிரி - இடுப்பிலே ஒரு துண்டும், தலையில் ஒரு துண்டும் கட்டிக்கொண்டு ஒருவர் வந்தார். என்னைப் பார்த்து என்ன, ஏது என்று ஒன்றுமே கேட்கவில்லை. 'வண்டி வருது. சீக்கிரம் நீ காலைப் பிடி. நான் தலையைப் பிடித்துத் தூக்குகிறேன்' என்றார். நான் ஒப்புக்குத்தான் பிடித் தேன். அப்படியே அவர் தூக்கி வாராவதியைத் தாண்டி விட்டுவிட்டார். நான் எப்படி நன்றி சொல்வதென்று தெரியாமல் கையெடுத்துக் கும்பிட்டு என் கையி லிருந்த எட்டணாவைக் கொடுக்கப் போனேன். 'எனக்கேம்பா பணம்?' என்று வாங்காமலே அருகிலிருந்த சவுக்குத் தோப்பில் சென்று மறைந்து விட்டார். சிறிது நேரத்தில் எக்ஸ்பிரஸ் வேகமாகச் சத்தத்துடன் என்னைக் கடந்து சென்றது.

— பூ. வி. சந்திரசேகரன், சென்னை – 6.

# வட்ட மேஜை

★ கந்தன் கருணை

★ சாதல் இல்லையேல் காதல்

★ ஒருமைப்பாடு எங்கே?

இலக்கிய தொடர் கந்தன் கருணையையும், ஹாஸ்யத் தொடர் 'சாதல் இல்லையேல் காதலே'யும் பாராட்டி வாசக நேயர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் வந்துள்ளன. அவற்றில் ஒருசிலவற்றை மட்டும் கீழே தந்துள்ளோம்.

— ஆசிரியர்

வானொலியில் செய்திகள் முடிவுறும் போது செய்திகளின் சாரம் என்று மீண்டும் நினைவுகூருவார்கள். அதுபோல் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களும் இறுதியில் கந்தன் கருணையின் சாரத்தை அமிர்தமாகத் தந்திருக்கிறார்கள்.

இத்தகைய அரிய தெய்வத் திருப்பணி செய்த திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் புரியும் திருப்பணிகள் வளர்க.

கழுகுமலை
4–2–66 வெ. கிருஷ்ணசாமி

'கந்தன் கருணை'யில் கடைசி அத்தியாயம் அனுதினமும் பாராயணத்துக்கு உரியது.... அட்டைப் படத்தைப் பிரேம் போட்டு எனது பூஜை அறையில் வைக்கலாம் என்றிருக்கிறேன்.

பொள்ளாச்சி
4–2–66 இ. பாலசுப்பிரமணியன்

பாரத நாட்டைக் கங்கை, யமுனை, ஸரஸ்வதி, காவேரி நதிகள் புனிதப்படுத்துவது போல் கல்கி பத்திரிகையில் சக்கரவர்த்தித் திருமகன், வியாஸர் விருந்து, பக்தி வயல், கந்தன் கருணை பிரசுரமாகிப் பத்திரிகையையும் வாசகர்களையும் புனிதப்படுத்திவிட்டன.

'சோ'வின் தொடர் நாடகம் நல்ல ஹாஸ்ய விருந்தாக அமைந்து விட்டது. குற்றமற்ற, இயற்கையான விரஸமில்லாத ஹாஸ்ய நடை.

ஜெகசிற்பியன் 'நச்சி'யை ஓர் அருமையான பாத்திரமாகச் சித்திரித்து வருகிறார்; குப்பையில் மாணிக்கங்கள் கிடப்பதை சார்லஸ் டிக்கன்ஸ் ஆலிவர் டிவிஸ்டில் சித்திரித்திருப்பது போல்.

புனா
4–2–66 ப. பசுபதி

நாடகத்தின் முடிவில், 'தமிழ் மக்களின் சார்பிலே கேட்டுக் கொள்கிறேன். இனிமேல் இந்த நாகராஜன்..... கவிதை எழுதாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு !' என்று சுரேஷ் மாலதியிடம் சொல்வது போல், 'தமிழ் மக்களின் சார்பிலே கேட்டுக் கொள்கிறேன்...... இனிமேல் இந்தச் 'சோ' அடிக்கடி 'கல்கி'யில் நாடகம் எழுதும்படி பார்த்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு!' என்று நான் ஆசிரியருக்குச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

பச்சாம்பாளையம்
3–2–66 மு. தவசியப்பன்

திரு 'சோ' தொடர்ந்து 'கல்கி'யில் எழுதுவதை விரும்புகிறோம்; எதிர்பார்க்கிறோம்.

பாக்கம்
3–2–66 மு. முத்துத்துரை

நகைச்சுவை எளிதில் எவரையும் கவர வல்லது; ஆழ்ந்த கருத்துக்களையும் தத்துவங்களையும்கூட இம்முறையில் எடுத்துச் சொன்னால் உள்ளத்தை ஊடுருவி என்றும் நிலைக்கச் செய்ய வல்லது.

ஆனால் ஏனோ இந்த நடையைக் கைக்கொள்ளக் கைவரப்பெற்றவர்கள்கூடத் தயக்கம் காட்டுகின்றனர். இலக்கியத்தின் ஒரு கூறான நகைச்சுவையை எழுதாமல் தவிர்ப்பது நல்ல முழுமை பெற்ற இலக்கியவளர்ச்சியைக் காட்டாது.

'சோ'வின் நகைச்சுவைத் தொடரை வெளியிட்ட 'கல்கி'க்கு வாழ்த்துக்கள்.

திருச்சிராப்பள்ளி
4–2–66 அ. சேக் அலாவுதீன்

தேசிய ஒருமைப்பாடு பற்றி மந்திரிகள் ஓயாது பேசி வருகின்றனர். நடைமுறையில் அவர்கள் இயற்றும் சட்டதிட்டங்கள் 'தாலுக்கா ஒருமைப்பாட்டு'க்குக்கூட வழியில்லாமல் செய்துவிடும் என்பதில் ஐயமில்லை.

அரிசி விஷயத்தை எடுத்துக் கொள்ளுவோம். எனது சொந்த ஊர், கோவை ஜில்லா, கணியூர். கடந்த ஒரு வாரமாக வடார்க்காடு மாவட்டத்தில் பல்வேறு ஊர்களைச் சென்று பார்த்தேன். எங்கும் நிறைய நல்ல கிச்சலிச் சம்பா அரிசி லிட்டர் எண்பது பைசா விலையில் கிடைக்கிறது. (சர்க்கார் நிர்ணயம் செய்த விலை 60 பைசா) ஆனால் இதே அரிசி எங்கள் பிராந்தியத்தில் லிட்டர் ரூ. 1.40க்கு விற்கிறது. ஒரே ராஜ்யத்தில் பலவேறு விதமான விலைகள். இப்படி மக்களுக்குப் பலவிதமான சோதனைகள்!

மக்கள் கிளர்ச்சிகள் நடத்திப் பல உயிர்கள் பலியான பிறகும், பொதுச் சொத்துக்கு நஷ்டம் ஏற்பட்ட பிறகும் தான் மத்திய சர்க்காரால் பிரச்னைகளை உணர முடிகிறது.

எங்கள் ஜில்லாவில் விளையும் பருத்திக்கும் உற்பத்தியாகும் துணிக்கும் கட்டுப்பாடு வந்தால் மற்ற ஜில்லாக்காரர்கள் ஆடையின்றித் தவிக்க நேரிடும்! அப்படி ஒரு சட்டம் வராது என்பது இந்தக் காங்கிரஸ் ஆட்சியில் என்ன நிச்சயம்?

கணியூர்
2–2–66 ஆர். சுப்பிரமணியன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

M&H M&H M&H M&H M&H M&H M&H

M&H




பைகோலட்ஸ்

பித்தநீர் சுரப்பை சரிப்படுத்தி
குடலை நன்கு இயக்கும். மலச்
சிக்கலைப் போக்க ஒரு சிறந்த

சமய சஞ்சீவி

**MARTIN & HARRIS**
**PRIVATE LTD.**
(MERCANTILE BUILDING, LALLBAZAR)
CALCUTTA-1

M&H M&H M&H M&H M&H M&H M&H

அழகிய சுருண்ட
கூந்தலின் இரகசியம்



காஸ்டரோல்!

சுத்த காஸ்டர் ஆயில்




கல்கத்தா கெமிகல் கோ லிட்.
கல்கத்தா-29

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

REGISTERED No. M. 4392 Registered as a Newspaper in Ceylon




# ENGINEERS' CUTTING TOOLS





"SUPREME WHERE CLOSE TOLERANCES ARE REQUIRED"






1873

At the Tool works of Addison & Company we have just one object—to be precise and to build tools which are highest in accuracy, in quality and in length of effective service.

- TWIST DRILLS • MILLING CUTTERS • REAMERS
- INVOLUTE GEAR CUTTERS • SLITTING SAWS
- GROUND THREAD TAPS • CARBIDE TIPPED TOOLS • TOOL HOLDER BITS

## ADDISON & COMPANY LIMITED
## MADRAS-2

*( A Member of the Gauge and Tool Makers' Association, U. K. )*

Distributors: J. N. Marshall & Co., Bombay - for Maharashtra & Gujarat States
William Jacks & Co., Ltd., Calcutta & Branches - for West Bengal, Uttar Pradesh Orissa, Bihar, Madhya Pradesh, Delhi, Andhra, Kerala, Punjab and allied areas.
Batliboi & Co., Private Limited, Madras & Coimbatore - for Madras State
Addison & Co., Limited, Bangalore - for Mysore State